# வாசகர் கண்ட வடிவழகி

(திருக்கோவையார் – தொகுதி : 1)

தவத்திரு தேமொழியார் சுவாமிகள்



அருட்பண்ணை

எழும்பூர் இல்லம்'

91, கெங்கு சாலைச் சந்து,

எழும்பூர், சென்னை – 600 008.

தொலைபேசி : 8262102, 8265687.

# வாசகர் கண்ட வடிவழகி

## (திருக்கோவையார் விளக்கம்)


தவத்திரு தேமொழியார் சுவாமிகள்


ஓவியம் : மணியம் செல்வன்


முதற் பதிப்பு : திருவள்ளுவர் ஆண்டு 2027
கார்த்திகை 22 – 7.12.1996.

உரிமை : அருட்பண்ணை

எழுத்து : 12 புள்ளி

பக்கங்கள் : 248

தாள் : 10.7

நூலளவு : கிரவுன்

கணினி அச்சு : விக்னேஷ் பிரிண்டர்ஸ்,
120 – பெல்ஸ் சாலை, சென்னை - 5.
✆ : 8544598

அச்சிட்டோர் : இராஜேஸ்வரி ஆப்செட் அச்சகம்
சென்னை – 600 005.
✆ : 835030

நூல் விலை : ரூ. 50–00

# "என்னைச் சிந்தியுங்கள் – பின் நூலைச் சிந்தியுங்கள்"

## தவத்திரு தேமொழியார் சுவாமிகள்

## வாழ்த்து

வாசகர் கண்ட வடிவழகியை அருட்பண்ணை வெளியிடுகின்றது. வடிவழகி, வாசகர் முன்னே அரங்கேற வருகின்றாள். வாசகராகிய நீங்கள் அவளோடு பழகலாம், படிக்கலாம், பண்பறிந்து ஒழுகலாம்.

இந்நூலை, முனைந்து முன்னின்று வைத்தமனம் வாங்காமல் இன்று உங்கள் முன் உலாவரச் செய்வோரின் உள்ளம் பெரியது. அந்த உள்ளத்திற்கு உரியவர் திரு. பு. மு. கிருஷ்ணமூர்த்தி ஆவர். நல்ல மரபில் வந்தவர். அவர் முயற்சிக்கு ஊக்கமளித்து உதவுவோர், மிகப்பெரிய கொடைமனம் படைத்தவர்கள், அத்துணை பேருக்கும் நமது அன்பும் வாழ்த்தும் என்றும் உரியது.

## வாழ்த்துவோன்

இளமை என்பது புது உதயம், பொங்கி எழும் புத்தொளி, ஆனால் அது எனக்கு அப்படி இல்லை. இன்னலின் இருப்பிடம். இடர் தரும் இருட்டறை. அதில் அகப்பட்டு அல்லல் படும்போதெல்லாம் ஆறுதல் தந்தது இயற்கை. அக மகிழச்செய்தது. இன்னலே பின்னர் பொன்னொளி பரப்பியது. இடரும் நான்பற்றிப் படரும் கொழு கொம்பாய் மாறியது. என்னுள் இனிய நாதம் ஒலித்தது. போதம் பிறந்து பொர்துளியது.

## மதிநிலை

அன்று முதல் பேதம் நீங்கியது. இயற்கை வேதம் ஓங்கி ஒலித்தது. உலகம் எனக்குப் புதுப் புதுப் பாடம் போதித்தது. அந்த நிறைவில் இறுமாந்திருந்தேன். அறிஞர்கள் சூழ்ந்தனர். அன்பர்கள் குவிந்தனர். என்னைப் பாராட்டி மகிழ்ந்தனர். பல்கால் உறவாடி ஊக்குவித்தனர். ஆயினும் என்னுள் நீடித்த நெருப்பாய் அறியாமை இருந்தது. அதை நான் அறியவில்லை. செருக்குற்றிருந்தேன்.

## அறிவுநிலை

இயற்கை அன்னையின் இனிய போதனையில் நெஞ்சம் மூழ்கிக் கிடந்த நேரம். அன்னையின் கருணை– என் மதி நுட்பத்தோடு நூல்நுட்பமும் சேர்த்துச் சிறப்பிக்க நினைத்தாள்.

## சந்திப்பு

காலம் கனிந்தது. பேராசிரியர் திரு. முருகவேள் அவர்களைச் சந்தித்தேன். அவர் திருமுன் அமர்ந்து முறையாகப் பாடம் கேட்கும் வாய்ப்புக் கிடைத்தது. 1958இல் 'திருக்கோவையார்' பாடம் நடத்தினார் கேட்டு மகிழ்ந்தேன். அடுத்தடுத்து சித்தாந்தப் பண்டிதர் திரு.இராம்நாத அடிகளாரும், மாம்பாக்கம் சிவத்திரு அழகரடிகளும் பாடம் நடத்தினர். மூவர் பாடத்திலும் மூழ்கித் திளைத்தேன். ஆயினும் என்னை முழுமையாகச் சிந்தனையில் ஆழ்த்தியது, சிவத்திரு அழகரடிகளாரின் பாடமே.

## பயிற்சி

சிந்தனைக் கிளர்ச்சியில் சிறகடித்த எனது உள்ளம் திருக்கோவையாரின் சீர்மைகளை நன்கு அறிய

விழைந்தது. பேராசிரியர் உரையும், பழைய உரை ஒன்றும் துணையாய் நின்ற பின்னர் 'திருக்கோவையார் உண்மை' என்ற பழமையான நூல் ஒன்றும் கிடைத்தது. அதைப் பயிலப் பயில, கங்குகரை காணா வெள்ளம் போல் உணர்ச்சி பெருகியது. உள் ஒளி விட்டு விட்டு இசைத்தது. இந்த உணர்வும் அனுபவமும் அஞ்ஞான வெளியைக் கடந்து 'மெய்ஞ்ஞான வெளியில் நின்று ஒன்றில் ஒன்றாகும் இயல்புடையோரும் அடையமுடியாத ஆனந்தத்தை இப்பனுவல் வழங்கியது என உணர்ந்தேன்.

## கோவையின் திறம்

ஞானத்தைப் பெற, சீவன் படும்பாட்டைக் கூறுவது **திருவாசகம்.** ஞானத்தையும் ஆனந்தத்தையும் சீவனுக்கு வழங்க ஆடும் பெருமான் படும் அல்லலைக் கூறுவது **திருக்கோவையார்.** மாணிக்கவாசகர் தாமே பாடியது திருவாசகம். இறைவன் பாடப்பணித்த பின் பாடியது திருக்கோவையார்.

இறைவன் உயிர்களுக்கு வழங்கிய அருங்கொடை தான் உலகப்படைப்பு. அத்தனையும் அற்புதம், அற்புதம். அறிவால் அறிய முற்படின் ஆனந்தம், ஆனந்தம். **இதில்– இறைவன் தலைவியாகவும் சீவன் தலைவனாகவும் உருவகம் செய்து பேசப்படுகிறது.** இது அனுபவ உருவகம்.

உலகில் விலங்கு மனத்தவர் ஏராளம், ஏராளம். விலங்குகள் பல வகை. ஒரு விலங்கைப் பிடிக்க, அதன் இனத்தையே பார்வை விலங்காகப் பயன்படுத்த வேண்டும். அந்த முறையில் இறைவன் தலைவியாகவும், சீவன் தலைவனாகவும் நிகழ்ந்துள்ளது.

இந்த நூலை முகத்துக் கண் கொண்டு படித்தால் அதன் உள்ளத்தையும் உணர்வையும் அறிய இயலாது.

அகத்துக் கண் கொண்டு படித்தால் ஆனந்தம், ஆனந்தம். அற்புத ஒளியாய்ப் பிறக்கும்.

இவை நானூறு பாடல்கள். அத்தனையும் 'கட்டளைக் கலித்துறை. பாடல் நேரசையில் தொடங்கினால்' அது இறைவன் அருளியக்கத்தை விரித்துரைக்கும். நிரையசையில் தொடங்கினால் உயிரின்' இடர் இயக்கத்தை விரித்துரைக்கும். நேர் என்பது இறைவன். நிரை என்பது சீவன். 'நாற்றத்தின் சீ நேரியாய்' என்பதாலும், 'நிறையுடையாய் குற்றம் ஒராய்' என்பதாலும் இவை விளங்கும்.

நானூறு பாடல்களிலும் தில்லையைப் பல வகைகளில் எடுத்தாள்வதும் மிக அற்புதம், அதை விரிக்கின் பெருகும்.

பரிபக்குவம் எய்திய ஆன்மாவையும் ஆட்கொண்டு ஆனந்தம் வழங்க வழி நடத்தும்போது ஆண்டவன் படும்பாட்டை மிக மிக நுட்பமாகவும் திட்பமாகவும் விளங்க விளக்குவதே இதன் திறம்.

## நூல்

பல இழைகளை இணைத்துத் திரித்தால் நூல் எனப்படும். அது மரத்தின் கோணலை நீக்கப் பயன்படும். அது போல செந்நாப் புலவன் செய்தநூல், நமது மனத்தின் கோணல் நீக்கும்.

அந்த இழைகளை இணைத்துத் திரிக்காமல் குறுக்கும், நெடுக்குமாகப் பின்னினால் ஆடையாகும். நடுங்கும் உடலுக்குப் போர்வையாகும். மானம் காக்கும். நல்லணி ஆகி அழகூட்டும்.

எனவே, நூல் என்பது உள்ளத்தையும், உயிரையும் தூய்மைப் படுத்துவது.

## இலக்கியம்

அகத்தூய்மை, அகப்புறத்தூய்மை ஆகிய இரண்டையும் செய்யவல்ல நூலுக்கு இலக்கியம் என்ற மற்றோர் பெயர் உண்டு. அந்த இலக்கியம், மூன்று கூறுகளை வெளிப்பட இயம்பும். அவை இயல், அழகு, நீதி என்பன. இதை –

**இலக்கியம் என்ப இயல்அழகு நீதி**
**இலக்காக இன்பம் தரின்**

என்பர் சான்றோர்

## உயர்நிலை

பிறப்பால் உயர்ந்தது மனித இனம். அதனினும் உயர்ந்தது அறிவால் அறிவை அறிவது. அதன் துணையால் அவன் இணையடி மலரைத் தலையில் சூட்டிக் கொள்ளுவது. இவை, உலகியலில் மிக மிக உயர் நிலை ஆகும். இதை நித்தியக் கடனாலும், நிலையாய ஊக்கத்தாலும் பெற இயலும்.

இகத்தில் பரத்தைப் பெற்று, பரத்தில் பரமாகும் நிலைதான் மிக மிக உயர்நிலை ஆகும். அதை வகுத்தும், தொகுத்தும் வாரி வழங்குவதால் உயிர் உயர்நிலை அடையும். அதை அடைவதற்கு அன்பும் அருளும் தேவை. இந்நூல் இதை நன்கு விளக்குகின்றது.

புறஇயல் நலத்தை அறிவாலும், அன்பாலும் அடையலாம். அக இயல் நலத்தை அன்பாலும், அருளாலும் அடையலாம். இவை இரண்டுமே நம்மை உயர்த்தும் பொருள் நலமாகும்.

இவை நானூறு துறைகளை உடையன. துறை என்பது புதுப்புது வரவின் நிலையமாகும். இந்நிலையம், பழையன கொடுத்துப் புதியன ஏற்கும் இயல்புடையதாகும்.

அகத்துறை என்றாலும், அருட்துறை என்றாலும் ஒன்றே. இத்துறையில் ஆண்டவன் கொண்டும், கொடுத்தும் குடி குடி ஆட்செய்வான்.

துறையை அடைவதற்கு, நெறியில் செல்ல வேண்டும். நெறி என்பது வழி அல்லது ஒழுக்கம் எனப் பொருட்படும்.

அகத்துறையில் **குறிஞ்சி** என்பது **ஞானநெறி** ஆகும். **முல்லை** என்பது **யோக நெறி** ஆகும். **மருதம்** என்பது **கிரியை** நெறி ஆகும். **நெய்தல்** என்பது **சரியை நெறி** ஆகும். இந்நெறியில் ஒழுகுவோர் அருட்துறையை அடைவர்.

குறிஞ்சி கூடுதலாகில் கலப்பு நிலை. முல்லை கூட இயலாத கலக்க நிலை. மருதம் வழங்கும் நிலை. நெய்தல் வரையறை நிலை. பாலை என்பது நமக்கில்லை. கலப்பு நிலையும், கலக்க நிலையும் தம் முறைமையில் மாறுமானால் பாலை என்ற பிறப்பு நிலைக்கு உயிர் தாழ்ந்துவிடும். மேற்கூறிய நிலைகளை எண்ணுதல், இணைத்தல், வழங்கல், எனவும் கொள்ளலாம். எண்ணுதலும், இணைத்தலும் நீங்கின் வாழ்வு பாலை ஆகும்.

## நிறை நிலை

'திருக்கோவையார்' நிறை நலம் பொதித்த ஒரு நூல் இவற்றுள் இலக்கண நலம், இலக்கிய நலம், தர்க்க நலம், முறைமை நலம், வேத நலம், ஆகம நலம், அதற்கு மேல் அறிவு நலம், அன்பு நலம், அருள் நலம், ஆற்றல் நலம் முதலியன பொதிந்து கிடக்கின்றன.

மாணிக்கவாசகர் பெருமான் மலர்வாய்ப் பிறந்த தேனின் தெள்ளமுதம். இதன் மாட்சி, எம்போல்வாரால் அளப்பரிது. அவன் அறிவித்த அளவில் அறிவிக்கும் பேறு கிடைத்தது. அதில் சில பாடல்களே, 'வாசகர் கண்ட வடிவழகியாக' உங்களைச் சந்திக்கிறது. அதை நீங்களும் சிந்திக்கலாம். திருவருள் முன் நிற்பதாக.

# தேமொழியார் சுவாமிகளுக்கு நல்வாழ்த்து

கவிஞர் இளம்பூரணன்

தாமநறுங் கொன்றையரா தண்ணிலவு
நதிதவழும் சடையி னான்சேர்
ஓமெனுஞ்சொற் பொருளுண்மை உலவாச்சீர்
உற்றத்தார் ஒளியின் ஆன்ற
பாமனுஞ்சீர்ச் சிவநெறியிப் பாரவர்தம்
உளங்கொள்ளப் பயிற்றும் சான்றோர்
தேமொழியார் சுவாமிகள்தம் சிறப்பியல்பைத்
தெரிந்துணர்வார் சீர்த்தி பெற்றார்.

மாமறையாம் வள்ளுவர்தம் வாய்மொழியின்
மாட்சிமைகள் அளந்து காட்டும்
சேமநிலை மாமறைநூல் பேசுபொருள்
ஈதென்றே சிறக்கப் போற்றிப்
பாமரரும் உண்மைநெறி பற்றியுளம்
மேம்படவே பயிற்று நூல்கள்
தேமொழியார் செப்புநலம் சிந்தையெலாம்
திறை கொள்ளும் செவ்வித் தாமால்!

என்கடன்றான் சிவப்பணிகள் என்றுமே
மறவாமை என்னும் வாய்ப்பில்
தந்நிகரில் அப்பர்பிரான் தவநெறிகள்
பின்பற்றும் சதுரர் எந்தக்
கன்மனமும் உருகிடவே கருதுசிவ
நெறியுரைக்கும் கடவா வாய்மைப்
பொன்மனத்துத் தேமொழியார் புகழெடுத்துப்
பேசுதற்கெம் நாட்கள் போதா.

வாதவூர்க் குருபரனார் மாணிக்க
வாசகர்தம் அருளி னாலே
போதமிகும் ஐந்திணையால் நாற்பொருளும்
புகட்டுதற்குப் புகன்ற சீர்த்தி
ஓதுதிருக் கோவையதன் உயர்கருத்தை
உலகவர்தாம் உணரும் வண்ணம்
மேதகவே அமெரிக்கா சென்றங்கும்
விளம்பியுளம் மகிழ்ந்தார் மேலோர்

காமஞ்சால் ஞானநூல் திருக்கோவை
யாரெனவே காட்டி யந்நாள்
தேமருவும் புலச்சான்றோர் குமரகுரு
பரர்பரவும் சிறந்த கோவைச்
சேமமிகும் பொருட்சிறப்பைச் செவ்விபெறத்
தேமொழியார் தெரிப்ப தேபோல்
யாமறிய நெடுநிலத்தில் யார்சொன்னார்?
எவருமிலை ஈதே உண்மை!

சென்னையிலும் பிறவிடத்தும் சென்றுதவச்
சிறப்புயரச் செம்மை நூல்கள்
இன்னருள்சேர் கருத்தனைத்தும் இன்மதுரச்
சொற்களினால் எவரும் போற்ற
மன்னிதய மகிழ்ச்சிகொளத் தேமொழியார்
வளர்க்குநெறி யவற்றால் மாந்தர்
பொன்மனத்தில் தூமறையாம் சிவநெறியே
போதமிக வளர்தல் காண்போம்!

அம்மையப்பர் திருவருளால் அன்புயரத்
தேமொழியார் அருள்சேர் வாழ்க்கை
செம்மைபெறச் சிறந்திடவும் செம்மலவர்
சிந்தைநலம் பெருகும் வாய்ப்பில்
தம்மதுரச் சொற்களினால் தகுமுறைசேர்
சிவநெறியித் தரணி யெங்கும்
விம்மிதங்கொள் நெறியினிலே விளங்கிடவும்
நினைந்துமன மேன்மை கொள்வாம்!

# பதிப்புரை

தமிழகத்தைப் பொருத்தவரை, வாழையைப் போன்று, நம்மை வாழ்வாங்கு வாழச் செய்யும் நூல்கள் பல உள.

அவற்றுள் தலையாயனவாயத் திகழ்வன இரண்டு. ஒன்று திருக்குறள்; மற்றது திருக்கோவையார்.

திருக்குறளை அறியாதார் எவரும் இலர்.

ஆனால், திருக்கோவையாரை அறிந்தோர் சிலரே.

அவருள்ளும் அதன் பொருளை உணரார் பலர். அது உணர்த்தும் உண்மைப் பொருளை உணர்ந்தோர், இந்நூலைசிரியரைப் போன்ற மிகச் சிலரே.

பலர் இதைக் காமநூல் என்பர். குமரகுருபர சுவாமிகளோ, காமம் சான்ற ஞானப் பனுவல் என்பார்.

காமம் என்ற சொல்லுக்கு, தவத்திரு தேமொழியார் சுவாமிகள் அளிக்கும் விளக்கமோ "நலங்கெடாமல் துய்க்கும் நிகழ்வு" என்பதாகும்.

அதனால்தான் தெய்வப் புலவர், "மலரினும் மெல்லிது காமம். சிலர் அதன் செவ்வி தலைப் படுவார்" என்றார்.

அச்சிலருள் ஒருவர்தாம், மணிவாசகப் பெருந்தகை. இவர்தம் அருளியல் அனுபவங்களே, வாழ்க்கை நெறிமுறைகளை விளக்கும் பொருட்டு, அற்புத நூலாக மலர்ந்தது.

அதுவே நாம் போற்றிப் பாதுகாக்கும் திருக்கோவையாராகும்.

இதில் ஒரு மாபெரும் புரட்சி செய்கிறார் மணிவாசகர். அனைவரும் இறைவனைத் தலைவனாகக் கொண்டு ஆன்மாவைப் பெண்ணுக்கு ஒப்பிடுவர்.

ஆனால், இவரோ உயிரைத் தலைவனாக்கி எல்லாம் வல்ல பரம்பொருளைத் தலைவியாக்கி அருமையான கருத்துக் கருவூலமாக அருளுகிறார் திருக்கோவையாரை.

இதன் அற்புத வாழ்வியல் செய்திகள், நம் வாழ்வில் இனிமையைத் தேக்கும். நலன்களை ஊட்டும், வாழ்வாங்கு வாழ நெறியான பாதையைக் காட்டும். பிறவிப் பயனைத் துய்க்க வைக்கும். நம்மை மற்றவர்க்கு வழிகாட்டியாய் இருக்கச் செய்யும்.

இவ்வுலக வாழ்க்கையை ஆதாரமாக்கி அருளியலை விளக்கும் பாங்கு மணிவாசகருக்கே உரியது.

இத்தகைய அரிய நூலிலுள்ள கருத்துகளைப் பாமரமக்களும் எளிதில் புரிந்து கொள்ளும் வகையில் நம் வாழ்வியற் புலவர் இந்நூலில் அழகாய், அதேசமயத்தில் ஆழமாய் மனத்தில் பதியும் வண்ணம் எளிய தமிழில் இனிய சொற்களால் விளக்கியுள்ளார்.

இவர்தம் விளக்கங்கள், நம் அன்றாட வாழ்க்கையை ஒட்டியே அமைந்திருப்பது மிக அருமை யானது.

சங்ககால இலக்கியங்கள் முதற்கொண்டு சமயசாத்திர நூல்களையும் இணைத்து, இலக்கணத்தையும் கலந்து எழில் கூட்டும் எடுத்துக்காட்டுகள் நம் உள்ளத்தில் எழுச்சியை உண்டாக்குகி.

தளர்ச்சியை நீக்குகின்றன. எந்நாளும் மகிழ்ச்சியில் திளைக்க வழிவகுக்கின்றன. நாம் பெற்ற பெரும்பேறே இவ்வருளாளர்தம் விளக்கங்கள்.

இந் நூலை வாங்கிப் பயனடைவதோடு இதுபோன்ற பல நூல்கள் வெளிவர ஆக்கமும் ஊக்கமும் தாரீர் எனப் பணிவன்புடன் கேட்டுக் கொள்கிறது அருட்பண்ணை.

இந்தத் தருணத்தில், தவத்திரு தேமொழியார் சுவாமிகளின் நூல்கள் தொடர்ந்து வெளிவருவதில் ஆர்வம் காட்டும் நல்லன்பர்களுக்கு நன்றி சொல்கிறோம்.

குறிப்பாக, சுவாமிகளின் பொழிவுகளை ஒலிப்பதிவு செய்வதை வாழ்வின் குறிக்கோளாய்க் கொண்டுள்ள பண்பாளர் ஏ. பாலசுந்தரம் –

தளராத அன்புடன் தட்டச்சு செய்துதவும் கோவிந்தராசன் –

ஐயாவின்அருமைமாணவர்புலவர்சி.வெசுந்தரம் –

சன்மார்க்கி பி.சாந்தகுமார் –

கவிஞர் மலர்மகன், கவிஞர் தாராபாரதி முதலான தூய உள்ளங்களின் அர்ப்பணிப்பு பாராட்டுக்குரியது.

மேலும் –

திருக்கோவையார் தொடர் சொற்பொழிவு 17.8.92 முதல் 22.8.92 வரை நிகழக் காரணமாயிருந்த ஒய்.எம்.சி.ஏ. பட்டி மன்றப் பொறுப்பாளர்களுக்கெல்லாம் இதயங் கனிந்து நன்றி தெரிவித்துக் கொள்கிறோம்.

அவர்களுடைய அணுக்க அன்பை என்றென்றும் இதயம் கொண்டிருப்போம்.

நன்றியுடன்,

**பு.மு. கிருஷ்ணமூர்த்தி**

(நிறுவனர் : அருட்பண்ணை)



| | | | |
|---|---|---|---|
| 1. | மாமறை பேசுகிறது – தொகுதி 1 | ... | ரூ. 22.00 |
| 2. | மாமறை பேசுகிறது – தொகுதி 2 | ... | ரூ. 20.00 |
| 3. | மாமறை பேசுகிறது – தொகுதி 3 | ... | ரூ. 23.00 |
| 4. | மாமறை பேசுகிறது – தொகுதி 4 | ... | ரூ. 36.00 |
| 5. | தேனருவி (சிவபுராணம்) | ... | ரூ. 60.00 |
| 6. | திருமந்திரம் – தொகுதி 1 | ... | ரூ. 52.00 |
| 7. | காழி வேந்தன் கருணை | ... | ரூ. 32.00 |
| 8. | தமிழ்நெறி | ... | ரூ. 06.00 |
| 9. | வாசகர் கண்ட வடிவழகி | ... | ரூ. 50.00 |
| 10. | உண்மை விளக்கம் | ... | ரூ. 75.00 |

கிடைக்குமிடம்:



# அருட்பண்ணை நூல்கள் விற்பனைக்குக் கிடைக்குமிடங்கள்

**ஆர்.சீனிவாசன்**
15, 2வது குறுக்குத் தெரு,
பாரதிதாசன் நகர், புதுவை – 605 001.

**எம்.இரவிச்சந்திரன் பி.ஏ., பி.எல்.**
9, ALC, காம்ப்ளக்ஸ்,
கடலூர் – 607 001.
(தொலைபேசி : 21010)

**டாக்டர் பி.எம். பாஸ்கரன் எம்.எஸ்.,**
ஜே.எம். மருத்துவமனை,
5, அல்லித்துறை சாலை,
திருச்சி – 620 017
(தொலைபேசி : 25369)

**டி.ஏ. சண்முகம்,**
செயலாளர், அருள்ஞானப்பெ பெருவெளி மன்றம்,
20, ஒற்றைவாடை பிராமணர் தெரு,
திருவத்திபுரம் – 604 407

**த. புண்ணியகோட்டி,**
4/43, அறிஞர் அண்ணா நகர்,
திருவத்திபுரம் – 604 407

**அருள்ஞானப் பெருவெளி அறக்கட்டளை,**
32, தேவதாஸ் தெரு,
வேதாசலம் நகர், செங்கற்பட்டு – 603 301

**ந. கணேசன்**
செயலாளர், சைதைத் தமிழ்ச் சங்கம்,
77, சுப்பிரமணிய முதலி தெரு,
சைதாப்பேட்டை, சென்னை – 600 015.

**டாக்டர். மா. பழனிவேலு**
செயலாளர், ஸ்ரீபால சைவ சுத்த சன்மார்க்க சங்கம்,
19, கலவை தெரு, சிந்தாதிரிப் பேட்டை,
சென்னை – 600 002.

ஓம்

# காணிக்கை

வாத வூரர் செய்கோவை
வழங்கும் ஞான வாழ்வியலை
ஏதம் இன்றி எடுத்துரைக்க
என்னுள் தோன்றித் துணையாகும்
நாதர் அழகர் அடிகளுக்கே
நயந்தே அளித்தோம் காணிக்கை
பாத மலரில் பரிசாக்கிப்
பரவிப் பணிந்து மகிழ்கின்றோம்.

ஓம்
திருச்சிற்றம்பலம்

**தென்னாடுடைய சிவனே போற்றி!**
**எந்நாட்டவர்க்கும் இறைவா போற்றி!!**
**அருட்பெருஞ்சோதி அருட்பெருஞ்சோதி!**
**தனிப்பெருங்கருணை அருட்பெருஞ்சோதி !!**

# இயற்கைப் புணர்ச்சி

## 1. ஒளியில் கலத்தல்

மெய்யன்பர்களே!

ஒரு நல்ல செய்தியைச் சிந்திக்கின்ற வாய்ப்புக் கிடைக்கின்றதே! அதையே ஒரு புண்ணியம் என்று எடுத்துக் கொள்ளலாம். அதைக் கேட்கின்ற ஒரு வாய்ப்புக் கிடைக்கின்றதே! அதுவும் ஒரு புண்ணியமே. ஆகவே, கேட்கின்றவர்க்கும், அதைச் சிந்திப்போர்க்கும் ஒரு புண்ணியம் இருக்கின்றது. அந்த நிலையிலே இன்று நாம் "மணிவாசகர் கண்ட வடிவழகியைப்" பற்றிச் சிந்திக்கப் போகின்றோம். நீங்கள் கேட்கப் போகின்றீர்கள்.

எல்லோருமே நாளும் ஒவ்வொரு காட்சிகளைப் பார்த்துக் கொண்டிருக்கின்றோம்; ஆனால் மணிவாசகப் பெருமான், தான்கண்ட காட்சியின் வடிவழகினைப் பற்றிச் சொல்லி இருக்கின்றார். சைவத் திருமுறையிலே எட்டாந் திருமுறையாக எண்ணப்படுபவை திருவாசகமும், திருக்கோவையாரும் ஆகும். அதில் திருக்கோவையாரை ஆதாரமாகக் கொண்டு அவர் கண்ட காட்சியின் வடிவழகினைப் பற்றிச் சிந்திக்கலாம் என்று எண்ணுகின்றேன்.

**'வாசகர் கண்ட வடிவழகி'** என்ற தலைப்பைக் கண்டவுடனே இவர் ஏதோ சொல்லப் போகிறார் என்று

எண்ணக் கூடும். வள்ளல் பெருமானும் முருகனைக் கண்டார். மாணிக்க வாசகப் பெருமானும் ஒரு வடிவழகைக் காணுகின்றார். கண்டகாட்சியின் அருளனுபவங்கள் திருக்கோவையாராக மலர்ந்துள்ளது.

திருக்கோவையாரைப் பற்றிய ஒரு செய்தியை நாம் முதன்மையாக எடுத்துக்கொள்ளவேண்டும். திருக்கோவை -யார் என்பதை, **திரு+கோவையார்** என்று பிரிக்க வேண்டும். திரு என்பது ஓர் அடைமொழி என்பது உங்களுக்கு எல்லாம் தெரியும். கோவையார் என்பது சிறப்புப் பெயர் பெற்றிருக்கின்றது. கோவையார் என்பதிலே, **கோ என்ற சொல், 'ஐ' என்ற இரண்டாம் வேற்றுமை உருபை ஏற்றுக்கோவை என வந்தது என்பதே** சாலப் பொருந்தும். கோவை என்று ஒரு சொல்லாகக் கொண்டு, கோர்வையாகச் சொன்னார் என்று சொல்வாரும் உளர். "பாவை பாடிய வாயால் கோவைப் பாடுக" எனப் பரமன் பணித்தான். ஆம்!

பாவை என்பது இறைவனை அடைவதற்காக சீவர்கள் எடுத்துக் கொள்ளுகின்ற முயற்சியும், அதனால் ஏற்படுகின்ற இடர்ப்பாடுகளையும் விளக்கிக் காட்டுகின்ற ஒரு தன்மை உடையது.

அதைப் பாடிய மணிவாசகப் பெருமானைப் பார்த்து எல்லாம் வல்ல பெருமான், "நீ உம்முடைய (சீவர்களின்) இயல்பை மட்டும் பாடினாயே, நான் உங்களையெல்லாம் ஈடேற்றுவதற்காக என்ன பாடுபடுகிறேன் என்பதைப் பற்றி யாரும் பாடவில்லையே. அதனால் நீ அதைப் பாடுக" என்று ஆணையிட, இவர் இந்தக் "கோவையைப்" பாடினார் என்று கொண்டால் நன்றாக இருக்கும். கோ - என்றால் தலைவன். தலைவனைப் பற்றிப் பாடிய பாடல்கள் என்று கொள்ளலாம். பிறகு அகத்துறை இலக்கணம் பொருந்திய வகையில், கோவையாகப் பாடுதல் என்ற ஒரு கருத்தும் புலவர் பெருமக்களால் வழக்கமாகச் சொல்லப்பட்டுக்கொண்டு வருகின்றது

என்பதையும் மனத்திலே கொள்ளலாம். அகத்துறையிலே இரண்டு கூறுகள் இருக்கின்றன.

**அகத்துறை**

ஒன்று அன்பு நிலை. மற்றொன்று அருள் நிலை. அன்பு நிலை வாராமல் அருள் நிலை பெறமுடியாது. 'அன்பு ஈன்ற குழந்தைதான் அருள்' என்று திருவள்ளுவர் சொல்லுகிறார். **அன்பு நிலை எய்தினால்தான் அருள் நிலைவரும்.** ஆகவே அகத்துறை என்று சொன்னவுடனே, அது ஏதோ தலைவன் தலைவியைப் பற்றிய, உடல் சம்பந்தமான செய்திகளைக் கூறுவதாகக் கொள்ளுவதற்கு இல்லை. இது **உயிருக்கும் உணர்வுக்கும் உள்ள சம்பந்தம் உயிர் என்பது இறைவன். உணர்வு என்பது சீவன்.** தலைவியை அன்பாக வைத்துக் கொண்டால், தலைவனை அருளாக வைத்துக்கொள்ள வேண்டும். அல்லது தலைவனை அன்பு நிலைக்கு வைத்துக் கொண்டால், தலைவியை அருளுடையவளாக வைத்துக் கொள்ள வேண்டும். இப்படி மாற்றிக் கொள்ளலாமா என்றால், கொள்ளலாம். அதற்கு மரபு இருக்கின்றது. யாருக்கு யார் அருள் புரிகின்றார்கள்? யார் யாரிடத்திலே அன்பு காட்டுகின்றார்கள்? இந்த இரண்டையும் பின்னிப் பிணைத்துக் கொண்டிருப்பது அகத்துறை.

**பொருள்**

இதைப் பொருளிலக்கணம் என்பர். அந்தப் பொருளும் இரண்டாகும். ஒன்று அகப்பெருள்; மற்றொன்று புறப்பொருள். அகப்பொருளில் 400 துறை; புறப்பெருளிலும் 400 துறை. இவை இரண்டும் இணைந்ததே பொருளிலக்கணம்.

**அகத்துறை என்பது அன்பையும், அருளையும் துணையாகக் கொண்டு ஆன்மா, ஆறுவகைப் பகைகளையும் அழித்து ஆனந்த நிலை எய்துவது.**

**புறத்துறை என்பது அறிவையும் ஆய்வையும் துணையாகக் கொண்டு புலன்களால் விளையும் பகைகளை அழித்து அமைதியுறுவது.**

**புறப்பகையையும் அகப்பகையையும் அழித்து ஆன்மாவை இகத்திலும் பரத்திலும் இன்பமுறச் செய்வதே பொருளாகும்.**

**பொருள்நிலை**

**பொருள் என்பது உயர்த்துவது. அகப்பொருள் என்றால் ஆன்மாவை உயர்த்துவது. புறப்பொருள் என்றால் உலகியல் வாழ்க்கையை உயர்த்துவது.** இரண்டுமே உயர்த்துவதுதான். புறம் – போர்ச் செய்திகளையும், அகம் – காதல் செய்திகளையும் அன்றோ என்று ஐயம் எழும். போர் என்ற இடத்தில் கூட, வாழ்க்கைக்குப் பொருந்தாதவற்றைப் போக்கி, பொருந்து வனவற்றில் பொருந்தச் செய்வதே போர் என்று தெளிய வேண்டும். நல்லனவற்றைப் போக்குவதற்கும், அல்லன வற்றைச் சேர்த்துக் கொள்ளுவதற்கும் எழுவதை, போர் என்று கொள்ளக் கூடாது. ஆகையாலே போர் என்பது, பகையை அழித்து, வாழ்க்கைக்குப் பொருந்தாத சூழலை அகற்றி, பொருந்துகின்ற சூழலை உருவாக்குவதற்காக எழுவதுதான்.

**அப்படியே அகப் பகைகளைப் போக்கி, அன்பியல் வாழ்க்கையைத் துவக்கி அருளியலிலே தோய்வதற்கு வேண்டிய அடிப்படையை வகுப்பதுதான் அகத்துறை இலக்கணப் பொருள்.**

திருக்கோவையார் அகத்துறையைப் பற்றிச் சொல்லுவது. அதனால் இடையிடையே அதைப் பற்றிச் சொல்ல விழைவேன். திருக்கோவையார் மணிவாசகப் பெருமானுக்குக் கண்ணிலே பட்ட ஓர் அருமையான காட்சி. அந்தக் காட்சியை அவர் நமக்குச் சொல்லப் போகின்றார்.

**காட்சியின் கலப்பு**

காட்சி முதல், பாங்கியறிதல் ஈறாக 18 துறைகள் முதற்பகுதியில் அமைகின்றன. அதற்கு இயற்கைப் புணர்ச்சி என்று தலைப்பிட்டார். இயல்பாகக் கலந்து கொள்ளுகின்ற ஒரு நிலையை இயற்கைப் புணர்ச்சி என்பர். ஒரு பொருளில் இன்னொரு பொருள் கலந்து நலம் பெறவேண்டும். அத்தகைய நலம் பெறும் இயல்பான கலப்பு 18 வகைப்படும். 18 வகையிலும் இயல்பாகக் கலப்பதே இயற்கைப் புணர்ச்சி என நாம் உணர வேண்டும்.

குறிப்பாக அரிச்சுவடி படிக்கின்ற பிள்ளைகளுக்கு ஆசிரியன்மார் உயிரீற்றுப் புணர்ச்சியியல், மெய்யீற்றுப் புணர்ச்சியல் எனப் பலவகைப் புணர்ச்சிகளையும் சொல்லிக் கொடுப்பர். அதுவே இயற்கைப் புணர்ச்சியாகும்.

இயற்கை என்பது என்ன? செயற்கை என்பது என்ன? இயற்கை என்பது நன்மையானது; தீமை யில்லாதது, மயக்கம் அறுப்பது. செயற்கை என்பது நன்மையல்லாதது, தீமையை விளைவிப்பது, மயக்கம் தருவது என்று பொருளாகும்.

இந்த இயற்கை, செயற்கையைப் பற்றிச் சொல்லப் புகுகின்றபோது இயற்கையைத்தான் இந்த நாட்டிலே சைவம் என்று சொன்னார்கள். இயற்கை அல்லாதது சைவமன்று என்று முடிவு செய்திருக்கின்றார்கள். சைவம் என்பது ஒரு சமயம் அன்று. சைவம் என்பது ஒரு நன்மை, ஒரு தெளிவு, ஒரு இயற்கை, வாழ்க்கை முறை, வாழ்வாங்கு வாழும் முறை அவ்வளவுதான். அன்பு சைவநிலை. அவா அசைவநிலை. அன்பு பிறர்கென வாழ்வது. அவா தனக்கென வாழ்வது. சைவம் சமயம் அன்று. அதைச் சமயமாகக் கொண்டது பிற்காலத்தில்.

முன்னே அப்படியன்று. இதைப் பற்றிய செய்தி-களையெல்லாம் அறிஞர் பெருமக்களிடத்திலே தெரிந்து

கொள்ளலாம். அதைப் பற்றிய நூல்களெல்லாம் இருக்கின்றன. அதைப் பின்னர் சுட்டிக் காட்டுகின்றேன். இப்போது இந்த இயற்கை என்பது என்ன என்று பார்ப்போம்.

## இயற்கை நிலை

இயற்கை என்பது நம்முடைய கண்ணுக்குப் புலனாகும் பஞ்ச பூதங்களே. அந்தப் பஞ்ச பூதங்கள் பருப்பொருள்களாக நமக்குக் காட்சியளித்துக் கொண்டிருக்-கின்றன. பஞ்ச பூதங்களின் உள்ளே ஊடுருவி பண்புகள் நிறைந்து இருக்கின்றன. அவற்றுள் பயன்களும் பொதிந்து இருக்கின்றன. அதுவாகின்ற தன்மையும் இருக்கின்றது.

1) பருநிலைப் பொருள், 2) நுண்நிலைப் பொருள், 3) மிகு நுண்நிலைப் பொருள் 4) காணமுடியாத பொருள் அல்லது காட்டலாகாப் பொருள் என்று இயற்கையிலே அமைந்து இருக்கின்றது. அந்த இயற்கை பண்டமாகவும், பண்பாகவும், பசையாகவும், பயனாகவும் உள்ளது. **இவை அனைத்திலும் அவற்றின் இயல்புகளைச் சிதைக்காமல் கலந்து கொள்வதே இயற்கைப் புணர்ச்சி எனப்படும்.**

பண்டத்தில் கலந்தால் அறிவு கிடைக்கும். பண்பில் கலந்தால் அன்பு கிடைக்கும். பசையில் கலந்தால் அருள் கிடைக்கும்; பயனில் கலந்தால் ஆனந்தம் கிடைக்கும்.

## இயற்கைப் புணர்ச்சி

அந்த இயற்கைப் புணர்ச்சியே கூட நம்முடைய கண்ணுக்கு ஒரு வகையாகவும் மணிவாசகப் பெருமானு-டைய கண்ணுக்கு ஒரு வகையாகவும் தோன்றுகின்றது. எப்படித் தோன்றுகின்றது என்பதைப் பார்ப்போம். நாம் இந்தத் தண்ணீரைப் பார்க்கிறோம். இதை எடுத்துத் தாகத்தைத் தணித்துக் கொள்ளப் பருகுகிறோம். ஆனால் பெரியவர்கள் இந்தத் தண்ணீரைத் 'தண்ணீர்' என்று எண்ணுவதில்லை. அதை எடுக்கின்றபோதே இந்தத் தண்ணீர் இல்லை என்றால் உயிர் தழைக்காது, உலகம்

தழைக்காது, எல்லாம் தழைக்காமல் தடைப்பட்டுவிடும், அத்தனையும் தழைக்க இந்தத் தண்ணீர் ஆதாரமல்லவா? அதனாலே அதைத் தண்ணீர் என்று சொல்லக்கூடாது. என்னவென்று சொல்லலாம்? அதை அமிழ்தம் என்று சொல்ல வேண்டும். இந்த உண்மையைத் தான் "அமிழ்தம் என்று உணரற்பாற்று" என்றது பொதுமறை.

சராசரி மக்களுடைய கண்ணோட்டத்திற்கும், வளர்ந்த சீவனுக்கு உள்ள கண்ணோட்டத்திற்கும் வேறுபாடு இருக்கின்றது. வளர்ச்சி இல்லையென்று சொன்னால் அவர்கள் காணுகின்ற காட்சிகள் வேறாக இருக்கும். அதனாலே நம் பெரியவர்கள் நமக்குச் சொல்லுகின்றபோது வளர்ச்சிக்குரிய சில செய்திகளைச் சொல்லியிருக்கின்றார்கள். அந்தச் செய்திகள் என்ன?

அது என்ன என்றால் நமக்கு ஒரு வரையறை வேண்டும். அந்த வரையறையை ம்நெறிஅ என்று சொன்னார்கள். நெறியில் நின்று ஒழுகினாலன்றி ஒழுகலாறு நிலைபெறாது. ஒழுகலாறு நிலைபெறாத வழி தூய்மை நமக்குக் கிடைக்காது. தூய்மை இல்லாத வழி இயற்கையோடு கலக்கமுடியாது. இயற்கையோடு நம்மால் கலக்க முடியாதபோது, பேரானந்தமும் நமக்குக் கிடைக்க வழியில்லை. ஆகையாலே பேரானந்தமாகப்பட்ட பேரின்பம் நமக்குக் கிடைக்க வேண்டுமென்று சொன்னால் படிமுறையிலே ஒழுகி வளரவேண்டும். சிறிது நேரமே இருந்து மறைகின்ற இன்பங்கள் வேண்டு மென்று சொன்னால் எந்த ஒழுகலாறும் தேவையில்லை. ஒழுகலாறு இல்லாமல் துய்ப்பதைச் சிற்றின்பம் என்றும், ஒழுகலாற்றில் நின்று, வரையறையில் இருந்து விலகாமல் துய்ப்பதைப் பேரின்பம் என்றும் பாகுபடுத்தினர். சிறிது நேரம் இருந்து மறைந்துவிடுவதற்குச் சிற்றின்பம் அல்லது புலனின்பம் என்று பெயர். பெயராது என்றும் நிலைத்து இருப்பதற்குப் பேர்ானந்தம் அல்லது பேரின்பம் என்று பெயர் வைத்தார்கள். இதற்கு உதாரணம் பெண் பார்த்தல், உறுதி செய்தல், மணம் முடித்தல், கலந்து மகிழ்தல் இதையே

சரியை, கிரியை, யோகம், ஞானம் என்றனர். இதுவே திருமணம் என்றும், இயல்புடைய வாழ்வென்றும் கூறினர். இதனால் அடைவது பேரின்பம்.

இந்நால்வகையுமின்றி கலந்துபழகுவது மண இன்பமன்று. பிண இன்பமென்றே பெயர். இதை புக்க இடத்தச்சம், போதரும்போதச்சம், துய்க்குமிடத்தச்சம் என்று கூறினர். எனவே இது சிற்றின்பம்.

பேரானந்தப் பொருளைத் தன்னகத்தே வைத்து அனுபவித்த மணிவாசகப் பெருமான் அவர் கண்ட காட்சியை நமக்குக் காட்டுகின்றார். அதுதான்–

## 'வாசகர் கண்ட வடிவழகி'

அந்த இயற்கைப் புணர்ச்சியில் நாம் எப்படியிருக்க வேண்டும்? நாம் எப்படி இயற்கையோடு கலந்து கொள்ளுவது? என்பதைச் சற்றுச் சிந்திப்போம்.

**பழக்க நிலை**

மண்ணோடும், நீரோடும், நெருப்போடும், காற்றோடும், வானோடும் கலந்து பழக வேண்டும். அதற்கு மேல் உள்ளதை அப்புறம் பார்க்கலாம். இந்த ஐந்தினோடும் கலந்து பழகினால்தான் நமக்கு அந்த இயற்கை நலம் சித்திக்கும். எப்படிப் பழகுவது என்று நமக்குத் தெரியவில்லை.

மண்ணைப் பார்த்துக் கொண்டிருக்கிறோமே தவிர, அதனோடு பழகத் தெரியவில்லை. அதனோடு பழகினால் என்ன வரும்? நல்லாரோடு பழகினால் நல்ல எண்ணம் வரும். அல்லாரோடு பழகினால் அல்லாத எண்ணங்கள் வரும். இந்த மண்ணோடு பழகினால் அதன் தன்மை நம்மிடத்திலே அமைதல் வேண்டும்.

**மண்ணின் தன்மையாகிய பொறுமை, திண்மை என்ற இந்த இரண்டு தன்மைகளும் மண்ணோடு பழகியார்க்கு வருதல் வேண்டும்.**

அடுத்து நீரோடு பழகுகின்றபோது நெகிழ்ச்சி, குளிர்ச்சி என்ற இரண்டு தன்மைகள் நம்மிடத்திலே வருதல் வேண்டும்.

நெருப்போடு பழகுகின்றபோது, தூய்மையாய் இருத்தல், தூய்மை செய்தல் என்ற இரண்டு தன்மைகள் நம்மிடத்திலே வருதல் வேண்டும். நெருப்போடு பழகுவது என்றால் அதனோடு பழக முடியுமா? பழகுவது என்றால், நெருப்பு எப்படித் தானும் தூய்மையாய் இருந்து, தன்னிடம் வந்த பொருள்களையும் தூய்மை செய்கின்றதோ, அப்படி நாமும் வாழப் பழக வேண்டும்.

காற்று நாலாபக்கங்களிலும் வீசுகின்றது. அப்படியே நாமும் சுறுசுறுப்பாக இருக்கவேண்டும். எல்லாப் பொருள்களையும் ஒருமிக்கத் திரட்டுகின்ற முயற்சி வேண்டும். அப்படி இருந்தால் காற்றின் பண்புகள் நம்மிடம் படிந்து இருக்கின்றன என்று பொருள்.

வானம் எப்படிப் பேதமற்று, எங்கும் பரவி, எல்லாவற்றிலும் ஊடுருவி நிற்கின்றதோ அப்படி நம்முடைய சிந்தனைகள் இருக்கவேண்டும்.

இப்படி இயற்கையோடு பழகினால், அதற்கு இயற்கையில் கலத்தல் என்று பெயர். இப்படி இயற்கையில் கலந்து, பழகிப் பெற்ற அனுபவத்திற்குப் பிறகுதான், நமக்கு ஒரு உபதேசம் கிடைக்கும். அந்த உபதேசம்தான் ஆன்மாவை உயர்த்தும். அதுவரையிலும் ஐந்து நிலையிலேயே பழகிக் கொண்டிருக்க வேண்டும்.

இதைத்தான் திருவள்ளுவர் சொன்னாரோ என்று எனக்கு ஒர் ஐயம் வருகின்றது.

"ஐயுணர்வு எய்தியக் கண்ணும் பயனின்றே
மெய்யுணர்வு இல்லா தவர்க்கு." 354

ஐந்திலும் மெய்யுணர்வைப் பெறுகின்ற ஒரு பயிற்சியைப் பெறவேண்டும். அதனாலே பழகுகின்ற பழக்கத்திலே, "பழக்கம் தவிர்க்கின்ற பழக்கம் வேண்டும்."

உலகத்தைப் பார்க்கின்றபோது, அதை மண்ணாகப் பார்க்காமல் அதன் பண்புகளைப் பார்க்கப் பழக வேண்டும். பிறகு அப் பண்புகளை நாம் மேற்கொண்டால் அது ஒழுகலாறு ஆகும். ஆகையால் பெரியவர்கள் என்ன செய்தார்கள் என்றால் இவற்றையெல்லாம் நெறியென்று வைத்தார்கள். நெறி என்பது எல்லோரும் ஏற்றுக் கொள்ளுவது போல நம்முடைய வாழ்க்கையை அமைத்துக் கொள்ளவேண்டும். அதனாலே நம்முடைய பெரியவர்கள் வரலாற்றைப் பற்றிச் சொல்ல வருகின்றபோது ஒரு கருத்தைச் சொன்னார்கள்.

**"வேதநெறி தழைத்தோங்க மிகுசைவத் துறை விளங்கப்**
**பூதபரம் பரைபொலியப் புனிதவாய் மலர்ந்தழுத**
**சீதவள வயற்புகலித் திருஞானசம்பந்தர்**
**பாதமலர் தலைக்கொண்டு திருத்தொண்டு பரவுவாம்"**

என்று சொன்னார். இதைப் பற்றிய பல்வேறு வகையான சிந்தனைகள் உண்டு. வேத நெறி என்னும் போது பலப்பல சிந்தனைகள். அவர் வாழ்நாளிலே நாடு முழுதும் சென்று பரப்பிய நெறி சைவ நெறி. இந்தச் சைவ நெறியின் விரிவுதான் மிகுசைவத் துறை. சைவ நெறியே வேத நெறி என்று சொல்லுகின்றார். அது நால்வகை நெறி. அவை - 1) சரியை, 2) கிரியை, 3) யோகம், 4) ஞானம் என்பதாகும். அந்நால்வகை நெறியைப் பரப்பத்தான் திருஞானசம்பந்தப் பெருமான் கையிலே தாளம் ஏந்தி நாடு முழுதும் பயணம் செய்தார். அந்நெறி தழைக்கவும், சைவத்துறை விளங்கவும்தான் அவர் வந்தார்.

சைவத்துறை என்பது அருள்நலம் புரிகின்ற வாயில். சைவநெறி என்பது அன்புநெறி தழைக்கின்ற வாயில். அருள் நலம் பொழிகின்ற வாயிலாக இருப்பது சைவத் துறைதான். அந்தச் சைவத் துறையானது 400 துறைகளாக விரிந்தது. அதற்கு முறை என்று பெயர். அவை ஒன்றன் பின் ஒன்றாக முறையாக இயங்குவதால் முறை என்று பெயர் பெற்றது. அவற்றை இங்கே 400 துறைகளாக வைத்தார் மணிவாசகப் பெருமான்.

## நெறியும் துறையும்

துறை என்பது அருளுக்கும், நெறி என்பது படி நிலைக்கும் வைத்தார்கள். இந்த இரண்டிலே நான்கு நெறியிலே நின்று ஒழுகிய மணிவாசகப் பெருமான் சைவத்துறையிலே இறங்குவதற்கு முன் ஒரு காட்சியை விளக்குவார்.

இதைப் பற்றியெல்லாம் நிறையச் சொல்லலாம். நான்கு நெறிகள் என்றால் என்ன? நான்கு நெறிகள் என்று ஏன் வைத்தார்கள்? நான்கு நெறிகள் நின்றார்க்குப் பதினாறு ஒழுக்கங்கள் அமையும். பதினாறு ஒழுக்கங்கள் அமைந்தார்க்குச் சைவத் துறை கைகூடும். சைவத் துறையிலே தோய்ந்தார்க்குத் திருவருள் சித்திக்கும். இது சுருக்கமான செய்தி.

## துறை நிலை

இடரில்லாத தெளிவான நடைமுறையே நெறி எனப்படும். அதை நான்காக வைத்தார்கள். **நினைப்புத் தூய்மை, மொழித்தூய்மை, செயல்தூய்மை, ஈகைத்தூய்மை** என நெறிகள் நான்காகும். இந்நான்கு நெறிகளில் ஒழுகினாலன்றி, ஆன்மா உய்வு பெறாது. சிக்கறுத்து, செழுமை கூட்டி, மலமறுப்பது 16 ஒழுக்கம் அல்லது பண்பு எனப்படும். இவற்றைச் சித்தியார்,

> **"ஒழுக்கம் அன்பு அருள் ஆசாரம் உபசாரம் உறவு சீலம்**
> **வழுக்கிலாத் தவம் தானங்கள் வந்தித்தல் வணங்கல் வாய்மை**
> **அழுக்கிலாத் துறவு அடக்கம் அறிவொடு அர்ச்சித்தல் ஆதி**
> **இழுக்கிலா அறங்களானால் இரங்குவான் பணியறங்கள்"**

என்று வரையறுக்கும். மூழ்கி, திளைத்து, முழுநலம் காண்பது துறையாகும். இவை மூன்றும் முறையாக நிகழாத போது ஆன்மா இப்பிறவியின் பயனை அடையாது.

## நெறி நிலை

நான்கு நெறியில் ஒழுகி நிறைந்தவர்கள் ஆண் மக்கள். நான்கையும் கடந்து பதினாறு சீலங்கள் நிறைந்தவர்கள் பெண் மக்கள். ஆண்மையில் பெண்மை நிறைந்த போதுதான் அருட்துறை முன்னிற்கும். அதன் முதல்நிலையே காட்சியெனப்படும்.

இதற்கு அடையாளமாக ஆண்களுக்கு நான்கு முழத் துணியும் பெண் மக்களுக்கு 16 முழத்துணியும் அணியாக வைத்தார்கள்.

அப்படி நான்கு நெறியில் நின்று பதினாறு சீலங்களை மேற்கொண்டு ஒழுகி அதற்கு மேல் நின்ற நிலையிலே மனம் தூய்மைப்பட்டபோது காணுகின்ற காட்சிக்குக் 'காட்சி' என்று பெயர் சொன்னார்கள். இந்தக் காட்சி எப்போது தெரியும்? எப்படித் தெரியும்?

காட்சியைப் பலவாறு சொல்லியிருக்கின்றார்கள். காட்சியை அனந்தம் என்று சொல்லிவிடலாம். அளவிலாத காட்சிகள். அதை ஒரு அளவுபடுத்தலாம். எதையும் அளவுபடுத்தி, பிறகு அனந்தம் என்றுச் சொல்லுவது நம்முடைய மரபு; வழக்கு.

மணிவாசகர் காமத்தைப் போதிப்பது போல் ஞானத்தைப் போதிப்பார். உலகியலார்க்குக் காமம். அருளியலார்க்கு ஞானம். இதைப் பற்றியெல்லாம் பாயிரங்கள் பாடப்பட்டிருக்கின்றன. என்னுடைய ஆசிரியர் அவர்களே ஒரு நூல் எழுதியிருக்கின்றார்கள். அதற்குக் "காமம் சார்ந்த ஞானப்பனுவல்" என்ற தலைப்பிடப்பட்டுள்ளது. அது மிகவும் அருமையான நூல்.

## கோவையின் பயன்

ஒவ்வொரு துறையும் உலகியலைக் கூறுவதுபோலக் கூறி அருளியல் நலங்களை விளக்குவதாகும். அப்படி விளக்கக் காரணம் உலகியல் நலங்களில் வாழ்வியல் நலமே மிகவும் உயர்ந்தது. அக இயல் வாழ்க்கையில்

அருளியல் நலமே மிக மேலானது. உலகியல் நலம் பொறி புலன்களால் நுகர்ந்து அறிவது. அறிவிக்க ஏதுவானது. அருளியல் நலம் பொறி புலன்களைக் கடந்து; உணர்வையும் கடந்த உணர்வுடையது. உணர்ந்தாரும் மீண்டும் உணர்வது அரிது; உணர்த்துவதும் அரிது. எனவேதான் உணர்ந்து உணர்த்தும் வாழ்வியலை அடிப்படையாகக் கொண்டு உணர்ந்தும் உணர்த்த இயலாத அருளியலை விளக்கிக் கூறுகின்றது இத்திருக் கோவையார்.

இதை வேதமென்பார் சிலர். ஆகமம் என்பார் அதற்குரியர். எழுத்தென்பார் சிலர். இது தர்க்கம் என்றும் சொல்லுவார்கள். இவற்றையெல்லாம் நாம் விட்டுவிட வேண்டும். நமக்கு எந்தச் சிந்தனைகள் வருகின்றனவோ அதைத்தான் நாம் சொல்லவேண்டும். இதற்கு உரைகள் பல. பேராசிரியர் உரை கண்டிருக்கிறார். பிறகு பெயர் தெரியாத சிலர் உரை கண்டிருக்கிறார்கள். அதல்லாமல் "திருக்கோவையார் உண்மை" என்ற ஒரு நூலைச் செய்திருக்கின்றார்கள். அதுவும் யார் செய்திருக் கின்றார்கள் என்ற உண்மை தெரியவில்லை. அண்மைக் காலத்திலே பெருமழைப் புலவர் முழுமையாக உரை யெழுதியிருக்கின்றார். என்னுடைய ஆசிரியர் முருகவேள் ஐயா அவர்கள் பொழிப்புரை எழுதியிருக்கிறார்கள். இதெல்லாம் உங்களுக்குத் தெரியவேண்டும் என்பதற்காகச் சொல்லுகிறேன். இதற்கு மேலும் விளக்கம் தேவைப்படுவதாலே இந்தச் செய்திகளை எடுத்துக் கொண்டு விளக்க வேண்டியிருக்கின்றது. ஏன் என்றால் விளக்கம் என்பது நாளுக்கு நாள் சிந்தித்து, அனுபவித்து சொல்லக்கூடிய ஒன்று. இதை நவில் தொறும் நூல்நயம் என்றார் பெரியோர்.

நூல் என்பது இலக்கியமாகும். அந்த இலக்கியமும், வாழ்வியல் இலக்கியம், வரலாற்று இலக்கியம், சமய இலக்கியம், தத்துவ இலக்கியம், சாத்திர இலக்கியம், தோத்திர இலக்கியம் எனப் பலவகையாக விரிவடையும்.

எந்த இலக்கியமானாலும் அதற்கொரு குறிக்கோள் உண்டு குறிக்கோள் இல்லையென்றால் அது இலக்கியமாகாது. அக்குறிக்கோளை விளக்க "இலக்கியம் என்ப இயல், அழகு, நியதி" என்றனர் பிறரும். இம் மூன்று கூறுகள் இலக்கியத்தில் அமைதல் வேண்டும். அம் மூன்று கூறுகள்தாம் அறம், பொருள், இன்பம். அதற்கு மேல் வீடு. வீட்டைத் தனியேயும் சொல்லலாம். விரவியும் சொல்லலாம்.

ஆனால் இந்தத் திருக்கோவையார் என்ற இலக்கியத்தில் வீடுபேற்றுக்குரிய செய்திகளை மிகவும் கிளர்ந்து சொல்லுகிறார். ஆனால் அறம், பொருள், இன்பம், வீடு என்று காணப்படுகின்றது. வீடு பேற்றை முழுக்க முழுக்கச் சொல்லுகின்ற இவர் அறம், பொருள், இன்பத்தை விரவிச் சொல்லியிருக்கின்றார். இதற்குப் பேரின்ப உரைவகுத்த பெரியார் இயற்கைப் புணர்ச்சி என்பதைச் செயற்கையாகிய இருவினை நலம் தீங்குகளைத் துய்த்த பிறகு வினையற்ற நிலை ஏற்படும். அப்போது ஆன்மாவில் இயற்கையாய் உள்ள மலமாகிய களைகளைப் பறித்து சத்தினிபாதம் என்ற உரத்தையிட்டு உயிராகிய பயிரை நன்கு வளர்க்க காலம் கூட்டுவிக்கும். இக்காலத்தில் திருவருட்சக்தியை ஆன்மாவில் பதிவிக்கின்ற ஆசாரியன் ஒளிவடிவாய் நம் முன் தோன்றுவான். அக்காட்சியின் முன் ஐயம் திரிபற ஆன்மா உணரும் வண்ணம் தெளிவு செய்வான். அப்படித் தோன்றுவதே காட்சியெனும் துறை. காட்சியென்பது மாசற ஒளிரும் அறிவாகும். இதைக் குருவின் திருமேனி காண்டல் என்றார்.

ஓர் ஆன்மாவானது பரிபக்குவம் எய்திய காலத்தில் அந்த ஆன்மாவை ஆட்கொள்ள ஆண்டவனே குருவாக எழுந்தருளி, குறைகளை நீக்கி, குணங்களை ஊட்டுகின்றான். பரிபக்குவம் எய்திய ஆன்மாவை ஆட்கொள்ளவே பரமாகிய சிவம் ஒரு பெண் வடிவாய்க் காட்சி தருகிறான். இங்கே சிவமாகிய பரம்பொருளே

பெண்ணாக வருகின்றது. ஆன்மாவே தலைவனாக எதிர்ப்படுகின்றது. இந்தச் சந்திப்பு இயல்பாகவே நடைபெறுகின்றது. இவர்கள் இருவரும் சந்திக்க யாரும் துணை செய்யவில்லை. ஆன்மா அழுக்ககன்று மலரவும் ஆண்டவன் நலம் கிளரும் ஒளியாய்த் தோன்றவும், காலமே துணையாக நின்றது. இதுவே இயற்கைப் புணர்ச்சியென இந்நூலில் அமைந்தது.

சந்திப்பிலே ஒரு நலம் விளையவேண்டும். அது என்ன? ஓர் ஆசிரியர் ஒரு மாணவனைச் சந்திக்கிறார். அல்லது ஒரு மாணவன் ஓர் ஆசிரியரைச் சந்திக்கிறான். இந்தச் சந்திப்பிலே என்ன நிகழவேண்டும்? ஆசிரியன் அறிவைக் கொடுக்க வேண்டும். மாணவனுக்கு அறியாமை நீங்க வேண்டும். கொள்ளுதலும் கொடுத்தலும் நிகழவேண்டும். இரண்டும் நிகழும்போது கொடுத்தோம் என்ற மகிழ்ச்சி ஆசிரியருக்கு; கொண்டோம் என்ற மகிழ்ச்சி மாணவனுக்கு. அப்போது என்ன நீங்கியது? அறியாமை நீங்கியது. அறிவு நமக்குக் கிடைத்தது. இப்போது அந்த அறிவோடு கலந்து கொள்ளுவதுதான் ஒளிக்காட்சி. இதுவே ஒளியில் கலத்தல்.

தோன்றிய குருவின் ஒளியில் கலந்த சீவன் புலன்களின் அழுக்கற்றான்; பூரண ஒளி பெற்றான். இந்த உணர்ச்சியை வெளிப்படுத்தவே சீவன் ஆசாரியனை நோக்கி "ஐம்புலன்கள் ஆர் வந்தனை விச்சை மாலமுதப் பெருங்கடலே மலையே உன்னைத் தந்தனை" என்று பாராட்டினான்.

அறிவு—ஒளி. அறியாமை—இருள். அறியாமையிலே கலந்து நின்ற சீவன் இப்போது அறிவிலே கலந்து கொள்ளுகின்றான். அறியாமையில் உழன்று கொண்டிருந்த ஒரு மாணவன் ஆசிரியனைச் சந்தித்து, அறிவைப் பெற்று, அந்த அறிவிலே தன்னை ஆட்படுத்திக் கொள்ளுகின்றபோது, ஒளியிலே கலந்து

கொள்ளுகின்றான். அதனாலே இதை "ஒளிநிலைக் கலப்பு" அல்லது "ஒளியில் கலந்து கொள்ளுதல்" எனலாம்.

'இப்படி ஒளியில் நான் கலந்து கொண்டு இருளகலும் நாள் எந்நாளோ?' என ஏங்குகின்றார் தாயுமான சுவாமிகள். இந்த உணர்வின் வெளியீடே

**"ஆணவத்தோடு அத்துவிதம் ஆனபடி மெய்ஞ்ஞானத்**
**தாணுவினோடு அத்துவிதம் சாருநாள் எந்நாளோ!"**

என்ற வரிகளாகும்.

ஆணவம் என்பது இருள். அந்த இருளில் அநாதி காலத்திலேயே ஆன்மா என்ற மெய் கலந்திருந்தது. அது துன்பநிலை. அந்தத் துன்பம் நீங்க ஞானத் தலைவனாகிய தாணுவினோடு சார்ந்து இன்புறும் நாள் எந்நாளோ! என்று இவ்வான்மா ஏங்குகின்றது.

மெய் என்பது ஆன்மா. இச்சொல் இப்பாடலில் தீவகமாக நிற்கின்றது. அந்தச் சீவன் சொல்லுகின்றது. "இருளில் மூழ்கிக்கிடந்த நான் ஒளியில் மூழ்குவது எந்நாள்" என்று வினாவையும் வியப்பையும் எழுப்புகின்றது.

இப்பாடலைப் படிக்கும்போது "ஆணவத்தோடு அத்துவிதமானபடி மெய்" என்றும், "மெய், ஞானத் தாணுவினொடு சாருநாள் எந்நாளோ" என்றும் பிரித்துப் பொருள் கொள்ளுதல் வேண்டும்.

இனி, இயற்கைப் புணர்ச்சியில் 'சத்தினி பாதம் நிகழ்ந்தால்தான் என்று ஒரு கருத்தை முன்னே நான் தெரிவித்தேன். இப்போது இது ஒரு சமயக் கலைச் சொல்லாக இருக்கின்றது.

### அருட்பதிவு நிலை

நாம் இயற்றிய இருவினைகள் இருள் நிலையால் நிகழ்ந்தவை. இதை "இருள்சேர் இருவினை" என்றது பொதுமறை. இந்த இருவினையின் பயனை இனிதே

துய்த்த பிறகு எஞ்சியிருப்பது வாசனாமலம். அந்தக் களையும் ஆன்மப் பயிர் தழைக்கத் தடையாக இருக்கும். காலம் அம்மலத்தையும் பறித்து ஆன்மாவைத் தூய்மை செய்யும். இந்நிலையில் திருவருள் என்னும் தெய்வநலம் பதியும். இதுவே சத்தினிபாதம் எனப்படும்.

அத்திருவருட்பதிவே திரோதானம் என்ற மறைப்புச் சக்தியாகவும், திருவருள் என்ற தெய்வ நலத்தை விரிக்கும் சக்தியாகவும் தோன்றும். இவையிரண்டும் சிவத்திலிருந்து வெளிப்பட்ட ஆற்றல்களே.

ஆன்மாவின் முன் நிலையும் பின் நிலையும் அறியாவண்ணம் முன்னின்று மறைப்பது திரோதானம் எனப்படும். முன்நிலையும் பின்நிலையும் அகற்றி, தன் நிலையை விளக்கும்போது திருவருள் எனப்படும். துன்பத்தை நீக்குகின்றபோது திரோதானம். அன்பைத் தேக்குகின்ற போது பராசக்தி. சத்தினி பாதம் என்றாலும் திருவருட் பதிவு என்றாலும் தூய்மையென்றாலும் ஒன்றே. இருவினையும் நீங்கியபோது இருள் இல்லை. இருளும், இருளால் வந்த இருவினையாகிய துன்பங்களும் நீங்கியபோது ஆன்மா தூய்மையாகின்றது. தூய்மையாகிய நிலையிலே திருவருட்பதிவு ஏற்படுகின்றது. அந்த திருவருட்பதிவு நிகழ்வதற்குத்தான் சத்தினிபாதம் என்று பெயர்.

மணிவாசகப் பெருமானுக்கு இருளினை ஒப்பு, மலபரிபாகம் நிகழ்ந்தபோது திருப்பெருந்துறையிலே குருநாதனாக எழுந்தருளி உபதேசம் செய்தான். அவர் திருப்பெருந்துறையிலே கண்ட காட்சியை விட, காணுகின்ற காட்சியை இங்கே சொல்லப் போகின்றார். நாமும் காணப்போகின்றோம்.

இருவினை ஒப்பும், மலபரிபாகமும், நிகழும்போது இன்பதுன்பங்கள் நிகழும். பின்னர் நிகழ்வதுதான் சத்தினிபாதம் அல்லது அருட்பதிவு. பயிரில் உள்ள களைகளை எடுப்பது போன்றது. மலத்தைப் பறித்துப்

பாகம் செய்தலே (பாகம் என்பது பக்குவம் செய்தல்) மல பரிபாகம் எனப்படும்.

பயிர் நன்றாகச் செழிக்க வேண்டுமென்று சொன்னால் அதிலிருக்கும் களையை எடுத்துத்தான் ஆக வேண்டும். அப்படியே உயிர் செழிக்கவேண்டும் என்று சொன்னால் அதிலிருக்கின்ற மலமாகிய களைகளை எடுத்தே தீரவேண்டும்.

மலங்கள் பலவாக இருக்கின்றன. அந்த மலங்களைப் பரிபாகம் செய்வதற்குத்தான் மலபரிபாகம் என்று பெயர்.

மலங்கள் என்பவை ஆன்மாக்கள் உயர முடியாமல் தடையாக இருக்கின்ற குறைகள், குற்றங்கள்.

**குருவின் தோற்றம் :-**

இருவினை ஒப்பு, மலபரிபாகம் நிகழ்ந்த பின்பு உத்தமமான சற்குருநாதன் தோன்றுகின்றான். அந்தக் காட்சி ஒரு பெண்ணின் வடிவாகத் தெரிகின்றது மணிவாசகப் பெருமானுக்கு.

**காட்சி நிலை**

அவர் காணுகின்ற காட்சி தில்லையிலே நிகழ்கின்றது. இதற்கு மேல் அவ்வளவும் என்னால் சொல்ல முடியாது என்பதனாலே ஓரளவுக்குச் சொல்லிவிடுகின்றேன். மிகுதியை நீங்களே சென்று பார்த்துக் கொள்ளுங்கள்.

"அணிகொள் தில்லையைக் கண்டேனே" என்று திருவாசகத்திலே அந்தப் பகுதியை விளக்கமாகப் பாடி, அதனுடைய உள் ஆழங்களை ஒரு காட்சியாக வைத்து இங்கே 'காட்சி' என்ற தலைப்பிலே சொல்லுகின்றார். காட்சி என்ற சொல்லுக்கே அறிவு என்று பொருள். அப்படிக் காட்சிகள் பலவாக வந்தால் அறிவும் பலவாகும். அப்படி அறிவு பல என்றபோது ஒன்றுக்கொன்று

நுட்பமாகிக் கொண்டு போகின்றதே தவிர நிறைய அறிவு இருக்கின்றதாகக் கொள்ளக்கூடாது. பட்டைத் தீட்டப்படாத வைரம் போலவும், பட்டைத் தீட்டப்பட்ட வைரம் போலவும், பொதுவாகக் காணப்படுகின்ற அறிவு, நுட்பமாகக் காணப்படுகின்ற அறிவு, நுழைவாகக் காணப்படுகின்ற அறிவு என்று அறிவு பலவாகக் காணப்படுகின்றது. திருவள்ளுவநாயனார் சொல்லுகின்ற போது, அறிவை, "நுண்மான் நுழைபுலம்" என்று சொல்லுவார். அதுவும் ஓர் அளவுதான். அதற்கு மேலே அறிவு நுட்பங்கள் இல்லையென்று பொருளில்லை. அதற்கு மேலேயும் அறிவு நுட்பங்கள் உண்டு. அது அனந்தம். விட்டுவிட்டு, அளவு படுத்தினார்கள். அந்தக் காட்சிகள் பரு நிலைக் காட்சி, நுண் நிலைக் காட்சி, மிகு நுண்நிலைக் காட்சி, மானதக் காட்சி என்க. இனிப் புலன்களாலும், உணர்வுகளாலும் காணுவது பொய்; உணர்வு கடந்த நிலையிலே காணுகின்ற காட்சி மெய்.

அந்தக் காட்சியை இன்னும் கொஞ்சம் வகுத்துப் பார்க்கலாம். பண்டக் காட்சி, பண்புக் காட்சி, பயன் காட்சி, பருகும் காட்சி என்று வைத்துக் கொள்ளலாம். அப்படி ஒருபொருள் காட்சி தருகின்றது. அந்தப் பொருளிடத்திலே எல்லாவற்றையும் காணுகின்ற மாட்சி இந்தச் சீவனுக்கு வரவேண்டும். இது உலகியல் வாழ்க்கையாக இருந்தாலும் சரி, அல்லது அருளியல் வாழ்க்கையாக இருந்தாலும் சரி, அந்தப் பொருளிடத்திலே இந்த நால்வகையான நலங்களையும், அல்லது ஐவகையான நலங்களையும் பெறுகின்ற மாட்சி ஒரு சீவனுக்கு இருக்கவேண்டும். ஓர் ஆசிரியனை வைத்துக் கொண்டு அனைத்துக் கலைகளையும் பயில்கின்றவனே சரியான மாணவன். இதற்கொரு ஆசிரியன், அதற்கொரு ஆசிரியன் என்று போய்க் கொண்டேயிருந்தால் சரிப்பட்டு வராது. ஒருவர் மூலமாகவே அனைத்து நலங்களையும் பெறுகின்றவனே சரியான மாணவன். அதனாலேதான் திருவள்ளுவ

நாயனார் ஒரு காட்சியைச் சொல்லி, நமக்கு ஒரு உண்மையை விளக்குகிறார். திருமூலரும் ஒரு காட்சியைச் சொல்லி நமக்கு ஒரு உண்மையை விளக்குகிறார்.

முதலில் திருமூலர் சொன்ன காட்சியைச் சொல்லு-கிறேன். திருமூலர் 'காட்சி' என்றபோது 'குரு' வைத்தான் சொல்லுகிறார். இங்கேயும் 'காட்சி' என்றபோது பேரின்ப உரையாசிரியர், குருவின் திருமேனி காண்டல் என்று விளக்கம் சொல்லுகிறார். ஒரு தலைவன் தலைவியைக் காணும்போது குருவின் வடிவமாகக் காண வேண்டும். ஒரு போகப் பொருளாகக் காணக்கூடாது. அனுபவப் பொருளாகக் காணவேண்டும். அந்த அனுபவமும் குருவிடம் பெறுகின்ற அனுபவமாக இருக்க வேண்டுமே தவிர, இந்த உலகியலிலே பெறுகின்ற சக்கை இன்பமாக இருக்கக்கூடாது. சக்கை இன்பம் என்பது சலித்துப் போய்விடும். ஆகவே சக்கை இன்பமாக இல்லாமல் அதை ஒரு நுண் அனுபவமாகப் பெறுதல் வேண்டும். அதற்குத் தான் இந்த உலகமே இருக்கின்றது. இந்த உலகம் எதற்காக இருக்கின்றது என்று கேட்டால் இந்தச் சீவனை உயர்த்திக் கொள்ளுவதற்காக இருக்கின்றது. அப்படி உயர்த்திக் கொண்ட நிலையிலே வந்த காட்சி குருவின் திரு-மேனியாக வந்திருக்கின்றது. குருவின் திருமேனி என்று சொன்னவுடனே எனக்கு அந்த நினைவு வருகின்றது.

> தெளிவு குருவின் திருமேனி காண்டல்
> தெளிவு குருவின் திருவார்த்தை கேட்டல்
> தெளிவு குருவின் திருநாமம் செப்பல்
> தெளிவு குருவின் திருவுரு சிந்தித்தல் தானே.

தெளிவு, தெளிவு என்று நான்கு முறை சொன்னார்கள். நான்கு முறையாகச் சொன்னபோதும் நான்கு வகையாகப் பாகுபாடு செய்தார்கள். குருவின் திருமேனியைக் கண்டவுடனே அறம் இன்னதெனத் தெளிதல் வேண்டும். குருவின் திருவார்த்தையைக்

கேட்டவுடனே பொருள் இன்னதெனத் தெளிதல் வேண்டும். அவர் திருநாமத்தைச் சொன்னவுடனே இன்பம் இது எனத் தெளிதல் வேண்டும். அவரைச் சிந்தித்தவுடனே வீடு இது எனப் புரிதல் வேண்டும். இந்த நான்கிலும் அவர் உணர்த்தியிருப்பது அறம், பொருள், இன்பம், வீடு. இந்த நான்கினையும் தரவல்லவன் எவனோ அவனே ஆசாரியன். தரவல்லவள் எவளோ அவளே துணை. மங்கலம் உடையவள் அவள். அந்தப் பெண்ணைத் தான் 'பெண்ணிற் பெருந்தக்க யாவுள' என்று திருவள்ளுவரும், "இல்லாள் அகத்திருக்க இல்லாத -தொன்றில்லை". என்று ஔவையும் சொன்னார்கள்.

அதனால்தான் அவளுக்குத் 'துணை' என்று பெயர். அவளை வாழ்க்கைக்குத் துணை ஆக்கினார்கள். அவள் வந்தால் நமக்குக் கிடைப்பது வாழ்க்கைத் துணை நலம். அனைத்து நிலைகளிலும் ஒரு ஆண் மகனது வாழ்க்கை உயர்வதற்கு ஒரு பெண் காட்சிப் பொருளாக இருக்கின்றாள். காட்சிப் பொருள் என்றால் ஏதோ கொச்சையாக நினைக்க வேண்டாம்; அறிவுப் பொருள் என்று பெயர். அந்த அறிவு பலவாக விரிகின்ற போது அனைத்துக்கும் அவள் நிலைக்களனாக இருந்து அனுபவத்தை ஊட்டுகின்றாள்.

இந்த அனுபவத்தையெல்லாம் நீங்கள் எப்படிப் பெறப்போகிறீர்கள் என்பதற்காக இன்பத்துப் பாலிலே ஒரு திருக்குறளிலே சொல்லுகின்றார்.

**"கண்டு கேட்டு உண்டு உயிர்த்து உற்றறியும் ஐம்புலனும்**
**ஒண்டொடி கண்ணே உள"** (1101)

அனைத்தும் இவள்மாட்டிருக்கும் போது ஏன் நீ எங்கெல்லாமோ அலைந்துகொண்டு இருக்கின்றாய் என்று கேட்கிறார். அந்தத் திருக்குறளிலே ஒரு நுட்பம் இருக்கின்றது. அதைச் சொல்லிவிடுகின்றேன்.

"ஒண்டொடி" என்று சொல்லுகின்றார் இல்லையா? அதுதான் மிகவும் உயிர்ப்பான சொல். 'ஒண்டொடி' என்றால் ஒளி பொருந்திய, தொடியாகிய வளையலை அணிந்தவள் என்று சொல்லுவார்கள். அடியேனுக்கு அதன் பொருள் உடன்பாடாக இருந்தாலும் அதற்கு மேலும் ஒரு பொருள் இருப்பதாகத் தோன்றுகின்றது. அதைச் சொல்ல விழைகின்றேன். ஒண் என்பதற்கு ஒளி என்று பொருள். ஒளி நிறைந்தவளாக அவள் இருக்கவேண்டும் என்பது அதற்கு அடையாளம். ஒளி நிறைந்த உணர்வோடு ஒரு ஆண்மகனைத் தொடுகின்றபோது ஆண்மகனின் ஐவகையாகிய இருள்நிலை அகன்று மெய்வகையில் ஒளிநிலை உணர்வு பெருகும். ஒண்தொடி என்றால் ஒளியினால் தொடுபவள்.

ஓர் ஆசாரியன் மாணவனைத் தொடுகின்றபோது ஞான ஒளியினாலே தொடுகின்றான். ஞான நிறைவு பெற்று ஒளிநிலையில் அமர்ந்து அவனைத் தொடு கின்றான். மாணவனுக்கு அஞ்ஞானம் நீங்கி அருள் ஞானம் மலர்கின்றது. அதுபோலே, 'ஒளிநிறைந்த ஒரு பெண்' என்ற கருத்தைத் தெரிவிக்க 'ஒண்தொடி' என்றார். ஒளிநிறைந்த இவள் அந்த ஒளியினாலே ஓர் ஆண்மகனைத் தொடுகின்றபோது, "கண்டு, கேட்டு, உண்டு, உயிர்த்து, உற்றறியும் ஐம்புலனுக்கும் விருந்தாக இருக்கின்றாள்" என்று சொல்லுகின்றார். ஆகவே இந்தச் சொல்லை ஏதோ அன்மொழித் தொகை என்று சொல்லி விட்டு விடக்கூடாது.

'மாணிழை' என்று சொன்னால் மாண்பை இழைப்பவள் என்று பொருள். ஒரு ஆண்மகனிடத்திலே மாட்சிகளையெல்லாம் இழைக்கக்கூடியவள் என்று பொருள். மாண்+இழை என்று பிரிக்கவேண்டும். ஏதோ சொல்லழகுக்காகப் போட்டிருக்கிறார்கள் என்று எண்ணக்

கூடாது. அதனாலே இந்தக் காட்சி அத்தனை நலங்களையும் ஆன்மாவில் இழைக்கும் தன்மையானது; நன்மையுடையது.

ஆகவே காட்சியானது ஆன்மாவைப் பாச ஞானத்திலேயிருந்து பிரித்துப் பசு ஞானத்திலே சேர்த்தது. பசு ஞானத்திலேயிருந்து பிரித்துப் பதி ஞானத்திலே சேர்த்தது. பதி ஞானத்திலேயிருந்து பிரித்து ஒரு சீவனைத் தானாக நிற்கச் செய்தது, என்ற நான்கு நிலையும் தரவல்லது. அதுதான் அறம், பொருள், இன்பம், வீடு என்று சுட்டிக் காட்டினேன். இப்படிப் பேரானந்த நிலைக்குத் தன்னைக் கொண்டுவந்து நிறுத்தியவள் எவளோ அவள்தான் இன்று காட்சிப் பொருளாக நின்றாள். அப்படிக் காட்சிப் பொருளாக நின்றதை இங்கே விளக்கியிருக்கின்றார்.

**கற்பா? களவா?**

இது என்ன கற்பு நூலா, களவு நூலா? இதைக் களவு நூல் என்று சொல்லுவது வழக்கு. கற்பு நூல் என்று சொல்லுவதற்கு இடமில்லாமல் இருக்கின்றது. அதைப் பற்றி ஒன்றை நாம் தெரிந்து கொள்ள வேண்டும்.

இந்தக் களவு, கற்பு என்ற இரண்டைப் பற்றியும் மற்றவர்களுக்கும் அடியேனுக்கும் ஒரு சிறு வேறுபாடு இருப்பதாக எண்ணுகின்றேன். களம் என்று ஒரு சொல் இருக்கின்றது. கள, களம், களவு என்று விரியும். இவை அதனுடைய அடிப்படை வேர்ச்சொற்கள். வயல் வெளிகளிலே விளைந்த விளைச்சலைக் கொண்டுவந்து குவிக்கின்ற இடத்திற்குக் 'களம்' என்று சொல்லுவார்கள். எந்தப் பண்டங்கள் விளைந்தாலும் அதை எங்கே கொண்டு வந்து குவிக்கின்றோமோ அந்த இடத்திற்குக் 'களம்' என்று பெயர். ஆண்மகனிடத்திலே ஒரு உணர்ச்சி விளைந்தது. அதைப் பெண்மகளிடத்திலே செலுத்தினான். அது களவாக அமைந்தது. பெண்

மகளிடத்திலே ஒரு உணர்ச்சி விளைந்தது. அதை ஆண்மகனிடத்திலே செலுத்தினாள். இருவரும் ஒருவர் உணர்வை ஒருவரிடத்திலே குவித்த காரணத்தாலே அதற்குக் களவு என்று பெயர் வந்தது. ஏதோ தெரியாமல் திருட்டுத் தனமாகக் கலந்து கொண்டார்கள் என்று மற்றவர்கள் பொருள் சொல்லுவதுபோல் எனக்குத் தோன்றவில்லை. ஏனென்றால் யாருக்கும் தெரியாமல் யாரும் கலந்து கொள்ள முடியாது.

ஊழின் வலியினாலும், முன் செய்த தவத்தினாலும் ஒருயிரும், மற்றோருயிரும் சேர்ந்து கொண்டது. அதற்கு இடை நின்றது பால்வரைத்தெய்வம் என்று சொல்லுவார்கள். பான்மை வழித் தெய்வம் இடை நின்று இவர்களைக் கூட்டி வைத்தது. அப்படிக் கட்டி வைத்தது தெய்வமாக நின்றதாலே அவர்கள் தெய்வமே கூட்டி வைக்கின்ற ஓர் உயர்ந்த மெய்யுணர்விலே திகழ்ந்தார்கள். அப்படித் திகழ்ந்து கலந்து கொண்டதற்குக் 'களவு' என்று பெயர். அப்படிக் களவில் நின்று கலந்த இருவரும் வேறற்ற நிலையில் நிற்கும்போது அதற்குக் 'கற்பு' என்று பெயர். கற்பு உலகுக்குப் பயன்படுவது; களவு உலகுக்குப் பயன்படுகின்ற செய்திகளைக் குவித்து வைக்கின்ற நிலையம் என்று பொருள். அதுதான் களவுக்கும் கற்புக்கும் உள்ள வேறுபாடு.

காட்சிகள் என்றவுடன் நம் மனக் கண்ணின் முன் எத்தனையோ காட்சிகள் வந்து போகின்றன. காட்சியிலே புறக்காட்சிகளை மட்டும் சொல்லவில்லை. அகக் காட்சிகளை எல்லாம் சொல்லுகின்றார். உள்ளிருக்கும் காட்சிகளையும் சொல்லுகின்றார், எப்போது ஒரு பொருளை வெளியிலே காணுகின்றோமோ, அந்தக் காட்சிகள் அந்தப் பண்டத்திற்குள்ளேயே இருக்கும். அந்த அனுபவங்களை இவர் சொல்லுகின்றார். அதற்குரிய பாடலைப் பார்ப்போம்.

# காட்சி

***திருவளர் தாமரை சேர்வளர் காவிகளீசர்தில்லைக்***
***குருவளர் பூங்குமிழ் கோங்குபைங் காந்தள்கொண் டோங்கு***
***தெய்வ***
***மருவளர் மாலையொர் வல்லியி னொல்கி யனநடைவாய்ந்***
***துருவளர் காமன்றன் வென்றிக் கொடிபோன் றொளிர்கின்றதே!***

இதுதான் அவர் கண்ட காட்சி. ஒரு பெண்ணையும் காட்டவில்லை. ஒரு ஆணையும் காட்டவில்லை. கண்டது மலர்க் காட்சி. கடைசி வரியில் ஒரு செய்தி இருக்கின்றது. அதை மட்டும் நீங்கள் மனத்திலே தேக்கிக் கொள்ளுங்கள்.

"காமன் தன் வென்றிக் கொடி போல் ஒளிர்கின்றதே" என்று முடிக்கின்றார் அல்லவா? ஐந்து மலர்களால் தொகுக்கப்பட்ட ஒரு கொடி அசைந்தாடுகின்றது. அந்தக் கொடி காமன் கையிலிருந்து, மற்றவர்களை வெல்லுவதற்குரிய கொடியாக இருக்கின்றது என்பர் உரையாசிரியர். ஒரு சிறு மாற்றம். காமன் தன் வென்றிக் கொடிபோல் என்பதில் இரண்டாம் வேற்றுமையைச் சேர்த்து 'காமன் தன்னை வெல்லுகின்ற' கொடியாகத் திகழ்கின்றதே, என்று கொள்ளுதல் வேண்டும். இந்தக் கொடி எப்பட்டிப்பட்ட கொடி? காமத்தை வென்ற கொடி.

**காமம், காதல்**

காமம் என்பது தன்னலமானது. காதல் என்பது பிறர்நலத்தைப் பேணுவது. இந்தக் காமத்தை ஒருவன் தொடுவானேயானால் ஒரு பெரிய நோயைத் தொட்டவனாகிறான். இதைத்திருவள்ளுவர்

> **"காமம் வெகுளி மயக்கம் இவை மூன்றன்**
> **நாமம் கெடக் கெடும் நோய்"** (36)

காமர் என்ற சொல்லே காமம் என வந்ததென்று கொள்வர். காமர் என்றால் அழகு. கவருதல் என்ற

பொருளிருப்பினும், இவை காலத்தால் வேறு பொருளையும் தரவல்லன. ஒவ்வொரு சொல்லும் காலவட்டத்திலே வேறு பொருளாக்கத்தைப் பெற்றுப் பல்வேறு ஆழமான செய்திகளைத் தரும். அதனாலே காமனை வெல்லுகின்ற கொடி என்று கொள்ளுதலே சாலப்பொருந்தும். சுருங்கக் கூறின், ஒரு பொருளைக் காணுகின்றபோது அதன்மேல் ஆசையெழக் கூடாது. அப்படி எழுமாயின் அதற்குக் காமம் எனப்பெயர். மாறாக அன்பு எழுதல் வேண்டும். அந்த நிலையே காதல் எனப்படும்.

அவாவுதல் எல்லாம் காமம் தான். எவை அறிவுக்குப் பகையாக இருக்கின்றனவோ அவையாவும் காமமே. எது தெளிவுக்குக் காரணமாக இருக்கின்றதோ அதெல்லாம் காதல். இதை நாம் பாகுபடுத்திக் கொள்ளுவோமானால் காமத்திலிருந்து எப்படி விலகுவது என்று தெரியும்.

சாதாரணமாக நடைமுறைச் செய்தியைச் சொல்லு கின்றேன். ஓர் ஆண்மகன் வெளியே செல்லுகின்றான். எதையெதையோ கண்டான். புலன்களிலே ஒரு விறுவிறுப்பு ஏற்பட்டது. இன்று நமக்கு உரிய இடமாகிய இல்லத்திலேசென்று துய்த்துவிட வேண்டும் என்று அந்தப் புலன் வெறி கொண்ட நிலையிலே வீட்டிற்கு வருகிறான். தன்னுடைய மனைவி உடல் நலமில்லாமல் மிகவும் சோர்ந்து காணப்படுகிறாள். உடம்பு சரியில்லை என்று சொல்லுகிறாள். உடனே மருத்துவரிடம் அழைத்துச் செல்கிறான். இப்படிப் புலன் வேகப்பட்டு வந்தபோது உடல் நலமின்மையைக் கண்டதும் பரிவு ஏற்பட்டது. அன்பு பிறந்தது. இதற்குத்தான் 'காதல்' என்று பெயர். அப்படியில்லாமல், உடல் நலமில்லையென்று மனைவி சொன்னதும் வேகப்பட்டு, 'உனக்கு எப்போது தான் உடம்பு சரியாக இருந்தது? என்று கோபித்து, அவள் நிலையைப் பற்றிக் கவலைப்படாமல் தன் புலன் இச்சையில் மட்டும் நிற்பானேயானால் அது காமம்

எனப்படும். தன்னலமாக இருப்பது காமம். பிறர் நலம் பேணுவது காதல்.

இதனால்தான் திருவள்ளுவர் காமத்தினை 'நாமம் கெடக் கெடும் நோய்' என்று சொன்னார். நாமம் என்றால் என்ன பொருள் என்று உங்களுக்கெல்லாம் தெரியு மில்லையா? நாமம் என்றால் பெயர், புகழ் என்று பொருள். ஞானம் என்றும் ஒரு பொருள் உண்டு. இதை எப்படிச் சொல்லுகிறீர்கள்? என்றால் நாமம் போட்டுக் கொண்டிருப்பவரைப் போய்க் கேட்டு பாருங்கள்: நெற்றியிலே என்ன போட்டுக் கொண்டிருக்கிறீர்கள் என்று கேட்டால் 'எம்பெருமான் திருவடிதான்' என்று சொல்லுவார். திருவடி என்றால் ஞானந்தானே! ஆக நாமம் என்றால் ஞானம்.

காமம் இருந்தால் பெயரையும் தெளிந்த அறிவையும் புகழையும் அழிக்கும். வாழ்வில் களங்கத்தை உண்டாக்கும். இத்தனைக்கும் காரணமாக இருப்பது காமம். அதனால்தான் இதனை ஒரு நோய் என்பார் திருவள்ளுவர்.

மணிவாசகர் கண்ட காட்சி, மாசற்ற காட்சி, அது தன் மனமாசை அகற்றும் காட்சி; மணிவாசகர் மனம் அதில் ஒன்றுகிறது.

காட்சி ஒவ்வொன்றாக மலருகிறது, மலரும் மலர்ச்சி ஒவ்வொன்றும், தன் .உயிர், உள்ளம், உடல் எனும் மூன்றிலும் உள்ள மாசினை அகற்றுகிறது. நேசத்தில் நெகிழச் செய்கிறது. அந்த ஆசகற்றும் அற்புதக் காட்சியை அனுபவத்தில் உணர்ந்து உரைக்கின்றார்.

அக்காட்சியின் மாட்சிதான் திருவளர் எனும் முதல் பாடலாக மலர்ந்தது. மணிவாசகப் பெருமான் கண்ட காட்சி உள்ளத்தைக் கவருகின்ற காட்சியாக இல்லை. உள்ளத்தை மலரச் செய்யும், காட்சியாக இருக்கின்றது. ஒவ்வொருவகையான மலரை, மலர்ச்சியைக் காணுகின்றார்.

ஆம்! மலர்ந்த தாமரையாக முகம். காவி மலராகக் கண்கள். குமிழ் மலராக மூக்கு. கோங்கு மலராக மார்பு. காந்தள் மலராகக் கைகள். இந்த ஐந்து மலரும். ஒரு கொடியில் மலர்ந்து மெல்ல அசைந்தது. அந்த அசைவு அன்னம் நடப்பது போல் இருந்தது.

மலர்; மலர்ந்தால் எழில் தரும்; மணம் தரும்; தேன் தரும். மலர்ந்த மலர்க்காட்சியைக் கண்ட மணிவாசகர் உடல், உள்ளம், உயிர் மாசற்றது; நேசம் இருந்தது.

மாசகன்றதும் தில்லை. மாசகற்றுவதும் தில்லை. தில்லை என்பது இறைவன் எல்லை. அது எல்லையிலாத ஆற்றலை உடையது. இடையறாது அனைத்திற்கும் ஆற்றலை வழக்குவது.

மலரும் மலர்ச்சி எல்லாம் தில்லையாகவே காட்சியளிக்கிறது ஆம்! அந்தப் பாடலை இப்பொழுது பாருங்கள். திருவளர் தாமரை ஈசர்தில்லை; சீர்வளர் காவிகள் ஈசர்தில்லை; குருவளர் பூங்குழிழ் ஈசர்தில்லை; கோங்கு ஈசர்தில்லை; பைங்காந்தள் ஈசர்தில்லை என மலர்ந்தது.

ஈசர் – அன்பின் வடிவானவர். அவர் இருக்கும் இடம் தில்லை. ஐந்து மலரும் ஐந்து சபையாகும். சபை- ஞான நிலையம். இறைவனுக்கு ஐந்து சபைகள் புறத்தே உள்ளன. அவை அனைவருக்கும் தெரியும். ஆனால் மணிவாசகர் கண்ட சபை அக்த்தே.

அகம் மலர்ந்தது முகம் மலர்ந்தது; அகம் நெகிழ்ந்தது; விழி மலர்ந்தது; அகம் மகிழ்ந்தது; நாசி நலம் சிறந்தது. அகம் குழைந்தது; மார்பகம் சுடர் வீசியது அகம் மகிழ்ந்தது. கைகள் வழங்கியது.

இவை அனைத்தும் தில்லை எனும் ஒன்றில் ஒன்றாய்; ஒன்றினுள் ஒன்றாய், ஒன்றிடைஒன்றாய், ஒன்றின் கீழ் ஒன்றாய், ஒன்றின்மேல் ஒன்றாய் ஒன்றி ஒளிரும் ஒளிக்காட்சியாகும்.

திருவளர் தாமரை - தாமரை நன்றாக மலர்ந்து காணப்படுகின்றது.

சீர்வளர் காவிகள் - காவி மலர் மலர்ந்திருக்கின்றது.

ஈசர் தில்லை - ஈசர் இருக்கின்ற தில்லை. (தில்லை மலர்-தில்லை வனம்)

குருவளர் பூங்குமிழ் - பூங்குமிழ் மலர்ந்திருக்கின்றது.

கோங்கு - கோங்க மலர். இது மலராமல் மொட்டாக இருப்பது. இருந்தாலும் முன்னும் பின்னும் மலராகவே சொல்லுகின்ற போது இதையும் மலராகவே கொள்ள வேண்டுமென்பது வழக்கு.

பைங்காந்தள் - காந்தள் மலர்

தாமரை முகத்துக்கு அடையாளம். காவி மலர் கண்ணுக்கு அடையாளம். மலருக்கு மேல் மலர். மலருக்குள் மலர். மலருக்குக் கீழ் மலர் என்று பல வகையாக மலரும் ஐந்து மலர்களைச் சொல்லுகின்றார். தில்லையைச் சொல்லாமல் அவர் எதையும் சொல்ல மாட்டார். இந்த ஐந்தையும் கொண்டு மேலும் மேலும் உயர்ந்து, ஓங்கி, தெய்வ மணத்தை வளர்த்துக் கொண்டிருக்கின்ற ஒரு மாலை.

ஓர்தல் என்று சொல்லுவது சிந்திக்கத் தக்க இந்த மலர்களைக் கொண்ட ஒரு கொடி அசைகின்றது. மென்மையான நடையை, அன்ன நடையைப் போல் அசைகின்றது இக்கொடி.

இது முழுதுமே யோகத்தைப் பற்றிப் பேசியது. ஆனால் இதை உலகத்துக்குச் சொன்னதுபோலக் காட்சிகளை அமைத்திருக்கிறார்.

'உரு, நிறம், குரு, ஒளி ஒரு பொருளென' என்பது தொல்காப்பியம். உரு என்றால் ஒளி. ஒளியை வளர்க்கின்ற தன்மை உடையது. காமன் தன்னை வென்ற கொடியாகத் திகழ்கின்றது.

இவண் ஐந்து நிலத்துக்குரிய மலர்களும் இருக்கின்றன. அவை யாவை? ஒரு பெண்ணைப் பார்த்தேன் என்று சொல்லும்போது, அவளை மலராகப் பார்க்கின்ற பக்குவம் இவருக்கு இருந்திருக்கிறது என்று தெரிகிறது. முகத்தைப் பார்க்கும் போது தாமரை என்று பார்ப்பதா? அல்லது வேறு வகையாகப் பார்ப்பதா? அவருடைய தெய்வீக உணர்வு எத்துணை உயர்ந்து ஓங்கியது என்பதைப் பார்க்கலாம். அந்த முகத்தைப் பார்த்தவுடன் நமக்கு ஓர் அறிவு வருகின்றது. அது சொல்லிக் கொடுத்து வருவதில்லை. பார்த்தவுடனே ஓர் அறிவு பிறக்கும். அதைப் பார்த்தவுடனே இப்படி ஒரு முகமா? இப்படி ஒரு நலமா? என்று நினைக்கச் செய்ய வேண்டும். அப்படி நினைக்கச் செய்வதுதான் முகம். பலமுறையும் நினைக்கச் செய்ய வேண்டும். ஒரு முறை பார்க்கும் போது ஒரு காட்சி தந்தது. இன்னொரு முறை பார்க்கும்போது இன்னொரு காட்சி தருகின்றது. பலவகையான காட்சியும், பலவகையான அனுபவமும் நம்முடைய இதயத்துக்குள்ளே ஊடுருவுமாறு அமைதல் வேண்டும். இதையே வள்ளல்பெருமான் "நினைந்து நினைந்து" என்று சொல்லுவார். திருவள்ளுவ நாயனார்

"உவப்பத் தலைக்கூடி" (394)

என்பார். அப்படி நினைந்து நினைந்து பார்க்கும் அளவிலே அந்த முகம் இருக்க வேண்டும்.

தாமரைக்கு ஒரு தனிச்சிறப்பு உண்டு. அது எப்போதுமே மலர்ந்து விடுவதில்லை. அதற்கு ஒரு பருவம் வருகின்றபோதுதான் மலர்கின்றது. அந்த மலர்ச்சியைக் காட்டுவதற்காகத் தாமரையைக் காட்டுகின்றார். நான் பார்த்த அந்தக் காட்சியிலே தாமரை மலர்ந்தது. அதிலே யாதோ ஒன்று வளர்ந்து கொண்டிருக்கின்றது. யாதோ ஒன்று என்றும் சொல்லுவதற்கில்லை. 'திரு' வளர்ந்து

கொண்டிருக்கின்றது. திரு என்றால் அழகு என்று சொல்வர். அது கண்டாரால் விரும்பக்கூடிய தன்மை உடையது என்பர்.

திரு என்பதற்கு ஞானம், அழகு என்று பொருள். இத்தனையும் பொருந்தியிருப்பதனாலே, நமக்குள்ளே ஏதோ ஒரு நலத்தை வளர்த்துக் கொண்டிருக்கின்றது. அது என்ன நலம்? ஞான் நலம் வளர்க்கும் தன்மை உடையது. அதனாலேதான் இந்த முகம் மங்கலமாக இருக்கின்றது. எனவேதான் பெண்கள் முகத்தை மங்கலமான முகம் என்றார்கள். மங்கலமாக அமைந்து, முன்னிலையில் இருப்பாருடைய மாசுகளை அகற்றி-தேசுகளை ஊட்டுவதே, அந்த முகம். அப்படி அமைதல் வேண்டும் தன்னளவில் மங்கலமாக இருப்பதாலும், பிறரை மங்கலம் செய்வதனாலும் அவர்களுக்கு மங்கையர்; என்று பெயர் வந்தது. இறைவனுடைய முகம் மங்கலமாக இருக்கின்றது. 'சிவம்' என்ற சொல்லுக்கு 'மங்கலம்' என்று விளக்கம் சொல்லியிருக்கின்றார்கள்.

மங்கலம் என்றால் மங்கமாட்டோம் என்று பொருள். என்றும் மங்காது நலம் செய்வது. அப்படி மங்காமல் என்றும் நலம் செய்துகொண்டு இருப்பதனால்தான் "மங்கையர்க்குத் தனியரசி எங்கள் தெய்வம்" என்று அவர் சொல்லியிருக்க கூடும். இதெல்லாம் நினைவுபடுத்திக் கொள்ளலாம்.

திருவள்ர் தாமரை என்று இவர் சொல்லுகின்ற போது, ஞானமாகிய தேன் அதிலிருந்து சுரந்து கொண்டேயிருக்கின்றது. ஞானம் என்ற அறிவு ஒளிதான் இது. அதிலிருந்து சுரந்து கொண்டேயிருக்கின்றது. அது என் சீவனை வளர்த்துக் கொண்டேயிருக்கின்றது. அவள் முகக் கவர்ச்சி, ஞானத்தை ஊட்டி என் உயிரை வளர்த்துக் கொண்டேயிருக்கின்றது என்ற கருத்தைச் சொல்ல

வந்தவர் "திருவளர் தாமரை" என்று குறிப்பிடுகிறார். ஞானமாகிய அருளியல் செல்வத்தையும், மகிழ்ச்சியாகிய உலகியல் நலத்தையும் ஒருங்கே அது வழங்கிக் கொண்டேயிருக்கிறது.

அது மட்டுமன்று, அதனுடைய பார்வை என்னுடைய உள்ளத்தை நெகிழச் செய்கின்றது. முன்னே நினைந்து நினைந்து என்று சொன்னேன் அல்லவா? அடுத்து நெகிழ்ந்து நெகிழ்ந்து என்று சொல்லுவார். நெகிழ்ச்சி என்பது கருணையினால் நிகழ்வது. நெகிழ்ச்சி உண்டெனில் உருகும். இல்லையெனில் உருகாது.

கண்ணுக்குச் சொல்லுகின்றபோது 'காவி' என்றும், 'நீலோற்பலம்' என்றும் சொல்லுவார். நமக்கு முன்னே வருகின்றவர்கள் கண்கள், கருணை பொழியும் கண்களாக இருக்க வேண்டும். நான் எழுதிய ஒரு பாடலின் முதல் வரி, "கருணை பொழியும் விழிகள்". ஆகவே விழிகள் கருணை பொழிதல் வேண்டும். பெண்களின் பார்வைக்கு ஒரு குளிர்ச்சியும், ஒரு பேராற்றலும் உண்டு. அப்படிப்பட்ட கண்களுக்கு வேல் கண், சேல் கண், மலர்க்கண் என்று சொன்னார்கள். அதை உவமைத்தொகை என்று சொல்லக் கூடாது. வினைத் தொகை அது. புலவர்கள், அதை உவமை உவமை என்றுச் சொல்லி நம்மை ஊமையாக்கி விட்டார்கள்.

ஆண்மகனிடத்திலே இருக்கின்ற காமாதி எண்ணங்களை வென்றதனாலே வேல்விழி என்றும், அவன் ஆன்மாவில் இருக்கின்ற அழுக்கையெல்லாம் அகற்றித் தூய்மை செய்து, தன்வயப்படுத்தியதனாலே சேல் விழி என்றும். அவனுடைய வாழ்க்கையை உயர்த்தி, மலரச் செய்ததனாலே மலர்விழி என்றும் பெயர் இட்டனர் இதில் எதுவும் உவமைத் தொகையாக இல்லை அனைத்தும் வினைத்தொகையே. இத்தகைய மாட்சிமைகளைச் செய்வதனால் சான்றோர் அவ்வாறு அழைத்தனர். உண்மையான உணர்வு அதில் இருக்கின்றது.

பெண்கள் விழி என்று சொன்னவுடனே, இங்கே குருநாதனைக் காட்சியிலே வைத்தோம். நாம் ஒரு குருநாதனிடம் போய், எனக்குத் தீட்சை செய்ய வேண்டும் என்று கேட்போம். அப்படிச் சொன்னவுடன் அவர் என்னென்ன தீட்சை செய்கின்றார். நயன தீட்சை, பரிச தீட்சை, மாசை தீட்சை என்ற மூன்று வகையான தீட்சை செய்வார்.

அதில் ஒன்று நயன தீட்சை. இந்தப் பெண் நம்மைக் கண்ணாலே பார்த்து உயர்த்தினால், அதற்கு என்ன தீட்சை என்று பெயர்? நயன தீட்சை தானே! வாழ்வு மலருகிறது. புதிய வாழ்வு தழைக்கிறது.

இதையே இன்னொரு வகையாகவும் சிந்திக்காலம். அம்மா ஒருவர் வந்தார்கள். நான் சாப்பிடுகின்றபோது பார்த்தார்கள். அவ்வளவுதான். பின்னர் உணவே பிடிக்கவில்லை. செடியெல்லாம் நன்றாக வளர்ந்து இருந்தன. ஒருவர் வந்தார்; பார்த்தார். கருகிப் போயின என்கிறோம். அப்படி ஒருவர் பார்த்தால் கரிந்து போகின்றது. ஒருவர் பார்த்தால் மலர்ந்து போகின்றது. அது போலவே சிலர் பார்வை கருகிய வாழ்வை தழைக்கச் செய்யும். அதற்கு அருட்பார்வை என்று பெயர். அத்தகைய பார்வை அமைந்த விழிகளை மலர்விழி என்றனர்.

ஆகையினாலே பெரிதும் உலக வாழ்க்கையில் அணுக்கமாகப் பெண்கள் இருப்பதனாலே, அவர்களே பெரிதும் ஆசாரிய மூர்த்தமாக அமைந்து, நம்முடைய வாழ்க்கையை மலரச் செய்வதனாலே, அவர்களை மலர்விழி என்றும், கயல்விழி என்றும், வேல்விழி என்றும் இன்னும் இதுபோன்ற பெயர்களை அவர்களுக்குச் சூட்டினார்கள் என்று கொள்ளுதல் வேண்டும். அதனால் காவி மலரை இங்கே கண்ணுக்கு உவமை காட்டினார்.

ஆசாரியனுடைய விழி மாணவனைத் தூய்மை செய்யும். ஞானத்தை ஊட்டியது முகம். கண்கள் தூய்மை

செய்கின்றன. கருணைதான் தூய்மை செய்யும். குற்றங்களையெல்லாம் களையும். குற்றங்களையும் குணமாகக் கொண்டு அவனை உயர்த்தும். அப்படிப்பட்ட விழிகள் என்னுடைய ஞானாசிரியனிடத்தில் விளங்குகின்றது என்ற கருத்தைச் சொல்லுகிறார். தான் ஞானாசிரியனைக் கண்டு மகிழ்ந்ததைச் 'சீர் வளர் காவிகள்' என்று சொல்லுகின்றார். கருணை பொழியும் கண்களைக் காவி மலருக்கு ஒப்பாகச் சொல்லுகின்றார்.

கண் என்றால் கருணை இருக்க வேண்டும். கருணை இல்லையென்று சொன்னால் கண்ணிருந்தும் பயனில்லை. இதற்காக "கண்ணோட்டம்" என்று ஒரு அதிகாரமே வைத்திருக்கிறார் திருவள்ளுவர். கண்ணுக்கு அணிகலமே கண்ணோட்டம்தான். அணிகலம் என்பது அழகுதானே! கண்ணோட்டத்திற்குக் காவி மலரை உவமை சொல்லலாம். முன்னே ஞானம் வழங்கிய தன்மையையும், பின்னால் கருணை வழங்கிய தன்மையையும் சுட்டிக் காட்டினார். இரண்டுமே ஈரம் உள்ளதனாலே, நீர்ப் பூக்களை உவமை காட்டினார்.

மூன்றாவது பூ. பூங்குமிழ். குருவளர் பூங்குமிழ். குரு என்றால் ஞானம் அல்லது ஒளி. அதை வளர்த்துக் கொள்ள வேண்டும். அது மூக்கு போல் இருக்கும் என்கிறார். அது உள் ஒளியை வ்ளர்த்தது. ஆசாரியனுடைய மூச்சு மாணவனுடைய உள் ஒளியை வளர்க்கும். பாரதியின் வாக்கை நினைவுபடுத்திக் கொள்ளலாம். "தந்தையர் நாடென்ற பேச்சினிலே ஒரு சக்தி பிறக்குது மூச்சினிலே" என்பார். மூச்சிலே சக்தி பிறக்குது என்று சொல்லுகிறார்.

மூச்சிலே ஆற்றலைத் தேக்கிக் கொள்வதற்குப் பிராணாயாமம் என்று பெயர். பிராணாயாமத்திற்கு ஆதாரமாக இருப்பது மூக்குதான். அதைக் குமிழ மலர் என்று சொன்னார்.

இந்த மலர் மலர்கின்ற இடத்திற்கு ஞான நிலம் என்று பெயர். இங்கே இறைவன் எப்போதும் ஞான நடனம் ஆடிக்கொண்டேயிருக்கின்றான். அதனாலே குருவளர் பூங்குமிழ் என்று சொல்லுகிறார். இந்த மூன்று மலர்களினாலே ஆசாரியனை ஞானபானுவாகப் பார்க்கின்றார். கருணைக் கடலாகப் பார்க்கின்றார். ஞான ஒளியை ஊட்டுகின்றவனாகப் பார்க்கின்றார்.

அடுத்து கோங்க மலரைச் சொல்லுகின்றார். கோங்கு பாலை நிலத்துக்குரிய மலர். இது மார்பகத்தைக் குறிக்கும். ஏன் மார்புக்குக் கோங்க மலரை ஒப்பிடுகின்றார்? அந்தக் கருவிக்கு என்ன பெயர் என்று தெரியுமா? கொங்கை. பெண்மையில் விளங்குகின்ற, முக்கியமான, அளப்பரும் ஆற்றல் தேங்கி இருக்கின்ற இடம் அது. கொங்கை, கோங்கு, கொங்கு. இந்தச் சொல்லை எல்லாம் ஏன் சொல்லுகிறேன் என்பதை நீங்களே உணர்ந்து கொள்ள வேண்டும். இப்படிச் சொல்லிப் பார்த்துக் கொண்டே போனால், "கொங்குதேர் வாழ்க்கை" என்னும் சங்க காலச் சொல் நினைவில் எழும். கொங்கு, என்பதற்கு சங்க காலத்தில் இரண்டு பொருள்கள் உண்டு. ஒன்று மணம்; மற்றொன்று தேன். இந்த இரண்டும் ஒரே பூவில் அமைந்திருக்கின்றது. அப்படி இரண்டு நலமும், அதாவது இகநிலை நலமும், பரநிலை நலமும் வழங்க வல்ல ஒரு கருவியாக அமைவதனாலே இதைக் கோங்கு என்று கோங்க மலருக்கு ஒப்பிட்டுச் சொல்லியிருக்கிறார்.

இகநலம், பரநலம் என்ற இரண்டையும் உணர்வினாலே ஒருங்கே தரவல்ல ஒரு கருவியாகத் திகழ்வது மார்பகம். இவள் இகநலம், பரநலம் என்ற இரண்டு நலங்களையும் தரவல்ல குருநாதனாக இருக்கின்றாள். அதனால்தான் சிலர் மார்போடு கட்டி அணைத்துக் கொள்ளுவார்கள். இது வாழ்க்கைக்கு இன்றியமையாததாக இருக்கின்றது. குழந்தைகளை அணைத்துக் கொள்ளுவது, நண்பர்களை அணைத்துக்

கொள்ளுவது, இவையெல்லாம் கூட அந்தக் குறிப்பைக் காட்டுவதுதான். ஒரு ஞானாசிரியன் ஒரு மாணவனை அணைத்துக் கொள்ளும் போது அந்த உணர்வோடு தான் அணைத்துக் கொள்ளுகின்றான். சும்மா அணைத்துக் கொள்ளுவதில்லை. அப்படி அணைத்துக் கொள்ளும் போது, திருவருளை நினைத்து அணைத்துக் கொள்ளுகின்றான். திருவருள் உள்ளே ஊடுருவிச் செல்லுகின்றது. இதையே உலகியல் புலவன் சொன்னால், "அவள் அணைத்தாள். அவளது மார்பகம் என் மார்பை ஊடுருவிச் சென்றது" என்று வரும். அது உலகியல் பொருளுடைய நோக்கம். அருளியலிலே அருள் ஊடுருவிச் சென்று உயிரை ஆட்கொண்டது. அப்படிப்பட்ட கருவிகள் அமைந்த மார்பைக் கோங்க மலரோடு ஒப்பிட்டுச் சொன்னார்.

கோங்க மலர் பாலை நிலத்துக்கு உரியது. நமது நாட்டில் பாலை நிலம் இல்லை. ஆயினும், முல்லை நிலமும், குறிஞ்சி நிலமும் தன்னிலைமை திரிந்து வறட்சி அடைகின்றபோது பாலை என்று பெயர் கொள்ளும்.

முல்லை, தவநிலைக்கு உரிய நிலம், குறிஞ்சி இரண்டறக் கலந்து நிற்பதற்கு உரிய நிலம். ஓர் உயிர் இறைவனை எண்ணி அவன் வருகைக்கு ஏங்கி நிற்கவேண்டும். வந்தபின் அவனோடு இரண்டறக் கலந்து நிற்க.வேண்டும். இந்த நிலைமாறுகின்றபோது தான் ஒரு சீவனின் வாழ்க்கை பாலை நிலமாக மாறுகிறது. அப்பாலை வெற்றுப் பாலையாகாமல், கழிப்பாலையாக அமைவது மனிதப்பிறப்பு. இங்கு மலரும் கோங்க மலரே குருநாதன் மார்புக்கு ஒப்பாகக் கூறினார். குருநாதன் எதிர்ப்பட்ட வாழ்வு கழிப்பாலை. குருநாதன் எதிர்ப்படாத வாழ்வு வெற்றுப்பாலை.

அடுத்து காந்தள் மலரைச் சொல்லுகின்றார். இது கையைக் குறிக்கும். இந்தக் காந்தள் மலருக்கு ஐந்து இதழ்கள்

உண்டு. வரையாது தேன் சொரிந்து கொண்டேயிருக்கும். வண்டுகள் உண்ண உண்ணத் தேன் சுரந்து கொண்டே -யிருக்கும். ஆசாரியனுடைய கைகள் ஆசி கூறும். ஒவ்வொரு முறையும் மாணவனை ஆசாரியன் ஆசிர்வதிக்கும் போதெல்லாம் அருள் சுரந்து கொண்டே-யிருக்கும். அந்த அருள் மெய் வாய் கண் மூக்கு செவி என்ற ஐந்திலும் உள்ள குறைகளை அகற்றும். தன் நிறைகளைத் தேக்கும். அருள் உணர்வை நிரப்பும். அதனால் உலகியல் பயனற்றது என உணருமாறு செய்யும். மெய்யுணர்வில் ஈடுபடுத்தும்.

மாணிக்கவாசகர் ஓர் அற்புதமான கொடியைப் பார்க்கிறார். அந்தக் கொடியில் ஐந்து வகையான வெவ்வேறு மலர்கள் மலர்ந்து தன்னை வியப்பில் ஆழ்த்தியது. வியந்து சொல்லுகிறார். அது என்ன வியப்பு? ஒரு காட்சியைக் கண்டால் அதன்பால் ஆசை பிறப்பதே உயிருக்கு இயல்பு. ஆனால் இந்தக் காட்சியில் ஆசை பிறக்கவில்லை. மனம் அசைவற்று நின்றது. அலைவுகளை அகற்றியது. தன் அழுக்குகள் அனைத்தையும் களைந்தது. தன்னை வெற்றி கண்டது.

இங்கே கொடி என்பது நடுநாடியே. ஐந்து மலர்கள் என்பது ஆதாரங்களே. அசையும் நிலை என்பது ஆறாவது ஆதாரத்தை. இவை அனைத்தும் தன் அனுபவநிலை வெளியீடாகும்.

மருவளர் மாலையொர் வல்லியின் ஒல்கி - இது ஆறாவது நிலையை உடையது. மெய்யுணர்வாகத் திகழ்வது. மேற்கூறிய ஐந்தும் திரண்டு, அதற்கும் மேல் ஏதோ ஒரு உணர்வு மின்னி மிளிர்ந்து, உணர்விலே நடந்து மெய்யுணர்வைத் தந்துவிட்டது. இந்த மெய் உணர்வினால் ஐவாய் அவாவாகிய காமம் என்ற ஒன்று இல்லாமலே போய்விட்டது. அப்படிப்பட்ட கொடி ஒன்று என் உள்ளே திகழ்கின்றது.

இந்தப் பாடலிலே மணிவாசகப் பெருமான் இறைவனைப் பெண்ணாக உருவகம் காட்டினார். அவள் முகம் தாமரையாக இருந்தது. கண்கள் காவி மலராக் இருந்தன. மார்பு கோங்க மலராகத் திகழ்ந்தது. மூக்கு பூங்குமிழ் மலராக அமைந்தது. கைகள் காந்தள் மலராக இருந்தன.

மூலாதாரத்திலே மலர்ந்தது தாமரை. சுவாதிஷ் -டானத்திலே திகழ்ந்தது நீலம். இப்படி ஒவ்வொரு ஆதாரங்களிலே மலர்ந்த நிலைகளைத்தான் அவர் சொல்லியிருக்கின்றார். யோக நிலையிலே அவர் நினைக்கின்றபோது மூலவெளிமண். அதில் விளைந்தது தாமரை. நீர்நிலையாகிய சுவாதிஷ்டானத்திலே விளைந்தது காவி மலர். அதற்கு மேல் மணிபூரகத்திலே விளைந்தது கோங்க மலர். அது தீயிலே மலர்ந்தது. அதற்குத் தில்லை என்று பெயர். அதற்கு மேல் வருகின்றபோது காற்று வெளியாகிய அநாகதம். அது நான்காவது ஆதாரம். அங்கே மலர்ந்தது குமிழ மலர். ஐந்தாவது ஆதாரம் புருவமத்தி. அங்கே மலர்ந்தது காந்தள் மலர். ஆறாவது ஆதாரம் அன்பு வெளி. அன்பு வெளியில் அளவற்ற காட்சியில் அனைத்துப் புலன்களும் அடங்கி நின்ற காட்சியைக் கண்டார். அதை ஒல்கி அன நடை என்று சொல்கிறார். இதற்கு மற்றொரு பெயர் அம்ச நடை அம்சம் என்றால் அன்னம். அன்னம் என்று சொன்னாலே ஞானம் என்று பொருள். சோறு என்று சொன்னாலும் ஞானம் என்றுதான் பொருள்.

நாம் சோறு என்று சொன்னால் உண்ணும் உணவை நினைத்துக்கொண்டு இருப்போம். சோழநாடு சோறுடைத்து என்றால் ஞானம் உடையது என்றுதான் பொருள். சோறு என்று சொன்னாலும், அன்னம் என்று சொன்னாலும் ஞானம் என்றே பொருள். அந்த ஞான அனுபவத்தை என்னுடைய ஆசிரியன் எனக்கு வழங்கினான். அது காட்சியாக இருந்தது என்று

சொல்லுவார். இந்த அனுபவத்தை "அன்னம் பாலிக்கும் தில்லைச் சிற்றம்பலம்" என்று திருநாவுக்கரசு பெருமானும் உணர்த்தினார்.

வாழ்க்கைச் சுவை கூடவேண்டுமென்றால் ஆறு சுவைகள் தேவை. உணவுக்குச் சுவை எத்தனை? ஆறு. அறுசுவை உணவு என்றுதான் சொல்லுவார்களே தவிர ஐந்து சுவை என்று சொல்வதில்லை. ஐந்து திணைகளைப் பற்றிப் பார்த்தோம். அதிலே குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என்று ஐந்து நிலங்கள் வருகின்றன. இந்த ஐந்து நிலங்களுக்கும் ஒவ்வொரு குறிப்புச் சொல்லியிருக் கிறார்கள். குறிஞ்சி என்று சொன்னால் கூடுதல். முல்லை என்றால் இருத்தல். மருதம் என்றால் மகிழ்தல். நெய்தல் என்றால் ஊடுதல். பாலை என்றால் பிரிதல் என்று பொருள்.

இதில் சொல்லியிருப்பது போல மலை உச்சிக்குப் போய் கூடிக் கொள்வாருமில்லை. கடற்கரைக்குப் போய் ஊடிக் கொள்வாரும் இல்லை. அப்படியென்றால் அதற்கு என்ன அர்த்தம்? ஏன் அப்படிச் சொல்லி வைத்திருக் கிறார்கள்? கூடினால் குறிஞ்சி. அப்படி உணர்வின் விளிம்புகளைக் காட்டுவது. அந்த உணர்வின் விளிம்பு -களைத்தான் நிலம் என்று சொன்னார்கள். அந்த நிலத்திற்குத் திணை என்று பெயரிட்டார்கள். திணை என்பதற்கு ஒழுக்கம் என்று பொருள். ஆன்மா ஒரு உயர்ந்த நிலையை அடைய வேண்டுமென்றால் ஐந்துவகையான ஒழுக்கங்களைப் பெற்றிருக்கவேண்டும். ஐந்திணைதான் அன்புடைக் காமம் என்று சொல்லியிருக்கின்றார்கள். ஐந்திணைதான் சைவம். அதற்கு முன்னால் இருப்பதும், பின்னால் இருப்பதும் அசைவம்.

முன்னுள்ளது கைக்கிளை. அதை ஒரு தலைக்காமம் என்பர். ஒருவர் விரும்புவார். மற்றொருவர் விரும்ப மாட்டார். இது ஒரு தலைக் காமமாகும். இருவர் விரும்பின்

அன்பாகும். ஒருவர் விரும்பின் அது ஆசையாகும். அது ஒழுக்கமாகாது. ஒழுக்கத்துக்குப் புறம்பானது.

பின்னுள்ளது பெருந்திணை. அது பொருந்தாக் காமம் எனப்படும். அறிவு, அழகு, இளமை, இவற்றால் நிறைந்த ஒருவரை, இவை ஒன்றுமில்லாத ஒருவர் தன்பால் உள்ள பொருள் கொண்டோ அல்லது தனக்குள்ள உறவுமுறையைக் கொண்டோ, மேலும் தனக்கு வாய்த்த வலிமை கொண்டோ, கலந்து வாழ நினைப்பது பெருந்திணை எனப்படும். இது பொருந்தவில்லை ஆயினும் சமுதாயத்தில் இவ்வழக்கு பெருகி இருப்பதால் பெருந்திணை என்று கூறினர். இவை இரண்டுமே அன்புக்குப் புறம்பானவை. எனவே அன்பே சைவம். அன்புக்குப் புறம்பான அனைத்தும் அசைவமே.

ஒரு மனிதன் எப்போதும் இறைவன் நினைவோடு கலந்திருக்கவேண்டும். எப்போதும் கலந்திருக்கவேண்டும். என்னங்க இப்படிச் சொல்லுகிறீர்களே! நாங்கள் உலகப் பணிகளைக் கவனிக்க வேண்டாமா என்றால், உலகப் பணிகளைக் கவனித்துக் கொண்டே அவனையும் நினைத்துக் கொண்டிருக்க வேண்டும். அதாவது அவன் நினைவோடே எப்பணியையும் செய்யவேண்டும். அதற்குக் குறிஞ்சி என்று பெயர். அந்த வாய்ப்பு தனியே வாய்க்காதபோது, அப்படியே ஏங்கி நிற்கவேண்டும். அதற்கு இருத்தல் என்று பெயர். அதாவது தவம் இருத்தல் என்று பொருள். அது முல்லை. அப்படித் தவம் இருக்கும் போது யாரை நோக்கியிருக்கின்றோமோ அவர்கள் வந்தால் அவர்களுடன் கலந்து மகிழ்தல் வேண்டும். இது மருதம். மகிழ்ந்து கொள்ளுகின்ற போதுதான் ஆபத்தே வரும். மகிழ்ச்சியில் தன்னை மறந்து பேச்சுக் கொஞ்சம் அதிகமாகி ஊடல் வரும். இது நெய்தல். ஊடல் வந்தவுடனே பிரிவு வரும். இதுவே பாலை. இதை "இகழ்ச்சியின்

கெட்டாரை உள்ளுக தாம்தம் மகிழ்ச்சியின் மைந்துறும் போழ்து" என்பார் திருவள்ளுவப் பெருந்தகை

மகிழும் நேரத்தில், மகிழ்ச்சியைத் தருவோரை அன்பினாலோ, ஆசையினாலோ அவர் தகுதியை மறந்து இகழ்வனவாகிய மொழிகளைச் சொல்லுவோம். அதனால் அது தாங்காது சினந்து நம்மை விட்டு நீங்கும் நிலையும் ஏற்படும். இந்தப் பிரிவு எப்போது வருகின்றது தெரியுமா? கூடலும், இருத்தலும் மாறுபட்டு இருக்கும்போது பிரிவு வரும். முல்லையும், குறிஞ்சியும் முறைமையில் திரிந்து பாலையென்பதோர் படிவம் கொள்ளும். முல்லை என்பது இருத்தல். குறிஞ்சி கலத்தல். ஒன்று இறைவனோடு கலந்திருக்க வேண்டும். இல்லையென்றால் அவன் வருகைக்காக ஏங்கி நிற்கவேண்டும். இந்த இரண்டும் இல்லாதபோது மகிழ்ச்சிக்கு வருகின்றோம். இந்த மகிழ்ச்சியும் இல்லாதபோது முறைமை திரிகிறது. திரிந்தநிலை பாலையாகும். பாலை என்பது பசுமையும், தழைப்பும் இல்லாத வறண்டநிலை.

இறைவனை நினைத்திருந்தால் நலம். இறைவனைக் கலந்திருந்தால் சுகம். அவன் கொடுத்த நலங்களை இருந்த போதும், இல்லாதபோதும் நினைத்து மகிழ்ந்திருந்தால் நல்லது. அதிலே பிணக்குவரும். அப்போது பிரிவு வரும். ஊடல் என்பது ஒருவருடைய உணர்வை மற்றவர் பரிமாறிக் கொள்ளுவதுதான். ஊடல் என்றால் சண்டை என்று அர்த்தமல்ல. ஊடுருவல் என்று வைத்துக் கொள்ளுங்கள். ஊடல், ஊடுதல், ஊடுருவல் என வரும். ஒருவர் உணர்வில் இன்னொருவர் உணர்வு ஊடுருவுதல். இதற்குத்தான் ஊடல் என்று பெயர். இறைவன் உணர்வு நம்மிடத்திலும், நம்முடைய உணர்வு இறைவனிடத்திலும் ஊடுருவுதல். அப்படிக் கலந்து பழகவேண்டும்.

அந்த ஊடலுக்கும் ஒரு காரணம் உண்டு. இதை வாழ்க்கை முகமாகச் சொன்னால் உங்களுக்குப் புரிந்து விடும். கணவன் மனைவி இருவரும் வாழ்ந்து கொண்டிருக்

கின்றார்கள். அப்படி வாழ்கின்றபோது... கணவன் அடிக்கடித் தொல்லை கொடுத்துக் கொண்டேயிருந்தான். எப்போதும் ஆண்மக்களுக்கு அவசரம் அதிகம். நாம் எதற்காக இந்த வாழ்க்கையை மேற்கொண்டிருக்கிறோம் என்பது கணவனுக்குத் தெரியவில்லையே என்று மனைவிக்குக் கவலையாக இருந்தது. யாரும் இல்லாத நேரத்தில் கொஞ்சம் காலால் ஒதுக்கினாளாம் மனைவி. இதற்குக் கால் மாற்றுதல் என்று பெயர்.

படித்தவர்களுக்கு இது தெரியும். இதற்கு என்ன அர்த்தம் என்றால், "நீ பற்ற வேண்டியது திருவடி. என்னைப் பற்றிக் கொண்டிருக்கிறாயே! இந்தப் புலால் உடம்பைப் பற்றி பொய் உணர்வைப் பெருக்கிக் கொண்டிருக்கின்றாயே! பற்ற வேண்டியது திருவடி" என்பதை உணர்த்துவதற்காக ஏற்பட்டதே ஊடல். அதனாலே கால் மாற்றுதல் என்று வைத்தார்கள். பெண்மகள் காலால் உதைக்கின்றாளே என்று ஒதுங்கிப் போய்ச் சிந்திக்க வேண்டும் என்பதற்காகத்தான் ஊடல். இல்லாவிட்டால் கையால் ஒதுக்க மாட்டார்களா? மிகவும் நுட்பமான செய்தி இது. அவர்கள் அறியாமல், நாமும் அறியாமல் மிகவும் நுட்பமாக நடக்கின்ற செய்தி. இறைவனுடைய அருள் அப்படி உணர்த்துமாறு வைத்திருக்கின்றது.

திருவடியைப் பற்றி வாழ்வதுதான் வாழ்க்கை. அந்த வாழ்க்கையை அடைவதற்காக ஒருவருக்கொருவர் உபகாரமாக இருத்தல் வேண்டும். அப்படி இல்லாவிட்டால் அதற்கு வாழ்க்கை என்று பெயரல்ல. இந்த ஐவகையான உணர்வும் கலந்து, அதற்கு மேல் மெய்யுணர்வில் கலந்தால்தான் அந்த வாழ்க்கை நிறைவானது.

மலையிலிருந்து கிடைப்பன மணப்பொருட்கள். காட்டிலிருந்து பால்வளம் கிடைக்கிறது. ஆடு மாடுகள் அங்கிருப்பதால். மருதநிலம், நெல் முதலிய விளை பொருட்களைத் தருகிறது. கடல், முத்து, சங்கு, மீன் முதலானவைகளை அளிக்கிறது. இந்த நான்கு வகை

நிலங்களிலிருந்தும் பொருட்கள் கிடைத்து வாழ்க்கைக்குப் பயன்படுகின்றன. இந்த நான்கும் பயன்பட வேண்டு-மானால் எரிபொருள் வேண்டும். அந்த எரிபொருள் பாலையிலிருந்து கிடைக்கின்றது. முல்லையும், குறிஞ்சியும், கோடைக்காலத்திலே முறைமை திரிந்து, காய்ந்து போனதாலே விறகு கிடைக்கின்றது. அந்த ஐந்தும் புற இயல் வாழ்க்கையை நிறைவு செய்கின்றன.

அப்படி அக இயல் ஆன்ம வாழ்க்கையை நிறைவு செய்வது இணைதல், இருத்தல், மகிழ்தல், ஊடல், பிரிதல் இவை ஐந்தும் அகநிலை ஆன்ம வாழ்க்கையை நிறைவு செய்கின்றன. பிரிவு என்ற பாலையே அகவாழ்வுக்கும் எரிபொருளாக இருந்து ஆன்மாவைப் பக்குவப்படுத்து கிறது. ஆன்ம பக்குவம் பிரிவினாலேயே ஏற்படுகின்றது. ஆன்ம அழுக்கை எரித்துத் தூய்மை செய்வது பிரிவு என்ற எரிபொருள். ஆக இந்த ஐந்துவகையான நெறிகளால், ஒழுகலாறுகளால் ஆன்ம நிறைவு ஏற்படும். ஒரு ஒழுக்கத்தால் மட்டும் மனிதன் நிறைவடைய முடியாது. ஐந்து புலன்களுக்கும் ஐந்து வகையான ஒழுக்கம். ஐந்து புலன்கள்தான் ஐந்து திணைகள். ஐந்து திணை ஐந்து வகையான ஒழுக்கம். ஐவகை ஒழுக்கம்தான் ஆன்ம நிறைவு. இந்த ஆன்ம நிறைவைத் தரும் காட்சிதான் காட்சியென்று இங்கே பேசப்படுகின்றது. அந்தக் காட்சியின் வடிவாக இருந்தவளும், குருவாக நின்றதும், "அவளே" என்று பொருள்.

திரு - ஞானம், செல்வம், கண்டாரால் விரும்பப்படும் தன்மை. குருவானவன் சிவஞானத்தை நமக்கு ஊட்டுவதற்காக முன் வைத்ததாலே திரு எனப்பட்டது. அதையே திருவளர் தாமரை என்று சொன்னார்.

காவி கருணையைப் பொழிந்ததாலே, கருணையைப் பொழிந்து ஆன்மாவைத் தூய்மை

செய்ததாலே, சீர்வளர் காவி என்று சொன்னார். இவையெல்லாம் உள்ளுக்குள்ளேயே நிகழ்ந்து கொண்டிருக்கின்ற செய்தி. குரு - ஆசிரியத் தன்மை. உள்ளுக்குள் நிகழ்ந்து கொண்டிருக்கின்ற மூச்சானது ஆசிரியத் தன்மையிலிருந்து பிராணாயாமத்தை உணர்த்தியது. குரு என்பது முழுச்சொல் பிரிக்கமுடியாதது. சமஸ்கிருத மொழியிலே குரு என்ற சொல் இருக்கின்றது. அதைப் பிரித்துப் பொருள் கொள்ளுகிறார்கள். அது அவர்களுக்குச் சரி. நமக்குப் பொருந்தாது. குரு, நிறம், உரு ஒரு பொருளெனத் தொல்காப்பியம் கூறும். குரு என்பது தமிழ்ச்சொல். குரு என்பதற்கே ஒளி என்றும், ஆசிரியத் தன்மை உடையது என்றும் பொருள். ஆசிரியன் என்று சொன்னாலே அறியாமையை நீக்கி, அறிவை ஊட்டுபவன் என்று அர்த்தம். அதுவும் ஞானத்தை உணர்த்துவதாலே ஆசிரியத்தன்மை. ஞானபூமியில் நின்று, சீவனுக்கு ஞானத்தை உணர்த்துகின்றதாலே ஆசிரியனைக் குரு என்று சொன்னார்கள்.

கோங்கு - கோங்கு பொன்னிறமாய் இருப்பது. அகன்று விளங்குவது. பெண்கள் மார்புக்கு உவமையாகச் சொல்லப்பட்டது. பெண் என்று சொன்னது எதற்காக என்றால் அதில் இரண்டு பொருள்கள் இருக்கின்றன. அதைக் கொஞ்சம் விளக்கமாகச் சொல்லவேண்டும். அது மிகவும் முக்கியமான செய்தி. இறைவன் படைப்பில் எந்தக் கருவிக்கும் உயர்வு தாழ்வு சொல்லக்கூடாது. இறைவன் படைத்திருக்கிறான். இவற்றை உயர்வு தாழ்வு சொன்னால் அது நம்முடைய அறியாமையைத்தான் குறிக்கும். அந்தக் கருவிகளில் எதையாவது தாழ்வு என்று சொன்னால் அது நமக்குள்ளே எழுந்த தாழ்வே தவிர அவன் தாழ்த்தவில்லை. அப்படி நீங்கள் தாழ்வான கருவி என்று எதையேனும் சுட்டிக் காட்டுங்கள்; அதைப் பற்றிய விளக்கத்தை எண்ணிப் பார்க்கலாம்.

மலம் போகின்ற வாயில் தாழ்வான பகுதியில்லையா? என்றால், சரி, தாழ்வானதாகவே வைத்துக் கொள்ளுவோம். அந்த வாயில் அடைந்து விட்டால் என்ன செய்வீர்கள்? சிறுநீர் போகின்ற வாயில் தாழ்வானது என்று சொன்னால், அந்த வாயில் அடைந்து சிறுநீர் போகாமல் தடைப்பட்டால் என்ன செய்வீர்கள்? உயிருக்கே ஆபத்தாக அமைந்துவிடும். அதனால்தான் முக்கியமான கருவிகளை மூடி வைத்திருக்கிறார்கள். உயர்ந்த பொருளை எப்போதும் மூடி வைத்திருப்பார்கள். பாதுகாப்பாக வைத்திருப்பார்கள். அப்படி மூடியும், பாதுகாத்தும் வைத்திருப்பதால் அதைத் தாழ்வானது என்று எண்ணிக் கொள்ளக்கூடாது. இறைவன் தன் படைப்பில் உள்ள உயர்ந்த பொருள்களையெல்லாம் நம் உறுப்புகளாக வைத்திருக்கின்றான். அந்தப் பொருளையும் நாம் சிந்திக்கலாம்.

கோங்கு என்றால் மணம், தேன். அது சீவனுக்கு மகிழ்ச்சியைத் தருதலும், சீவனுக்கு நிலைபேறு தருதலும் செய்கின்றது. இந்த இரண்டு தன்மையைத் தரவல்லவன் எவனோ அவனே குருநாதன். அந்தத் தன்மைகளை பெண்மையின் மூலம், அவள் மார்பின் அணைப்பிலே தருகின்றான்.

காந்தள் மலர் அருள் சுரக்கும் மலர். பகை முழுதும் அகற்றி அருள் புரிகின்ற தன்மை உடையது. பகை என்றால் என்ன? நமக்குத் தெரியவில்லை. அதனால் நமக்கு என்ன கெடுதி விளையும்?

அழுக்காறு என்று ஒரு பாவி போதும்; வேறு பகையே நமக்குத் தேவையில்லை என்பார் திருவள்ளுவர். அத்துடன் காமம் வெகுளி மயக்கம் என்று ஆறுவகையான பகைகள் நம்முள்ளே இருக்கின்றன. இத்தனையும் அகன்ற பின்புதான் அருள் சுரக்கும். அருள் சுரந்தபிறகு, அவன் நமக்குள்ளே ஒரு மின் ஆற்றலாக நெகிழ்ந்து எழுந்து,

மேலை வெளி என்றுச் சொல்லுகின்ற மேல் ஆதாரத்தில் நின்று ஒளியை வீசி, தன்னலமாகிய எண்ணங்கள் முழுமையும் அழித்துவிடுகின்றான். அழித்து அந்த எண்ணத்தை வெற்றி கொள்ளுகின்றான். காமத்தை வெற்றி கொள்ளும் எண்ணத்தை நமக்குள்ளே தருகின்றான். இதைத் திருவள்ளுவர்

"உரனென்னும் தோட்டியான் ஓரைந்தும் காப்பான்
வரனென்னும் வைப்பிற்கோர் வித்து" (24)

என்பார். எல்லாவற்றிற்கும் வித்தாகி நிற்கின்ற, சான்றுக்குரிய ஒரு பெரியவரை அப்போதுதான் நாம் பார்க்கமுடியும். அவன் உரனென்னும் தோட்டியாக நிற்கின்றான். உயிரோடு உறவு கொண்டு அதனால் ஏற்படுகின்ற நலமே உரம். உரம் என்றால் வெறும் அறிவு என்றும், ஞானம் என்றும் எழுதிவிடக் கூடாது. உயிரோடு உறவாடினால், அதற்கு நலம் சேர்த்தால் அது உரம் எனப்படும். நீங்கள் எல்லாம் எனக்கு உறவு. வல்லின 'ற' போட்டுக் கொள்ளலாம். அவன் மிகவும் மென்மையானவன், நுட்பமானவன். அதனால் இடையின 'ர' போடவேண்டும். இந்தக் குறள் வருகின்ற அதிகாரம் "நீத்தார் பெருமை".

ஆக, நீத்தார் என்பவர்கள் இறைவனையும், அவன் கருணையையும் உணர்ந்து ஒழுகிக்கொண்டு, உலகுக்கும் வழிகாட்டிக் கொண்டிருப்பவர்கள். அவர்கள் உள்ளத்திலே கொடியெனத் தழைத்தான். உரமெனத் திகழ்ந்தான். அவனால்தான் காமத்தை வெல்லமுடியும்; தன்னலத்தை வெல்லமுடியும்; உட்பகையை அழிக்க முடியும். அப்படி உட்பகையை அழித்த பெரியவர்களுக்குக் காவியம் பாடியவர்தான் சேக்கிழார். அழிக்காதவர்களுக்கெல்லாம் காவியம் பாடியவர்கள் மற்றவர்கள். புலன்களை வென்றவர்களுக்குக் காவியம் பாடியவர் சேக்கிழார். அதனால்தான் அதற்குப் பெரியபுராணம்

என்று பெயர் வந்தது. அவர்கள் தான் மாபெரும் வீரர்கள். பேராண்மைக்காரர்கள் இல்லையா? அதனால் ஒப்பற்ற வீரர்கள். ஆகவே இதில் ஐந்து நிலங்கள், ஐந்து புலன்கள், ஐந்து திணைகள், ஐந்து காட்சிகள் சொல்லப்பட்டன. அதனால் ஒவ்வொரு மனிதனும் பெறுகின்ற அனுபவங்களும் சொல்லப்பட்டன.

இப்போது, "வாசகர் கண்ட வடிவழகி" நமக்கு என்னென்ன தந்தாள் என்பதைப் பார்க்கலாம்: காட்சி தந்தாள்; ஐவகைப் புலன்களை நிறைவு செய்தாள்; உள் நிலைகளிலே மலர்ந்தாள்; பல்வகையான நலங்களை ஆன்மாவிலே தேக்கினாள். இக நலத்தை உணர்த்தினாள்; பர நலத்தில் உயர்த்தினாள். அப்படி உயர்த்தி, தன்னலமாகிய எண்ணங்கள் முழுமையும் அகற்றி, ஒரு உயர்ந்த கொடியையும் நமக்குத் தந்தாள். இந்தக் கொடியைத்தான் சித்திவளாகத்தில் ஏற்றியிருக்கிறார்கள். சும்மா ஏதோ உணராமல் கொடியேற்றி வைத்திருக்கிறார் வள்ளல்பெருமான் என்று எண்ணிக் கொள்ளக்கூடாது. அந்தக் கொடிதான் காமன்தன்னை வென்ற கொடி.

"தில்லைச் சொல்லே விழைதற் பொருட்டு" என்பது தொல்காப்பியம். எல்லோராலும் விரும்பப்படுகின்ற பண்பு எவரிடத்தேனும் இருக்குமானால், அந்தப் பண்புக்குத் "தில்லை" என்று பெயர்.

தில்லைதான் தலங்களுக்கெல்லாம் பொது நுட்பங்களுக்கு நுட்பமாகிய தலம். தலங்கள் அனைத்திற்கும் ஆற்றலைத் தந்துத் தழுவி நிற்கும் ஒளி மயமானது; அனைத்தையும் ஒளிரச் செய்யும். தூய்மையானது; எதையும் தூய்மையுறச் செய்யும். வாடாதது; எதன் வாட்டத்தையும் போக்க வல்லது. பேதமற்றது; பேதமற்ற தன்மையைப் போதிப்பது. உணர்வுமயமானது. தடையின்றி எதிலும் ஊடுருவும் இயல்புடையது. அளப்பரும் காரண காரிய இயக்கத்தின்

நிலைக்களமாக விளங்குவது. அனைத்துப் பூதங்களுக்கும் வளர்ந்து வாழ்விக்கும் வானுக்குத் தலமானது.

இத்துணைச் சிறப்பு வாய்ந்த தில்லையைச் சார்ந்து வாழ்ந்ததால் மணிவாசகப் பெருமான் இருளகன்று ஒளியில் கலந்தார். அந்த அருள் அனுபவத்தை நமக்குச் சொன்னார். நாமும் தெளிந்து, அறியாமை என்னும் இருளினின்று விலகி, ஞான ஒளியில் கலந்து வாழ அப்பெருமானின் பாத கமலங்களை இறைஞ்சுவோம்.

இது சாதாரணமாக ஒரு ஆணுக்கும், பெண்ணுக்கும் நடைபெறுகின்ற உலகியல் கதைபோல் இல்லாமல், உயர்ந்த ஒளிக்கும், உணர்வுக்கும் நடந்த ஒரு உறவு முறையைப் பேசி, ஆண்டவனுக்கும், அடியவர்க்கும் நடக்கின்ற உறவை வைத்துப் பேசப்பட்ட ஒரு ஞானக் கருத்து; ஞான நிலையம் என்று சொல்லி "ஒளியில் கலத்தல்" என்ற தலைப்பை இத்துடன் நிறைவு செய்கின்றேன்.



# உ. உணர்வில் கலத்தல்

'வாசகர் கண்ட வடிவழகி' என்ற பெருந்தலைப்பின் கீழ் ஒளியில் கலந்த நிலையை நேற்றுப் பார்த்தோம். தோற்றத்தாலே நெறிகளை உணர்த்தி, அசைவுகளாலே புலன்களை அடக்கி, ஆற்றலினாலே ஆதாரநிலைகளைத் திறந்து, அனைத்தையும் அவித்து ஆட்கொண்ட நிலையை மேலே சிந்தித்தோம்.

இந்தக் காட்சியைப் பார்த்து மகிழ்ந்து நின்ற ஒரு தலைமகன் தலைவியுடைய பேரழகையும், பிறவற்றையும் பார்த்து ஐயுறுகிறான். காட்சி அளவாலே இத்தனை நலங்களையும் நமக்கு ஊட்டிவிட்டாள். அசைவளவிலேயே அனைத்து நலங்களையும் தேக்கி விட்டாள். பிறகு உள் உணர்வாகிய கிளர்ச்சிகள் அனைத்தும் எழுமாறு செய்தாள். இவள் சாதாரணப் பெண்ணாகத் தெரியவில்லை. இவள் எங்கே இருக்கின்றாள்? இவளுடைய இடம் எது? இதுவரையிலும் மண்ணுலகத்திலே காணமுடியாத ஒரு பெண் நலமாகத் திகழ்கிறதே இது என்று எண்ணுகிறான் தலைமகன். அப்படி எண்ணியதால் உள்ளத்துக்குள்ளே எழுந்தது ஐயம். அதுவே இன்றைய தலைப்பு. அந்த ஐயம் ஒரு உணர்வில் உணர்வாய் மலர்ந்திருப்பதனாலே "உணர்வில் கலத்தல்" என்ற தலைப்பை எடுத்துக்கொண்டோம்.

ஒளியில் கலந்தது நேற்று. அந்த ஒளி, உணர்வை உண்டாக்கும். அந்த உணர்விலே கலந்து கொள்ளுகின்ற நிலை என்னவென்று இன்று பார்ப்போம்.

ஒருவருடைய தோற்றத்தைப் பார்த்து, அதில் நாம் ஈடுபட்டுவிட்டாலே போதும், நம்மை அறியாமல் உள்ளத்தில் கிளர்ச்சிகள் உண்டாகி, வியப்பை உண்டாக்கிவிடும். மற்றவர்களுக்கு அது வியப்பாக இல்லாமல் இருக்கலாம். ஆனால் நமக்கு அது வியப்பாக

இருக்கும். ஒரு தெலுங்குப் பழமொழியை இங்கே சுட்டிக் காட்டினால் உங்களுக்குச் சுலபமாக விளங்கிவிடும்.

"ராஜூ மெச்சின ரம்ப" என்பார்கள். எத்தனையோ பேர் எதைஎதையோ மெச்சினாலும்; அவன் விரும்பியது மிகப் பெரிதாகத் தெரியும்.

நேற்று எதிர் வந்த தலைவி, இவனை மிகவும் கவர்ந்து விட்டதாலே, இந்த ஆண்மகன், மிகவும் கிளர்ந்தெழுந்த உணர்ச்சியினாலே, இப்படிப்பட்ட அற்புதக் காட்சி நமக்குக் கிடைப்பது அரிது. ஆனால் கிடைத்திருக்கிறதே என்று ஐயப்படுகின்றான். இப்படிப் பட்ட காட்சி எங்கேயிருக்கின்றது? இப்படிப்பட்ட அழகு எங்கேயிருக்கிருக்கின்றது? இப்படிப்பட்ட தோற்றம், இப்படிப்பட்ட செயல் திறம் உடைய ஒரு வடிவம் எங்கு இருக்கின்றது? என்று ஐயம் எழுகின்றது. இதைப் பேரின்ப உரையாசிரியர் என்ற பெரியார், "திருமேனியை வியந்து ஐயமுறல்" என்று சொல்லுகின்றார்.

இந்தத் தோற்றத்தைப் பார்த்து, வியந்து, ஒரு ஐயம் வந்துவிடுகின்றது. எத்தனையோ பொருட்களைக் கண்ணினாலே பார்த்துக் கொண்டிருக்கின்றோம். அத்தனைப் பொருள்களும் ஒவ்வொரு காலத்தில் நம்மைக் கவருகின்றன. ஒரே காலத்தில் கவருவதில்லை. தண்ணீர் எந்தத் தன்மையில் இருந்தாலும், தாகம் வருகின்றபோது தான் விரும்பு கின்றோம். அப்போது தண்ணீரில் சுவை உவர்ப்பாக இருக்கிறதா என்று கூடப் பார்ப்பதில்லை. உவர்ப்பிருந்தாலும் தெரிவதில்லை. பசி வந்திட்டபோது, உப்பில்லா உணவு கூட அமிர்தமாகத் தெரியும். தேவைப் படுகின்ற போதுதான் அந்தப் பொருள் உயர்வாகக் காணப்படுமே தவிர, தேவை இல்லை என்று வருகின்ற போது எவ்வளவு உயர்ந்த பண்டங்களாக இருந்தாலும் அதில் நமக்கு விருப்பம் வராது. அதன் திட்ப நுட்பங்களையும் உணரமாட்டோம்.

ஆன்மாவிலே ஒரு கிளர்ச்சி வருகின்றபோது அதற்கு ஒரு பக்குவம் வந்திருக்கிறது என்று அர்த்தம். அந்தத் தலைமகளுக்கும் தலைவனை அடைகின்ற பக்குவம் வந்திருக்கின்றது. இந்தத் தலைவனுக்கு அந்தத் தலைமகளை விரும்புகின்ற பக்குவம் வந்திருக்கின்றது. அந்தப் பக்குவத்தினால் ஒருவரையொருவர் கண்டவுடனே ஐக்கியமானார்கள். அதில் விளைந்த கிளர்ச்சியினால், ஐயம் எழுகின்றது. இது எங்கே யிருக்கின்றது? இது நமக்குக் கிடைக்குமா? என்று ஐயம் வருகின்றது.

உலகியலான பருவத்தையும், அருளியலான பருவத்தையும் சொல்லிவிட்டுப் பிறகு நூலுக்குள்ளே போவோம். உலகியலிலே ஒரு பெண் வளர்ந்து வருகின்றபோது ஒரு பத்து வயதானால் ஒரு தலைவனை நாடுவதில்லை. ஆண்மகனும் அப்படியேதான். இந்தப் பெண் ஒரு தலைவனை நாடுவதென்பது ஒரு பருவம் எய்திய பிறகுதான். பருவம் எய்திய நிலை என்பது மலம் அகன்ற காலம். மலம் கழியாத காலங்களில் தலைவனை விரும்புவதில்லை. அப்படி விரும்பினாலும் தலைவனுக்கு அந்தப் பெண் பயன்படுவதில்லை. ஆகையாலே மலம் கழியவேண்டும். மலம் கழிந்தபின்தான் பரிபக்குவம் எய்துகின்றது ஆன்மா. இந்த மலத்திற்கும் அந்த மலத்திற்கும் ஏதோ தொடர்பு இருக்கின்றதென்று நான் நினைக்கின்றேன்.

ஒரு பெண் பருவம் எய்திய பிறகு மலம கழிகின்ற காலம் மூன்று நாள். கூடுதலாகப் போனால் ஐந்து நாள். இதற்கு மேல் நாட்கள் அதிகப்படுமானால் அது வேறு. இப்படி மூன்று அல்லது ஐந்து நாட்கள் போனால் அந்தப் பெண்ணுடைய உடல் நலமாக இருக்கும். அதற்குமேல் அதிகமாகப் போய்க் கொண்டேயிருந்தால், உடல் நலம் கெட்டிருக்கிறது என்று அர்த்தம். மலம் கூட ஒரு அளவுக்குத் தான் போகவேண்டும். ஒரு அளவுக்கு மேல் போனால் உடல் தாங்காது. அதிகமாகச் சேர்ந்துவிட்டாலும்

செயல்படமாட்டோம். ஆகவே கழிந்தும் கழியாத நிலையிலேதான் வலிமைகூட இருக்கின்றது. ஆக ஐந்து நாள் மலம் கழிகின்ற ஒரு பெண்ணுக்கு உடல் நலமாக இருக்கின்றது. மூன்று நாள் மலம் கழிந்தால் உடல் நலம் மிகத் தெளிவாக இருக்கின்றது. அந்த மலம் முழுதும் கழிந்துவிட்டால் நன்றாக இருக்கும்.

கழிகின்ற காலங்களிலே தான் தலைவனைத் தலைவி விரும்புகின்றாள். மலம் அகன்ற காலமே பருவம் உடைத்து. அதைத்தான் நாம் பூப்பு எய்திவிட்டாள் என்று சொல்லுகின்றோம். அதேபோலத்தான் இறைவனாகிய தலைவனை அடைய, சீவனாகிய பெண்ணுக்கு ஒரு பரிபக்குவம் ஏற்படவேண்டும். அந்தப் பரிபக்குவம் என்பது மலம் அகலுதல். அந்தப் பெண்ணுக்குத்தான் மலம் இருக்கின்றது. நமக்கு என்ன இருக்கின்றது என்று ஐயம் எழலாம். நமக்கு அடிப்படையிலேயே ஆணவம், கன்மம், மாயை, மாமாயை, திரோதானம் என்ற மலங்கள் உண்டு. இதற்கு மேலே மாயைகள் உண்டா என்று கேட்டால் "ஆறு கோடி மாயா சக்திகள் வேறுவேறு தம் மாயைகள் தொடங்கின" என்பார் மணிவாசகர். அப்போது மிகவும் இளைத்துவிடும்; எதற்கும் பயன்படாது. அதனாலே மலங்கள் அகன்ற ஒரு சீவன்தான் இறைவனோடு ஐக்கியமாகமுடியும். இது அருளியல் நிலை. முன்னே சொன்னது உலகியல் நிலை.

இப்போது மலபரிபக்குவம் எய்தியதால்தான், ஒரு தலைவி எதிர்ப்பட்டு ஒருவரை ஒருவர் சந்தித்துக்கொண்டு, அப்படிச் சந்தித்த சந்திப்பை எண்ணி, வியந்து, ஐயமுறுகின்றது தலைவனுடைய நிலை. தலைவனுடைய உணர்வு இப்போது ஐயமுற்றது. அதனால்தான் பேரின்ப உரையாசிரியர் சொல்லுகின்றார்:

**"திருமேனியை வியந்து ஐயமுறுதல்" என்று.**

நேற்று நாம் கண்டோமே இந்த மேனி பருவான் தன்மையா, இல்லை அருவான தன்மையா, அருஉருவமான

தன்மையா, அல்லது அது எல்லாம் கடந்த ஒளிப்பிழம்பா! ஒன்றுமே புரியவில்லையே! அறிவரிதாய், அறிவால் அறிய முடியாத அற்புத வடிவம். இப்போது இருளில் இருந்து பார்க்கவில்லை சிவன். ஒளியிலே இருந்து பார்க்கிறான். நேற்று வரையிலும் அவன் இருளிலே நின்றான். அவள் ஒளியாக நின்றாள். அந்த ஒளியைத்தான் கிளர்ச்சியாகப் பெறுகிறான் உள்ளத்திற்குள்ளே. அளப்பரும் ஒளியினாலே அவளைப் பார்க்கும் போது 'இது அறிவரிது' என்று உணர்கிறான். தன் நிலையினாலே அவளைப் பார்க்கும்போது அந்த உணர்ச்சி வராது. அவளுடைய ஒளியினாலே அவளைப் பார்த்து அவளுடைய ஒளியைத் தான் பெற்று, அந்த ஒளியினால் தன்னுள் எழுந்த கிளர்ச்சியினாலே அவளைப் பார்க்கின்ற போதுதான், "இது அறிவரிது" என்று ஐயப்படுகின்றான்.

ஒரு உதாரணம் சொல்லுகிறேன்; அப்போதுதான் இதைச் சரியாக உணர முடியும். கண்ணப்ப நாயனார் குடுமியான் மலைமேலே போய்விட்டார். பெருமானுடைய ஒரு கண்ணிலே குருதி வடிந்து கொண்டிருந்ததைப் பார்த்தவர், ஆற்றாமையினாலே இங்கும் அங்கும் ஓடி மருந்தைத் தேடினார்; பலன்ளிக்கவில்லை. கடைசியாக ஒரு முடிவுக்கு வந்தார். தன் கண்ணை எடுத்து அப்பிவிடுவது என்று எண்ணி அப்படியே அப்பியும் விட்டார். குருதியும் நின்றுவிட்டது. "கண்டேன் நன்மருந்து" என்று அன்பு மீதூர ஆரவாரித்து நின்றார்.

இறைவன் அடுத்த கண்ணையும் குருதி வருமாறு செய்தார். இப்போது இறைவனுக்குத் தன் சொந்தக் கண் கிடையாது. இருக்கின்ற ஒரு கண் கண்ணப்பருடையது. இனி இரண்டாவது கண்ணை கண்ணப்பர் எடுக்கப் போகின்றபோது இறைவன் பார்க்கிறான். இப்போது யார் கணணாலே பார்க்கிறான்? கண்ணப்பர் கண்ணாலே பார்க்கின்றான். கண்ணப்பர் கண்ணாலே

கண்ணப்பரைப் பார்க்கின்ற போது, அவருடைய அளவிறந்த அன்பின் தன்மையைப் பார்க்கின்றான். "நில்லு கண்ணப்ப, நில்லு கண்ணப்ப" என்று அவர் கையைப் பிடித்துக் கொள்ளுகின்றான். தன்னுடைய இரண்டு கண்களினால் கண்ணப்பர் வருகையைப் பார்த்தார். கண்ணப்பரின் ஆற்றலைப் பார்த்தார். அன்பின் ஆர்ப்பரிப்பைப் பார்த்தார். கண்ணை எடுத்தலைப் பார்த்தார். கொடுத்தலைப் பார்த்தார். இத்தனையையும் தன் கண்ணாலே பார்க்கின்றபோது அவருடைய அன்பின் அருமை பெருமை தெரியவில்லை. கண்ணப்பரின் கண்ணாலே பார்க்கின்ற போதுதான், அவருடைய அன்பின் அருமையும் பெருமையும் தெரிந்தது. "நில்லு கண்ணப்ப நில்லு" என்று உடனே சொன்னார்.

இந்தக் கருத்தை ஏன் சொன்னேன் என்று உங்களுக்குப் புரிகிறதா? தன்னுடைய கண்ணாலே பார்ப்பதைவிட அவர் கண்ணாலே அவரைப் பார்க்க வேண்டும். நேற்று தான் கண்ட காட்சியும், அதில் பெற்ற ஒளியின் கிளர்ச்சியில், கிளர்ச்சியில் விளைந்த உணர்ச்சியினாலே அந்த வடிவத்தைப் பார்க்கின்றபோது தான் 'அறிவால் அறிவது அரிது' என்று எண்ணுகின்றான். வியக்கின்றான்.

இப்படி ஒரு கிளர்ச்சி வருமா! என்று ஐயம் எழலாம். நமக்கும் அப்படிப்பட்ட கிளர்ச்சிகள் வரும். வந்த சந்தர்ப்பங்களும் உண்டு. அனுபவங்களும் உண்டு. இரண்டு கிழமைகளுக்கு முன்னே எனக்கு ஒரு கட்டுரை கிடைத்தது. அந்தக் கட்டுரை கிடைப்பதற்கு முன்னே, 'மொழி ஆய்வு செய்து ஒரு அறிஞர் சொல்லுகிறார்' என்று சொன்னார்கள். என்ன சொல்லிவிடப்போகிறார் என்று நினைத்தேன். அப்புறம் நான்கு பக்கங்கள் கொண்ட ஒரு கட்டுரையைக் கொடுத்து, இதுதான் அந்த அறிஞர் செய்த கட்டுரை என்று கொடுத்தார்கள். படித்துப் பார்த்தேன். மிக அற்புதமாக இருந்தது. அதில் "எம்மொழிக்கும்

நம்மொழியே முதல்"என்று முடித்திருக்கிறார். அவரும் இங்கே வந்திருக்கிறார். அற்புதமாக ஆய்வு செய்திருக்கிறார். ஆனால் அவருடைய கருத்தை இந்த உலகம் ஏற்றுக் கொள்ளாது. ஏன்? நாம் மிகவும் குறுகி வந்துவிட்டோம்.

'மேங்கோ' என்ற சொல்லில்இருந்துதான் 'மாங்காய்' என்ற சொல் வந்தது என்று சொன்னால்தான் ஒத்துக் கொள்ளுவார்கள். 'மேன்' என்ற சொல்லிலிருந்துதான் மனிதன் என்ற சொல் வந்தது என்று சொன்னால்தான் ஒத்துக் கொள்ளுவார்கள். மற்ற மொழிகள் தமிழிலிருந்து தான் தோன்றின என்று சொன்னால் யாரும் ஒத்துக் கொள்ள மாட்டார்கள். நாம் வேண்டுமானால் ஒத்துக் கொள்ளலாம். அவ்வளவுதான். அப்படிக் காலம் மாறி வந்து கொண்டிருக்கின்றது. பிற மொழியிலிருந்துதான் தமிழே வந்தது என்று சொன்னால்தான் நாமே ஒத்துக் கொள்ளுகிறோம். நமக்கே இப்படிப்பட்ட உணர்ச்சிதான் இருப்பதால், மற்றவர்களைப் பற்றிச் சொல்லவேண்டாம்.

ஒருவரைச் சந்தித்தபிறகுதான் அவருடைய அருமை பெருமைகள் தெரிகின்றன. அதற்கு முன் தெரிவதில்லை. நேற்று சந்தித்தது ஒரு பெண்ணை அல்ல. ஒரு அற்புதமான குருநாதனை. அரிய பெரிய செய்திகளையெல்லாம் தனக்கு அளிக்க வல்ல குருநாதனைச் சந்திந்தது ஆன்மா. ஒரு ஆசிரியனைச் சந்தித்த மாணவனைப் போல, ஒரு குருவைச் சந்தித்தது ஆன்மா. தான் இருளிலே மூழ்கிக் கிடந்த அந்த நிலையில் உணர்வைப் பெருக்கி, ஒளியைப் பாய்ச்சி, நலமெல்லாம் நாடி நரம்பில் கிளரச் செய்தததால், இனி மரணமே தனக்குச் சம்பவிக்காது என்று ஒரு உணர்ச்சி வந்தது உள்ளே. ஐம்புலன்களையும் அடக்கி, ஆதார நிலைகளைக் கடந்து மேல் நிலையில் நின்று பார்க்கின்றபோது, உலகப் பற்றுகளை வென்றுவிட்ட நிலை கூடிவிட்டது.

"அற்றது பற்றெனில் உற்றது வீடு" என்பது போன்று, அந்தப் பற்றற்ற நிலையிலே காமம் அகன்றது.

அகன்றதாலே இனிப் பிறவி இல்லை என்ற முடிவுக்கு வருகின்றது ஆன்மா. எல்லா வகையான கெடுதியையும் அகற்றி, அனைத்து வகையான நலங்களையும் தேக்கி, இனி 'மரணமிலாப் பெருவாழ்வு வாழ்ந்திடலாம் கண்டீர்' என்று சொல்லுகின்ற உறுதிக்கு வந்துவிடுகிறது ஆன்மா. அப்போது இந்த ஆன்மா நினைக்கின்றது இப்படி ஒரு உறுதியைத் தந்த, முழுமை நலத்தைத் தேக்கிய, அறிவொளியை ஊட்டிய இந்த வடிவம் எங்கேயிருக்கிறது? எப்படி நம்மை ஆட்கொள்ளுகின்றது? இதை நம்மால் சந்திக்க முடியுமா? இதற்கு இணையாக ஏதேனும் இருக்கின்றதா? சொல்லமுடியுமா? என்ற ஐயம் தனக்குள்ளே முகிழ்க்கின்றது.

இதுதான் ஐயுறல். ஐயம் எப்போதுமே ஒன்றைப் பார்த்தால் அதைச் சந்தேகம் இல்லாமல் ஏற்றுக் கொள்ளக் கூடாது. ஒன்றைக் கேட்டால் அதை அப்படியே ஏற்றுக் கொள்ளக்கூடாது. அதில் ஐயம் வரவேண்டும். ஐயம் வந்து கேட்கும்போது பதில் சொல்லவேண்டும். பதில் சொல்லந் தெரியவில்லை யென்றால், தெரியவில்லை யென்று சொல்லவேண்டும். அப்படிச் சொல்லாமல், "நீங்கள் இப்படியெல்லாம் கேள்வி கேட்கக் கூடாது" என்று கருத்துச் சொன்னவர்கள், சொல்லக்கூடாது.

காட்சி என்பது அறிவு. அறிவில் ஐயம் வரவேண்டும். அந்த அறிவிலே இப்போது ஐயம் வந்திருக்கின்றது. இத்தனை அறிவெல்லாம் தந்த அந்தப் பொருள் எங்கிருக்கிறது? எப்படி இருக்கிறது? இதற்கு மேலும் நமக்கு என்ன தரப்போகிறது? இது எப்படி நிற்கும் என்ற ஐயம் வருகின்றது. ஆகவே ஐயுறல் என்ற தலைப்புக் கொடுத்திருக்கிறார். அதற்கு மட்டும் இந்தப் பொருளைச் சொன்னேன்.

இன்னொரு கருத்தைச் சொல்ல விரும்புகின்றேன். திருக்கோவையார் 400 பாடல்கள் கொண்டது. எல்லாமே கட்டளைக் கலித்துறையால் ஆன பாடல்கள். கட்டளை

இட்டுக் கொண்டிருக்கின்றது. நம்முடைய வாழ்க்கையில் எப்படி நடந்தால் என்ன நிகழும் என்று கட்டளை இட்டுக் கொண்டிருக்கின்றது. இந்தத் திருக்கோவையாரில் மற்றொரு நுட்பத்தையும் பார்க்கவேண்டும். பாடல் நேரசையில் தொடங்கியிருக்குமானால், அது இறைவனுடைய மாட்சிகளை யெல்லாம் விளக்கிச் சொல்லும். நிரையசையில் தொடங்கியிருக்குமானால், அது ஆன்மாவின் தகுதிகளையெல்லாம் சொல்லும். இது ஒரு நுட்பமான கருத்து. நம்முடைய சான்றோர்களும், பெரியவர்களும், யாப்பைத் தொடங்குகின்றபோது காரண காரியத்தோடு பயன்படுத்துவார்கள். அந்த நிலையிலே மணிவாசகப் பெருமானும் திருக்கோவையாரிலும், திருவாசகத்திலும் யாப்பைக் காரண காரியங்களோடு பயன்படுத்தியிருக்கின்றார். உங்கள் எல்லோருக்கும் எளிச்சென விளங்குமாறு திருவாசகத்திலிருந்து ஒரு உதாரணத்தை எடுத்துக் காட்டுகின்றேன்.

'திருவண்டப் பகுதி' என்று திருவாசகத்திலே வருகின்றது. அண்டங்களைப் பற்றி உங்களுக்கெல்லாம் தெரியும். ஒரு அண்டம் சின்னதாக இருக்கும். இன்னொரு அண்டம் பெரியதாக இருக்கும். இன்னொன்று அதைவிடப் பெரியதாக இருக்கும். அதற்குப் பிறகு இன்னொன்று மிகச் சின்னதாக இருக்கும். இப்படிச் சின்னது பெரிதாக அண்டங்கள் இருந்து கொண்டிருக்கின்றன. இவை வான்வெளியில் உருண்டு கொண்டிருக்கின்றன. இவைதான் அண்டங்களின் நிலைகள். இது எல்லோருக்கும் தெரிந்த செய்திகள்தான். இதைச் சொல்ல வருகிறார் மணிவாசகப் பெருமான்.

யாப்புக்காக இதைச் சொல்ல வருகின்றேன். திருவண்டப்பகுதியை இணைக்குறள் ஆசிரியப்பாவிலே சொல்லியிருக்கின்றார். அப்படியென்றால் என்ன? முதலில் நான்கு சீர் இருக்கும். கடைசியில் நான்கு சீர் இருக்கும். இடையிடையே இரண்டு சீர், மூன்று சீர், நான்கு

சீர் என்று எப்படி வேண்டுமானாலும் வரும். ஏன் அப்படி? ஒரு அண்டம் சின்னது, ஒரு அண்டம் பெரிது, இப்படி மாறி மாறி இருப்பதினாலே யாப்பிலும் அதைக் காட்டுகின்றார். அப்படிக் காரணகாரியத்தோடு யாப்புகளைப் பெரியவர்கள் பயன்படுத்தியிருக்கிறார்கள். அந்த வகையிலே மணிவாசகப் பெருமானும் கட்டளைக் கலித்துறையில் பாடும்போது, இறைவன் என்ன செய்கிறான், சீவன் என்ன செய்யவேண்டும் என்ற கருத்துகளைத்தான் சொல்லியிருக்கிறார். இந்தக் கருத்துகளைத்தான் நாம் பார்க்கப் போகிறோம்.

ஆகையாலே மணிவாசகப் பெருமான் எந்த உணர்வில் கலந்து கொண்டாரோ, அந்த உணர்வில் நாமும் கலந்து கொள்ளவேண்டும். இதைச் சொன்ன பிறகு மற்றொன்று நாம் பார்க்கவேண்டும். ஐயத்தின் நீங்கித் தெளியவேண்டும். அப்படித் தெளிதல்தான் நல்லது என்பார் திருவள்ளுவர்.

"ஐயத்தின் நீங்கித் தெளிந்தார்க்கு வையத்தின்
வானம் நணியது உடைத்து" (353)

இதற்கு அதிகமாக விளக்கம் சொல்லத் தேவையில்லை. 'வையத்து வானம் நணியதுடைத்து என்கிறார். இந்த எழுதுகோல் கீழே கிடக்கின்றது. இதை நான் குனிந்து எடுக்கவேண்டும். இதைவிட இந்த வானம் கிட்டே இருக்கின்றது. அது கொண்டு வந்து கொடுத்து விடுகின்றது. இப்போது கிட்டே இருப்பது வையமா? வானமா? தெளிந்தார்க்கு வானம் கையிலே இருக்கின்றது. தெளியாதார்க்கு நிலமும் தூரமாக இருக்கின்றது. ஐயம் உடையார்க்குக் கிட்டே இருக்கும் பொருளும் தூரமாக இருக்கின்றது. ஐயம் நீர்ந்து தெளிந்தார்க்குத் தூரத்தில் இருப்பதும் கிட்டே இருக்கின்றது. அப்படியானால், அரிதாக இருக்கின்ற அந்த அறிவான பொருள், அரிய பொருள், ஐயம் நீங்கினால் கிட்டே வரும். ஐயம் நீங்காதபோது தூரத்தில் இருக்கும். "நமக்கு எங்கெங்க கிடைக்கபோகுது

இதெல்லாம்" என்று எண்ணினால், ஐயப்பட்டால், அனைத்தும் தூரமாகத்தான் இருக்கும்.

இப்போதும் காஞ்சிபுரத்தில் இருக்கும் அன்பர்கள் என்னைக் கூப்பிடுவதற்கு அச்சப்பட்டுக் கொண்டிருக் கிறார்கள். "என்னங்க! அவரு வெளிநாட்டுக் கெல்லாம் போய் வந்திருக்கின்றார். அவரையெல்லாம் கூப்பிட்டால் நமக்குக் கட்டுப்படியாகுமா?" அப்படியென்றால் என்ன அர்த்தம்? சில்லறை சமாசாரம்தான்.

அவரு என்ன கேட்பாரோ என்னமோ! என்ற ஐயத்தினாலேயே யாரும் கூப்பிடுவது இல்லை. தூரத்தில் இருந்து கொண்டே ஐயப்பட்டுக் கொண்டேயிருப்பதை விடத் தெளிவாகக் கிட்டே வந்து கேட்டுவிட்டால்! தெளிந்துவிடும். நான் என்ன சொல்லுவேன். நீங்கள் என்ன கொடுக்கிறீங்களோ கொடுங்கள் என்று சொல்லி விடுவேன். ஐயம் தெளிந்துவிடும். விளங்குவதற்காக இதைச் சொன்னேன்.

வையத்தின் வானம் நணியதுடைத்து. அது ஏன் அப்படி இருக்கின்றது? இந்தச் சீவன் தன்னிடத்தில் இல்லாத ஒரு அரிதான பொருளைக் கண்டவுடனே, அந்த அரிய பொருளை வியந்து பார்ப்பதோடு, அதெல்லாம் நமக்குக் கிடைக்காது என்று சலனப்பட்டுவிடும். **சீவன் என்றும் சலனமானவன்.** அதனாலே அந்தச் சீவன் சலனப்படு கின்றான். அதனால்தான் ஐயம் வந்து விடுகின்றது. சலனப்படுகின்ற ஆன்மா கொஞ்சம் நினைத்துப் பார்த்தால், எளிவந்த பிரான் கொஞ்சம் கீழே இறங்கி வந்துவிடுகின்றான். நீங்கள் நினைக்கின்ற இடத்தில் போய் உட்கார்ந்து கொள்ளுகின்றான். இந்த அரிதாகிய பொருள் நமக்குள்ளே எங்கே இருக்கின்றதோ என்று ஐயப்படுவதுதான் நம்முடைய வேலையாகி விடுகின்றது. ஆகவே இந்த 'ஐயுறல்' என்ற தலைப்பிலே உணர்ச்சி பூர்வமாகச் சொல்லுகின்றார்.

# ஐயம்

**போதோ விசும்போ புனலோ பணிகளதுபதியோ**
**யாதோ வறிகுவ தேது மரிதி யமன்விடுத்த**
**தூதோ வனங்கன் றுணையோ இணையிலி தொல்லைத்**
**தில்லை**
**மாதோ மடமயி லோவென நின்றவர் வாழ்பதியே.**

நின்றவர் வாழ்பதி போதோ? நின்றவர் வாழ்பதி விசும்போ? நின்றவர் வாழ்பதி புனலோ? நின்றவர் வாழ்பதி பணிகளது பதியோ? நின்றவர் வாழ்பதி யாதோ? அறிகுவது அரிது. இது தவளைப் பாய்ச்சல் என்ற சூத்திர நிலை இலக்கணம். ஒரு சொல் இப்படியும் அப்படியும் மாறி மாறி வந்து விழும். இரு தவளைகள் மாறி மாறிக் குதிப்பது போல் பொருள் கொள்ளவேண்டும். இந்தப் பாட்டுக்கு இதன் தன்மைகளைத் தெரிந்து இதற்கு இப்படிப் பெயர் வைத்தார்கள்.

இது மட்டுமா சொன்னார்கள்! இணையிலி – போதோ இணையிலி, விசும்போ இணையிலி, புனலோ இணையிலி, பணிகளது பதியோ இணையிலி, அறிகுவது ஏதோ இணையிலி. இணையற்ற ஒன்று. அதை நீ எப்படி அறிய முடியும் என்று சொல்லுகின்றார். இப்படி எல்லாமே இணையிலி, இணையிலி என்று சொல்லிக் கொண்டு போகிறார். இதுதான் ஐயம். அந்தக் காட்சியிலும், அந்தக் காட்சியில் நாம் பெற்ற உணர்வின் அனுபவங்கள் இன்னது என்று அறிய முடியாது. இணையில்லாத ஒன்று. அதற்கு இந்த உலகத்தில் எதையுமே இணை சொல்ல முடியவில்லை என்று சொல்லுகிறார். இந்தப் பாட்டின் பொருள் இதுதான் என்று ஓரளவுக்குத் தெரிகின்றது.

மாதோ, மடமயிலோ என்று நின்றவர், தொல்லைத் தில்லை வாழ் பதியாதோ? என்கிறார். எது என்று தெரிந்து கொள்ள முடியவில்லை. இதையே திருவள்ளுவ நாயனார்,

"அணங்குகொல் ஆய்மயில் கொல்லோ கனங்குழை
மாதர்கொல் மாலுமென் நெஞ்சு" (1081)

என்று விளக்குவார். என் நெஞ்சம் அங்கே இணைகின்றது. அது எதனால் என்று தெரியவில்லை என்று சொல்லுகிறார்.

**போதோர்!**

போது என்றால் மலர்தல் என்று பொருள். போது என்பது தாமரையைக் குறிக்கும். போதில் அமர்ந்திருக்கின்ற அந்தப் பொருள்தான் இணையில்லாத பொருள். போதில் இருக்கும் அந்தப் போதில் எப்போது நிற்கும்?

"மலர்மிசை ஏகினான் மாணடி சேர்ந்தார்
நிலமிசை நீடு வாழ்வார்" (3)

"அன்பால் நினைப்பவரது நெஞ்சில் அவர் நினைத்த வடிவோடு விரைந்து செல்லுதலினாலே ஏகினானென்ன இறந்த காலத்தாற் சொல்லினார்" என்று இதற்கு ஒரு உரை எழுதுவார்கள். இந்த அன்பால் நினைவாரது இதயம் மலராக மலர்கின்றது. நேற்றே நான் ஒரு குறிப்பைச் சொன்னேன். இதயம் எப்போது மலர்கிறது என்றால் அன்பு வருகின்றபோது அன்பின் கிளர்ச்சியினாலே மனம் மலருகின்றது. அப்படி மனம் மலருகின்ற இடத்திலே இறைவன் குடியிருக்கின்றான். அப்படியென்றால், நான் நேற்று பார்த்த அவள் என் இதயத்தில் வீற்றிருக்கின்றாளோ! இதயத்தில் வீற்றிருந்து உணர்வைப் பெருக்குகின்றாளோ! அந்த நுட்பமான காட்சி, அந்த நுட்பமான கிளர்ச்சி என் இதயத்துக்குள் கிளர்ந்தது என்று சொல்லுகிறார்.

அது எங்கே இருந்து என்னை இயக்குகின்றது? விசும்பு வானம் விண் இந்த மூன்று சொற்களுக்கும் வேறு வேறு பொருள் இருக்கின்றது.

தமிழின் தனிச்சிறப்பே இதுதான்.

வான் என்றால் வெளி; அருள் வெளி என்று அர்த்தம்.

விசும்பு என்றால் பெரிய வடிவு என்ற பொருள். விசுவரூபம் – பெரிய வடிவம். அளவிறந்த வடிவம்.

விண் என்றால் விடுபட்ட இடம் என்று அர்த்தம். அதன் மூலச் சொல் விள். விள் என்றால் விடுபடுதல். அது விண் என்று வரும். "விண்டமாமலர்" என்று பெரியவர்கள் கையாளுவார்கள். எல்லாவற்றினிலிருந்தும் விடுபட்ட –தற்கு 'விண்' என்று பெயர்.

திருவள்ளுவ நாயனார் வான்சிறப்பு என்று ஒரு அதிகாரத்தையே வைத்திருக்கிறார். ஒரு உதாரணத்தின் மூலம் இதைப் பார்க்கலாம். ஒருவர் பெயர் நமக்குத் தெரியவில்லை. அவரை எப்படி அடையாளம் சொல்லுவது? முன்சீட்டில், கண்ணாடி போட்டுக்கொண்டு உட்கார்ந்திருந்தாரே அவர் என்று சொல்லலாம். அவர் பெயர் தெளிவாகத் தெரிந்த பிறகு, பெயரைச் சொல்லலாம். அடையாளத்தை எப்போது ஆகு பெயராக்குவது? பொருளாகு பெயர், சினையாகுபெயர், பண்பாகு பெயர் என்று ஆகு பெயர்கள் பல. அவர் அணிந்து கொண்டிருக்கும் ஒரு அணியை அணியாக்கிச் சொல்லுவோம். அவர் அணிந்து கொண்டிருக்கும் கண்ணாடியை ஆகுபெயராக்கிச் சொல்லுவது வழக்கு.

என் பெயரும் தெரியவில்லை, மற்ற விவரங்கள் எதுவுமே தெரிய வில்லையென்றால், செங்கல்பட்டில் இருந்து வருகிறாரே! அவர், என்று சொல்லலாம். இதுவும் ஆகு பெயரே. இல்லையென்றால் சந்தனப் பொட்டுக்காரர், இங்கே வந்து பேசிக் கொண்டிருந்தாரே! அவர் என்று சொல்லலாம். என்னுடைய பெயர் தெளிவாகத் தெரிந்த பிறகு தேமொழியார் என்று சொல்லலாம்.

அதுபோலே மழை என்று தெளிவாகத் தெரிந்திருக்கிறது. அதனாலே அவர் எப்படிச்

சொல்லியிருக்க வேண்டும்? மழைச் சிறப்பு என்று சொல்லியிருக்க வேண்டும். அல்லது மேகச் சிறப்பு என்று சொல்லியிருக்க வேண்டும், மேகத்திலிருந்து தண்ணீர் வருவதனாலே. இது இரண்டும் சொல்லாமல் "வான் சிறப்பு" என்று சொன்னதற்கு ஏதோ நுட்பமான காரணம் இருக்க வேண்டும். அதை நாம் புரிந்து கொள்ளுவதற்குப் பதிலாக, 'வான் மழைக்கு ஆகி வந்தது; அதனால் ஆகுபெயராயிற்று' என்ற சொல்லுகிறோம். அப்படிச் சொல்லக் கூடாது. வான் என்பதற்கு அருள்வெளி என்று பொருள். பஞ்ச பூதங்களிலே வான் என்பது சிதம்பரம். தொல்லைத் தில்லை என்பதற்காகச் சொல்லுகிறேன். தில்லை அல்லது சிதம்பரம் என்று பெயர். அது எல்லாவற்றிலிருந்தும் விடுபட்டது மட்டும் அல்லாமல், இறைவன் ஐந்தொழிலையும் புரிந்து கொண்டு ஆடிக் கொண்டு இருக்கின்ற இடம்; அருள் வழங்குகின்ற இடம். அதனாலே அருள் வெளி; இறைவனுடைய அருள் வெளி நிறைந்த இடத்திற்கு வான் வெளி என்று பெயர்.

அந்த வான் என்ன செய்கின்றது ? **வான் என்பது அருள் வெளி. அங்கே நின்றது திருவடி. அது உலகுக்கு வழங்கியது அருள். அதனுடைய கலப்பினால்தான் மழை அமிழ்தம் ஆனது** என்று உணரற்பாற்று. அது மேகத்திலே கலந்து, நீரோடு கலந்து வருகின்றது. அதனால்தான் அதற்கு அமிழ்தம் என்று பெயர். தாய்ப் பால் போல் வருகின்றது. மற்ற தண்ணீர் பாய்ந்தாலும் செடி, கொடிகள் வளமாக வருவதில்லை. **மழைநீர் பாய்ந்தால் வளருவது போல, ஆற்று நீரிலோ, ஊற்று நீரிலோ வளராது.** அதனாலே, இறைவன் அருள் கலப்பினாலே அந்த நீர் வந்தது. இப்படியே ஒவ்வொரு குறளுக்கும் பொருள் உண்டு. அதனாலே **ஒவ்வொரு சொல்லுக்கும் சொற் சிறப்பு இருப்பதை நம் தமிழிலே** பார்க்கலாம்.

போதோ என்பதினாலே இதயத் தாமரையோ? இப்போது காட்சியாக இருந்து இத்தனை நலங்களை

எனக்குள் செய்தாளோ, அப்படிச்செய்த அந்தத் தலைவி, என் இதயத் தாமரையிலே வீற்றிருந்தாளோ? அது பெண்ணாக இருந்தால் இப்படிச் சொல்ல வேண்டும். அது ஆசாரியனாக இருந்தால் அவர் அறிவின் வடிவம், அந்த வடிவம் என் இதயத்தில் வந்து அமர்ந்துவிட்டதோ? என்று மாணவன் கருத வேண்டும்.

அது எப்படி என்று கேட்டால், ஆசிரியர் ஒரு இடத்தில் மாணவன் கேட்கின்ற கேள்விக்குப் பதில் சொல்லுகின்றார், இது வேறு ஒரு நூலில் உள்ள கருத்து இங்கே உதாரணத்திற்காகச் சொல்லுகிறேன். எல்லாம் கேட்டுக் கொண்டு வந்த மாணவன், "ஐயா, இதையெல்லாம் எங்களுக்கு எப்படி உணர்த்துவீர்கள்" என்று கேட்டான். "உன்னறிவில் மேவாமல் மேவி நாமே உணர்த்துவோம்" உன் அறிவில் அமர்ந்து உணர்த்துவோம் என்கிறார். அப்படியானால் இவ்வளவு பெரிய உருவமா உள்ளே போகும்? அதனாலே ஐயம் வந்துவிடக் கூடாதே என்று 'மேவாமல் மேவி' என்று சொன்னார். எப்படி? பொருந்தாமல் பொருந்தி உணர்த்துவேன். நான் பேசிக் கொண்டேயிருப்பேன், அறிவுரையைச் சொல்லிக் கொண்டேயிருப்பேன்; அது உன்னை அறியாமல், என்னை அறியாமல் உன் உள்ளே போய் பதிந்துவிடும். அதற்குப் பிறகு உன்னிடத்தில் அந்த உணர்ச்சிகள் வெளிப்படும். அதனாலே நம் எதிரில் இருக்கின்ற வடிவத்தின் அத்தனைப் பண்புகளும் நம் உள்ளத்தில் எப்படியோ சென்று அப்படியே பதிந்து விடும்.

மௌனமாக இருந்தால் போதுங்களா? என்று ஒரு ஐயம் வரும். மௌனம்தான் பெரிய ஆற்றல். மௌனம்தான் அளவிலா ஆற்றல். அது தானாகச் செல்லும். இந்த உலகம் மௌனமாக இருக்கின்றது. ஆனால் பேசிக்கொண்டிருக்கின்றது. அதேபோல், தென்முகக் கடவுளாகிய பெருமான் மௌனமாக உட்கார்ந்து கொண்டிருக்கின்றான். ஆனால் ஞானப் பொருளை

உணர்த்திக் கொண்டிருக்கின்றான். நால்வர்களான, சனகாதி முனிவர்களுக்கு அரும் பொருளாகிய ஞானப் பொருளை உணர்த்துகின்றான். பேச்சினால் அல்ல மௌனத்தினால். ஆகவே பேச்சைவிட மௌனமே சிறந்தது என்பதால் மௌன நிலையில் நின்று உணர்த்து கின்றான். அதனாலே அவன் நம் இதயத்திற்குள் மௌன-மாக இருந்து உணர்த்துகின்றான். ஆக இறைவன் குருவாக எழுந்து அருளிய இடம் போதோ? என்கிறார். எழுந்த இடம் போதோ? அது மன்மாக இருக்குமா? என்கிறார்.

மணிவாசகப் பெருமானுக்கு ஐயம் வருவதற்கு ஒரு காரணம் இருக்கின்றது. இறைவன் ஆட்கொண்டு விடுகின்றான். அப்பா! உனக்கு ஞானம் என்ற ஒன்றை வைத்திருக்கின்றேன். உனக்கு இந்த உலகியல் எப்போதாவது இடர்ப்பாடாக இருக்கின்றபோது, இந்த ஞானமாகிய வைப்பை வைத்துக் கொண்டு, உன் ஆன்மாவை ஈடேற்றிக் கொள் என்று வைப்பு நிதி ஒன்றை ஞானமாக வைத்துவிட்டான் அவருக்குள்ளே. மணிவாசகப் பெருமான் அந்த ஞானக் களஞ்சியத்தை இறைவன் தன்னுள் அளிக்கப் பெற்றதாக திருப்பெருந் துறையிலே ஒரு உணர்வு எழுந்தது. ஆனால் அதை எங்கே வைத்தான் என்பது நினைவில்லை. அந்த இடம் எது என்று தெரியவில்லை. ஞானக் களஞ்சியம் என்ற பொக்கிஷத்தை, ஒரு நிதியைத் தனக்குள்ளே வைத்து விட்டான். நீ எப்போது இடர்ப்படுகின்றாயோ அப்போது இந்த நிதியை வைத்து உன் இடர் தீர்த்து, இடரில்லாத வாழ்க்கையை வாழ்ந்து கொள் என்று சொல்லிவிட்டான். ஆனால் இப்போது எங்கேயென்று தெரியவில்லை. அங்கும், இங்கும் சுற்றிக் கொண்டு வருகின்றார். உலக இடர்ப்பாடுகள் அதிகமாகிவிட்டன. அதற்குப் பிறகுதான் பாண்டியனிடத்தில் தொல்லைப்படுகின்றார். அல்லல் உறுகின்றார். இவையெல்லாம் முடிகின்றபோது மனதிற்குள் ஏக்கம் வருகின்றது. திருக்கழுக்குன்றத்திற்கு வருகின்றார். கலக்கம் வந்துவிடுகிறது.

"கலங்கினேன், கலங்காமலே வந்து காட்டினாய் கழுக்குன்றிலே" என்று பாடுவார். "இலங்குகின்ற நின் சேவடிகள் இரண்டும் வைப்பு" என்பார். திருவடி என்றால் ஞானம். அவற்றை நீ வைப்பாக வைத்துவிட்டாய். அந்த இடம் எது என்று அறிய முடியாத நிலையிலே நானிருக்கின்றேன். இடமின்றியே கலங்கினேன். அப்படிக் கலங்கும்போது, ஏன் அப்பா, கலங்குகின்றாய்? என்று வைத்த இடத்தைக் காட்டினாய். அப்போது தன்னை ஒளி சூழ்ந்தது. அப்படிச் சூழ்ந்த ஒளிக்குள்ளே தான் நிற்பதைப் பார்க்கிறார். அதனாலே அந்த இடத்திற்கு என்ன பெயர் வைத்தார்கள் என்று தெரியுமா ? 'தேசு முகிழ் பேட்டை' என்று பெயர் வைத்தார்கள். தேசு வெளிப்பட்ட இடம். அதற்கு உரை எப்படிச் சொல்லுகிறார்கள் என்றால், திருவடியைக் கொண்டுவந்து இறக்கி வைத்த இடம் என்று சொல்லுகிறார்கள். திருவடி எங்கேயிருக்கிறது என்று வெளிப்படுத்தி, இனிமேல் நீ உயர் என்று சொன்ன இடம். வெளிப்பட்ட இடம். உள்ளே மறைந்திருந்த அவை வெளிப்பட்ட இடம். அவருக்கு ஏக்கம் வருவதற்குக் காரணம் இருக்கின்றது. அதனாலே இங்கே சொல்லுகிறார்; "என்னை ஆட்கொண்ட திருவடி எங்கேயிருக்கிறது என்று தெரியவில்லையே!" என்று.

என்னை ஆட்கொண்ட பெருமான் இணையிலி. எத்தனையோபேரை ஆட்கொண்டிருக்கிறான். ஆனால் இவருக்கு இணையில்லை. நாம் பார்க்கிறோம். சின்ன வயதிலிருந்து பலபேரைச் சந்திக்கின்றோம். அம்மாவோடு கொஞ்சிக் குலாவினோம்; பாலுண்டோம்; சோறுண்டோம்; கற்றுக் கொடுத்தார்கள். அப்போ தெல்லாம் இவ்வளவு பெரிய கவர்ச்சி வரவில்லை. அப்பா அடித்தார். அறிவுறுத்தினார். அப்போதும் வரவில்லை. உடன்பிறந்தாரோடு விளையாடினோம். தொல்லைப்பட்டோம். அப்போதும் இவ்வளவு பெரிய நிலைகள் வரவில்லை. உற்றார் உறவினர் மற்றவர்

-களோடும் பழகினோம். அப்போதும் இந்த நிலை வரவில்லை. **ஆனால் இவளைக் கண்டவுடன் எல்லாம் மறந்தது. இணையிலாத் தன்மை தன்னுள்ளே வந்தது. அதனால், "இணையிலி" என்று குறிப்பிடுகின்றார்.** இந்த ஞானாசிரியனுக்கு இணையாக வேறு யாருமில்லை. அதனாலே இணையிலாப் பரம்பொருளே இறங்கி வந்து என்னை ஆட்கொண்டிருக்கின்றான். அது இங்கா? அங்கா? தெரியவில்லை.

போதோ! விசும்போ! புனலோ! பணிகளது பதியோ! அறிகுவது ஏதும் அரிது. எமன் விடுத்த தூதோ! அணங்கன் தன் துணையோ! இது எல்லாம் இணையாகச் சொல்ல முடியாது என்று சொல்லிவிடுகின்றார். இதையெல்லாம் கேட்டவர் யார் தெரியுமா? மிக்கப் பழமையான தில்லையிலே உள்ளவர். மாதோ, மடமயிலோ என்று நின்றவர் வாழ்கின்ற பதியோ? அவர் வாழ்கின்ற பதி போதோ! வாழ்கின்ற பதி விசும்போ! வாழ்கின்ற பதி புனலோ! இப்படிக் கூட்டிக் கூட்டிப் பார்க்க வேண்டும். அதனால் சுட்டிக் காட்டுகிறேன். இவ்வளவு செய்திகளை இந்தப் பாடலுக்குள்ளே பொதித்து வைத்திருக்கின்றார். இதில் வருகின்ற தொடருக்குத் தொடர்புள்ள ஒரு திருக்குறளைச் சொல்லிவிட்டு மீண்டும் பாடலுக்கு வருகின்றேன்.

"எமன் விடுத்த தூதோ" என்று சொல்லுகின்றார். ஒரு மாணவன் முன் ஆசிரியர் வந்து நிற்கிறார். 'எமன் மாதிரி வந்துவிட்டார் என் ஆசிரியர்' என்றா சொல்லுவான் மாணவன்? அப்படிச் சொன்னால் நன்றாக இருக்குமா?

ஒரு பையன் நன்றாக வாழ வேண்டும் என்பதற்காக ஒரு பெண்ணை மணம் முடிக்க வேண்டுமென்று நினைத்து, தாய் தந்தையார், மற்றுமுள்ளோர் ஒரு பெண்ணை முன்னே நிறுத்துகிறார்கள். இந்தப்

பெண்ணைத்தானப்பா உனக்குத் திருமணம் செய்து வைக்கப் போகிறோம் என்று சொல்லுகிறார்கள். அப்போது "ஐயோ! எமன் மாதிரி இருக்கிறது" என்றா சொல்லுவான்? யாராவது அப்படிச் சொல்லுவார்களா? யாரும் சொல்ல மாட்டார்கள்.

திருவள்ளுவ நாயனார் ஒரு ஆண்மகன் முன்னே ஒரு பெண்ணைக் கொண்டு வந்து நிறுத்துகிறார். அவர் எவ்வளவு பெரிய ஞானி. அப்படி அவளைக் கொண்டு வந்து நிறுத்தும்போது ஒன்றைச் சொல்லுகிறார்.

**கூற்றமோ, கண்ணோ பிணையோ மடவரல்**
**நோக்கம் இம்மூன்றும் உடைத்து** (1085)

என்கிறார். 'கூற்றுவனைப்போல் இந்தப் பெண் இருக்கிறாள்' என்றா பொருள் சொல்லுவது? இல்லை. இதற்கு வேறு பொருள் இருக்கின்றது. அதாவது இதுவரை நம் உள்ளத்திற்குள்ளே ஆன்மாவை ஊனம் செய்கின்ற பலவேறு குணங்கள் நிறைந்திருந்தன.

ஊன் வேறு; ஊண் வேறு. ஊன் நமக்கு உணவாகக் கூடாது. ஊன் என்றால் தசை. பெயரிலேயே பொருள் இருக்கிறது. **ஊனத்தைச் செய்வதால் ஊன். அதை உண்டால் ஊனம் வரும்.** அந்த உணவு சீவனை ஊனப்படுத்திவிடும். அதனாலே அதற்கு ஊன் என்று பெயர். சொற்களை ஊன்றிக் கவனிக்க வேண்டும். ஊண், உண், உணவு என்றெல்லாம் வரும். **விதையிலிருந்து வருவதுதான் ஊண்.** ஊண்றிய ஒன்றிலிருந்து வருவதால் ஊண். அது நமக்கு உணவு. "ஆ, ஊணு கழிஞ்ஞோ" என்பார்கள் மலையாளத்தில்.

இப்படிச் **சீவனை ஊனப்படுத்துகின்ற பண்புகள் உள்ளத்தில் இருக்கின்றன.** உயிரை மொத்தத்திலே ஊனப்படுத்துகின்றப் பண்பாக உடம்பும் இருக்கின்றது. ஆதலால் தசைகளால் ஆன இந்த உடம்பிற்கு ஊன் என்று பெயர். இதற்குள்ளே இருப்பதற்கு உயிர் என்று பெயர்.

**இந்த உடம்பில் ஊனம் இருந்தாலும் இருக்கலாம்வ ஆனால் உயிரில் ஊனம் இருக்கக் கூடாது.** அதனாலே ஒரு காலத்திலே எமன் வந்து, இறைவன் ஆணையின்படி, உடம்பையும் இந்த உயிரையும் கூறுபடுத்துகின்றான். அதனால் அவனுக்கு என்ன பெயர்? கூற்றுவன் என்று பெயர். கூறுபடுத்தியதனாலே கூற்றுவன் என்று பெயர். "ஊன் உயிர் வேறு செய்தான்" என்பார் சுந்தரமூர்த்தி சுவாமிகள்.

இங்கே இந்த வடிவம் என்னைக் கூறுபடுத்துகின்றது. அதனாலே கூற்று என்று காண்கிறேன். **இந்த வடிவம் முதலில் ஆன்மாவில் இருக்கின்ற ஊனத்தை நீக்குகின்றது.** இந்தப் பெண்ணைப் பார்த்தவுடனே, இதுவரை தன்னலமாகவும், தன்னைப்பற்றியே எண்ணிக் கொண்டி-ருந்ததும் போய், அங்கே சரண்புகுகின்றான். அப்போது இதுவரையிருந்த முனைப்பைப் பிரித்து எடுத்ததினாலே, கூற்றமோ என்கிறார். சீவனை இடர்ப் பாட்டிலே தள்ளுகின்ற இடராகிய இருள் குணங்களைப் பிரித்ததனாலே கூற்றமோ என்று சொன்னார். அப்படிப் பிரித்துவிட்டால் மட்டும் போதாது. ஞானத்தை வழங்கவும் வேண்டும்.

அதனால் கண்ணோ என்கிறார். கண் என்றால் ஒளி. ஒளியை வழங்குவதால் கண். ஊனத்தை நீக்கி, ஞானத்தை வழங்கியது. வழங்கிவிட்டு விட்டுவிடக்கூடாது. அணைத்துக் கொள்ளவேண்டும். அதனால் பிணையோ என்கிறார். ஞானப்பாங்கு உடைய இவளால்தான் இவை முடியும். ஞான நோக்கம் உடைய இவளிடம்தான் இந்த மூன்று நோக்கங்களும் நிறைவேற முடியும். தன் ஆணவத்தை அகற்றியதால் கூற்றமோ என்றும், கன்மத்தை அகற்றியதால் கண்ணோ என்றும், மாயை அகற்றியதால் பிணையோ என்றும் கூறினார். இச்செயல் நடைபெற அவள் தகுதியானவள் என்பதை "மடவரல்" என்ற சொல்லால் குறிக்கிறார்.

மடவரல் என்றால் ஞானத்தன்மை உடையவள், ஞானத்தை வரவழைப்பவள் என்று அர்த்தம். அச்சம், பயிர்ப்பு, நாணம், மடம் என்பதில் மடம் என்பதற்கு ஞானம் என்று பொருள். இதுவரையிலும் உரைகள் பலவற்றைப் பார்த்திருப்பீர்கள். அந்த உரைகளில் இருக்கும் பொருளைப் பார்த்துவிட்டு, ஐயா, ஏதோ புதுவிதமாகச் சொல்லுகிறார். இவருக்கு உரை சொல்லத் தெரியவில்லையென்று சொல்லக்கூடாது. மடம் என்பதற்கு இளமை என்றும் பொருள் இருக்கின்றது. "என்றும் இளையாய்" என்று சொல்லுவார்கள். ஆகையால் இளமை என்பதற்கு ஞானம் என்றுபொருள். என்றும் இளமையாய், புத்தம் புதியதாய் இருப்பது ஞானம் ஒன்றுதான்.

ஒரு மடாதிபதியை "இவர் மடாதிபதி" என்று அறிமுகப்படுத்தினார்கள். அதற்கு என்ன பொருள் சொல்லலாம். ஞான பீடத்திற்கு அதிபதி, அல்லது தலைவர் என்பதுதான் இதன் பொருள். ஆகையாலே மடம் என்ற சொல்லுக்கு ஞானம் என்று பொருள். பெண்கள் ஞானப்பாங்குடையவர்கள் என்று அர்த்தம். அதனால்தான் அவர்களை இல்லத்திலிருந்து வெளியே அனுப்பாமல், இல்லத்திற்கு உள்ளேயே இருக்குமாறு செய்தார்கள். இல்லறம் ஒரு மடம். மடப்பள்ளிக் குள்ளேயே இருங்கள் என்று சொன்னார்கள். நன்றாகச் சமைத்து, எங்களுக்குப் போட்டு, அந்த உணவினாலே எங்களுக்கு ஞானத்தை ஊட்டி, உடல் நலத்தைப்பேணி, நீங்கள் ஞானாதிபதியாக இருந்து எங்களை உயர்த்துங்கள் என்று சொன்னார்கள். அது இல்லாமல் அவர்களை அடக்கவேண்டும், அடிமைப்படுத்த வேண்டும் என்ற எண்ணம் கிடையாது. கால ஓட்டத்தில் அடிமைபோல் கொண்டு வந்துவிட்டோம் நம் அறியாமையால். அவ்வளவுதான்.

அச்சம், பயிர்ப்பு, நாணம், மடம் என்பதிலே அச்சம் என்பதற்கு மென்மை என்று அர்த்தம். கிராமத்திலே உள்ள எங்களுக்கெல்லாம் தெரியும். உங்களுக்குத் தெரியுமோ

தெரியாதோ? இருந்தாலும் சொல்லுகிறேன். மண்வெட்டி இருக்கின்றதே, அதை வாங்கப் போனால் அதைக் கைகளால் வளைத்துப் பார்ப்போம். வளைந்தால், "ரொம்ப அச்சமாக இருக்குதுங்க, கொஞ்சம் கனமாக இருந்தால் கொடுங்கள்", என்று கேட்போம். அச்சமாக இருக்குது என்றால், மென்மையாக இருக்கிறது என்று அர்த்தம். வளையும். அப்படி ஒரு பெண்ணினுடைய குணம் மென்மையாக இருக்கவேண்டும். அதனால் அச்சம் என்று வைத்தார்கள்.

**அதிலே நாளும் தங்களைப் பயிற்றுவித்துக் கொள்ள வேண்டும். அதற்குப் பயிர்ப்பு என்று பெயர்.** அதுதான் தவநிலை. அந்தத் தவநிலையில் நன்றாகப் பதிந்து கிடந்தால் உணர்ச்சிகள் நன்றாக இருக்கும். **தவநிலையில் தேங்குகின்ற உணர்ச்சிகளுக்கு நாண் என்று பெயர்.** அந்த 'நாண்' தன் முன்னே வரும் ஒருவருடைய தீய உணர்வுகளில் **ஊடுருவி** அதை அழிக்கும். அவர்களை நல்லவர்களாக மாற்றும். பகைவர்களைக் கண்டபோது வில் வளைந்து நாண் ஏறி அம்பு வெளிப்பட்டுப் பகையை அழிப்பது போல, தூய உணர்வு எனும் நாணில், தன் நாணம் என்ற அம்பு ஏறி முன்னேயிருப்பவருடைய தீயகுணங்களாகிய பகைகளை அழிக்கும். எனவே "நாண்" என்றனர். இதுவே நாணம் ஆகும். இந்த மூன்று தன்மையுடையவளை ஞானி என்று சொல்லவேண்டும். அதற்குப் பதிலாக மடவரல் என்று சொன்னார்கள். ஆக மடல் என்றால் இளமை என்பது மட்டுமல்ல. ஞானம் என்றும் பொருள்.

"மடவரல் நோக்கம் இம்மூன்றும் உடைத்து" என்கிறார். **ஒரு பார்வையினால் ஆணவத்தைப் போக்கினாள். மற்றொரு பார்வையால் கன்மத்தைப் போக்கினாள். இன்னொரு பார்வையினாலே மாயையைப் போக்கினாள். இந்த மூன்றையும் போக்கி, ஒன்றால் தூய்மை செய்து, ஒன்றால் ஒளி வழங்கி, ஒன்றால் இணைத்துக்**

கொண்டாள். உடலால் அணைத்தாள்; உயிரில் இழைத்தாள்; உணர்வில் பதிந்தாள். எண்ணத்தாலும், பார்வையாலும், பிணைப்பினாலும், நலங்களைச் செய்தாள்; வளங்களைத் தேக்கினாள். இதை ஸ்பரிச தீட்சை, சட்சு தீட்சை, மானஸ தீட்சை என்றும் கொள்ளலாம். தீக்கை என்ற சொல்லே தீட்சை எனத்திரிந்தது. தீமையைக் கைவிடுதலே தீக்கை எனப்படும். அதனால் இந்தப் பெண்ணிடம் மூன்று நோக்கங்கள் இருக்கின்றன என்று நயந்தான்; வியந்தான்.

அகராதிப் பொருள் வேறு; அனுபவப் பொருள் வேறு. அகராதியைக் கண்டு இதுதான் பொருள் என்று அறிவதை விட, அனுபவத்தால் இதுதான் பொருள் என்று உணரவேண்டும். அந்த உணர்வுதான் தெளிவைத் தரும்.

போதோ என்று சொல்லுகின்றபோது அந்தப் போது எங்கே இருக்கின்றது? அந்த உணர்வு எங்கே போய் மறைந்து நிற்கின்றது? இணையற்ற வடிவத்திலிருந்து, இணையிலா ·நலங்களை· என்னுள்ளே தேக்கி வைத்திருக்கின்ற அந்த உணர்வு, இப்போது எங்கே போய் நிற்கின்றது? எங்கே போய் மறைந்து இருக்கின்றது? எங்கே ஒளிந்து கொண்டிருக்கின்றது? அதைச் சந்திப்பதற்கு என்ன வழி? அதை மீண்டும் சந்தித்தால் அந்த உணர்வு எனக்கு வருமா? அதையே பார்த்தால் கூட அந்த உணர்வு வருமா? அது எந்த பதியில் வாழ்ந்தது? அது எப்படி எனக்கு இந்த உணர்வைத் தந்தது? எந்த இடம் பதி என வந்தது? அது போதோ? விசும்போ?

விசும்போ என்றால் வான் வெளி என்று பொருள். எங்கும் பரந்திருக்கின்ற ஆகாயம் என்று பொருள். ஞானவெளி என்றும் அதற்குப் பெயர்.

புனலோ - தண்ணீர். இதற்கும் இன்னொரு பொருள் சொல்லலாம். நம் உள்ளத்திற்குள் இருக்கும் அன்பிற்குப் புனல் என்று பெயர். இதைத் திருவள்ளுவர் வேறொரு வகையாகக் குறிப்பிடுவார். "வெள்ளத்தனைய மலர்நீட்டம்

மாந்தர்தம் உள்ளத் தனையது உயர்வு" தண்ணீர் எந்த அளவுக்கு உயர்ந்திருக்கின்றதோ அந்த அளவுக்குத் தாமரை சிறந்து உயர்ந்து விளங்கும். ஒரு உள்ளத்தில் எந்த அளவுக்கு அன்பு என்ற நீர் உயர்ந்திருக்கின்றதோ அந்த அளவுக்கு இறைவன் திருவடி என்ற தாமரை உயர்ந்து விளங்கும். அப்படிப்பட்ட என் அன்பிலே இந்த பெண் வந்ததா? என்றால் எனக்கு அப்படிப்பட்ட அன்பிருப்பதாகத் தெரியவில்லையே. இப்படி ஒரு ஐயம். எப்போதுமே நிறைவாக இருப்பவர்களுக்கு நிறைவாக இருப்பதாகத் தோன்றுவதில்லை.

பணிகளது பதியோ! பணி, பணிகள் என்றால் தொண்டு. தொண்டுகள் செய்தால் அந்த இடத்தையே பதியாகக் கொண்டு விளங்குகின்றவரோ! தொண்டை இடமாகக் கொண்டு என்னை ஆட் கொண்டவரோ? இல்லை. இணையிலி - ஏன்? ஒவ்வொரு இடத்திலும் தோன்றி ஆட்கொள்ளுகின்றபோது அளவிறந்த நன்மைகள் விளைகின்றன. அந்நன்மைகள் உலகியலில் எவராலும் வழங்க முடியாதவை. எனவே இணையிலி என்றார்.

யாதோ - எதுதான் என்று சொல்லுங்களேன்.

அனங்கோ - அனங்கன் என்றால் காமன் என்று அர்த்தம். வாரியார் சுவாமிகள் சொல்லுகின்றபோது அவன் எல்லாருக்கும் "காமன்" என்று சொல்லுவார். உணர்வைப் பெருக்கும் ஒரு உரு. மன்மதனுக்கு அனங்கன் என்று பெயர். உருவில்லாதவன். ஒளியாய தன்மையை உடையவன். ஒளித்தன்மையிலிருந்து நம் உணர்வைப் பெருக்கும் தன்மை உடையவன். ஆகையாலே ஒளியாக நின்றிருந்த இந்த வடிவம் என் உள்ளே உணர்வைப் பெருக்கிக் கொண்டிருக்கின்றது. அதனாலே அனங்கனோ? அதுவுமில்லை. ஆக இத்தனையும் செய்வதை மொத்தமாகச் செய்து கொண்டிருக்கின்றதே இந்தப் பெண் வடிவம். மாதோ?

*மாதோ!*

மாது என்று ஏன் பெயர் வந்தது? மாது என்றால் அழகுடையவர்கள், பெண் என்பது எல்லாம் நமக்குத் தெரியும். ஓரெழுத்து ஒரு மொழி என்ற இலக்கணப்படி 'மா' ஒரு சொல், 'து' ஒரு சொல்.

> **உயிர்மவில் ஆறும், தபநவில் ஐந்தும்**
> **கவசவில் நாலும் யவ்வில் ஒன்றும்**
> **ஆகு நெடில்நொது ஆங்குறில் இரண்டோ**
> **டோரெழுத் தியல்பதம் ஆறேழ் சிறப்பின. (நன்னூல்–129)**

அந்த இலக்கணப்படி 'மா' என்றால் பெரிய, 'து' என்பது துன்பம். பெரிய துன்பங்களுக்கு இவளே நிலைக்களம். இப்போது துன்பத்தைத் தந்துவிட்டாளே! மாது என்றால் பெரிய துன்பங்களுக்கு நிலைக்களம் என்று ஒரு பொருள். 'மா' என்றால் சிறப்பு. 'து' என்றால் துன்னுதல். **மிகப்பெரிய சிறப்புகள் நம்மை நெருங்குவதற்கு இவளே நிலைக்களம்** என்று இன்னொரு பொருளும் உண்டு. **எல்லாச் சிறப்புக்கும் இவளே நிலைக்களம்.** எல்லா துன்பங்களுக்கும் இவளே நிலைக்களம். அதனாலே இந்த இரண்டு பொருள்பட ஓரெழுத்து ஒரு மொழிச் சொல்லை வைத்து, 'மாதோ' என்று கூறுகிறார். இதைக் கருதினாரோ, கருதவில்லையோ தெரியாது. மு.வ. அவர்கள் 'கள்ளோ, காவியமோ' என்று தலைப்புக் கொடுத்து ஒரு புதினம் எழுதினார்கள்.

தொல்லைத் தில்லை மாதோ! அதுவும் இணையிலி, மடமயிலோ! அதுவும் இணையிலி.. இதுவரையில் சொல்லுக்குச் சொல் பொருள் சொன்னேன்.

தலைவன் ஐயுற்ற வழி சிலவற்றைச் சிந்திக்கலாம். நீங்களும் நானும் சந்திக்கிறோமே, அது எப்படி நிகழ்ந்தது? ஏதோ சாதாரணமாகச் சந்தித்துவிட்டோம் என்று எண்ணக் கூடாது. யார் யாரைச் சந்தித்தாலும் அதற்கொரு காரண காரியம் உண்டு. வள்ளல் பெருமான் கொஞ்சம்

வருந்திச் சொல்லுவார். நான் ஏதோ உங்கள் மத்தியில் வந்து சன்மார்க்கத்தைப் பற்றிச் சொல்லிக் கொண்டிருப்பதற்கு ஒரு காரணம் இருக்கின்றது. எனக்கு ஏதும் வேலையில்லை என்று நினைத்துக் கொள்ளாதீர்கள். நான் யாரோ என்றும் நீங்கள் நினைக்காதீர்கள். நீங்கள் எல்லாம் "சுற்றம் என்பது பற்றியே சொல்லுகின்றேன்" "சூது பேசிலேன், வாது பேசிலேன், வம்மின் உலகியலீர்" என்பார். ரொம்ப வருத்தப்படுகின்றார். என்ன காரணம்? அவர் நமக்குச் சுற்றம் என்பதை அறிவித்திருக்கிறார். அவர் நம்மை யெல்லாம் சுற்றம் என்று நினைத்துக்கொண்டு இருக்கின்றார். நாம் என்ன நினைத்துக் கொண்டிருக் -கிறோம். அவரு கணக்குப் பிள்ளைங்க என்கிறோம். நம்ம ஜாதியென்ன, அவர் சாதியென்ன? என்கிறோம். அவர் **உயிர் ஜாதியைப் பார்த்தார். உயர் சாதியைப் பார்க்கவில்லை.**

சுற்றம் என்பதற்கு ஒரு காரணம் உண்டு. இன்று அவர் அந்தக் குலத்திலே பிறந்திருக்கலாம். நேற்று நம்மோடு சுற்றமாக இருந்திருக்கிறார். யார் வேண்டு மானாலும், எந்தக் குலத்திலும் பிறக்கலாம். **எல்லாக் குலங்களிலும் பிறந்து வருபவர்கள்தான் உயிர்க்குலம். அதைத் தெளிந்தவரே ஞானிகள்.** இதனை "எல்லாப் பிறப்பும் பிறந்திளைத்தேன்" என்பார் மணிவாசகர். ஆக எந்தக் குலத்திலும் பிறந்திருக்கலாம். பாம்பு குலத்திலும், பல்லி குலத்திலும், பறவைக் குலத்திலும், மனித குலத்திலும் பிறந்திருக்கலாம். மனித குலத்தில் மனிதனால் கற்பிக்கப்படுகின்ற இழிந்தகுலத்தில் கூடப்பிறந்திருக் -கலாம். ஆனால் இப்போது அவர் சிறந்த குலத்தில் வந்திருக்கின்றார். அதனாலே வருந்திச் சொல்லுகின்றார். 'சுற்றம் என்பது பற்றியே சொல்லுகின்றேன்' என்கிறார்.

நாம் சந்திப்பது என்பது ஏதோ தற்செயல் என்று நினைக்கக்கூடாது. இந்த நேரத்திலே நாம் சந்தித்திருக்

கிறோம். இந்தச் சந்திப்பைத் தெய்வம் உண்டாக்கியிருக்கின்றது. காலம்தான் தெய்வமாக இருக்கின்றது. தெய்வம் என்றால் ஏதோ தனியாக இருக்கின்றது என்று நினைத்துக் கொள்ளவேண்டாம். காலம்தான் தெய்வம்.

**எமன் விடுத்த தூதோ!**

"காலமே உன்னை ஒத நீ வந்து காட்டினாய் கழுக்குன்றிலே" என்பது திருவாசகம். காலம் தெய்வமாக இருந்து பலவற்றை நமக்கு அறிவிக்கின்றது. நேற்று சந்திக்க வேண்டியவர்களை நேற்று சந்தித்தீர்கள். இன்று காலை சந்திக்க வேண்டியவர்களை காலையில் சந்தித்தீர்கள். இப்போது சந்திக்க வேண்டியவர்களை இப்போது சந்தித்திருக்கிறீர்கள். இப்போது அவர்கள் சொல்லுவதைக் கேட்டுக் கொண்டிருக்கின்றீர்கள். அது எந்த அளவுக்குப் பயன் படவேண்டுமோ அந்த அளவுக்குப் பயன்பட்டுக் கொண்டிருக்கின்றது. இவற்றையெல்லாம் மனதிலே வைத்துக்கொண்டு பார்க்க வேண்டும். காலத்தை எமன் என்று நினைத்தாலும் சரி அல்லது வேறு எது என்று வேண்டுமானாலும் வைத்துக் கொள்ளுங்கள். அது இறைவன் ஆணைவழி நடக்கின்றது. சந்தித்தால் என்ன நிகழ்கின்றது? ஏதோ ஒன்றைக் கொடுக்கின்றோம். ஒன்றைக் கொள்ளுகின்றோம். இப்ப நாங்க ஒன்றையும் கொடுக்கலை, ஒன்றையும் கொள்ளலிங்களே என்றால், காதைக் கொடுக்கின்றீர்கள், சொற்களைப் பெறுகின்றீர்கள். இதுபோதும். இங்கே வந்த பிறகு அறிவைப் பெறுகின்றோம். அறியாமையைத் தருகின்றோம். சில நேரங்களில் அறியாமையைக் கூடப் பெற்றுக்கொண்டு போகின்றோம். இவையெல்லாம் கூட அவன் ஆணை வழிதான் நிகழ்கின்றன. இந்த நேரத்தில் இதை நீ பெறவேண்டும், இதை நீ விடவேண்டும் என்று இறைவன் ஆணை. ஒவ்வொரு நொடியும் இறைவன் ஆணை வழி நிகழ்வதனாலே, எமன் விடுத்த தூதோ என்கிறார்.

இறைவன் ஆணை வழி இயமன், அந்த நியமம் தவறாமல் குறித்த காலங்களிலே வந்து இந்த ஊனையும், உயிரையும் வேறுபடுத்தினான். காரணம்? ஞானம் பெறுவதற்காக அல்லது ஆன்மா உயர்வு பெறுவதற்காக. இன்னும் எத்தனையோ செய்திகளைச் சொல்லவேண்டும் இதற்கு. இந்த இடங்களில் எல்லாம் பலப்பல செய்திகள் பொதிந்து கிடக்கின்றன.

ஒரு பிறவியை விட்டு இன்னொரு பிறவிக்குப் போகும்போது இறத்தல் என்ற சொல் இருக்கின்றது. **இறந்தான் என்ற சொல்லுக்கு "மேம்பட்டான்" என்று பொருள்.** இந்த நிலையை விட, மேல் நிலைக்குச் சென்றுவிட்டான் என்று பொருள். **இறத்தல் என்பதற்கு இறந்து நின்றான் அல்லது கடந்து நின்றான் என்று பொருள்.** மேல் நிலையை அடைந்தான் என்று பொருள். ஒவ்வொரு பிறவியிலும் இந்த ஆன்மா மாட்சிமைப் படுவதாலே அதற்கு இறத்தல் என்று பெயராயிற்று. மீண்டும் இந்த உடம்பிலே வரமாட்டோம். ஒரு உடம்பை விட்டுப் போய்விட்டால் வேறு உடம்புக்குத்தான் போவோம். இந்த உடம்புக்கு வரமாட்டோம். முட்டையிலிருந்து குஞ்சு வெளியில் வந்தபின்பு, மீண்டும் அந்த ஓட்டுக்குள்ளே போவதில்லை. இது பரிமேலழகருடைய உரை. முட்டையை விட்டவுடனே இந்த சீவன் ஒரு மேம்பட்ட நிலையை அடைகின்றது. ஒரு அழகான உடலை அடைகின்றது. இந்தக் கருத்தில்தான் இறத்தல் என்று சொல் இருக்கின்றது. அப்படி இந்தச் சீவனை உயர்த்துவதற்காகவே இந்த உடம்பும், உயிரும் ஒட்டிக் கொண்டு இருக்கவேண்டும். அந்தக் காலம் முடிந்தவுடன், இந்த ஊனையும் உயிரையும் தனித்தனியே பிரித்துவிடுகின்றான். அதனால்தான் அவனுக்குக் கூற்றுவன் என்று பெயர்.

கயிலாயத்தில் ஒரு செய்தி நடந்தது. அதைச் சொன்னால்தான் உங்களுக்குப் புரியும். அதனால்

நினைவுபடுத்துகின்றேன். சுந்தரமூர்த்தி சுவாமிகள் இந்த உலகத்திலே வாழ்ந்து கொண்டிருந்தார். அப்படி வாழ்ந்து கொண்டு இருக்கும்போது அவரைக் கைலைக்கு அழைக்கவேண்டும். கைலை என்பது ஞானவெளி. ஞான நிலையும் அந்த ஞானவெளியிலே ஞானத்தை வழங்குகின்ற பெருமான் இவரை அழைத்து ஞானத்தை வழங்கவேண்டும். எப்படி வழங்குவது? இந்த உலகமோ ஊனமுற்ற உலகம். இங்கே வந்தால் என்ன என்ன வந்து சேரவேண்டுமோ அத்தனையும் வந்து சேரும். அவரை எப்படி ஏற்றுக் கொண்டான் என்று சொல்லுகின்றார். நிரம்பவும் அற்புதமான பதிகம்.

**"தானெனை முன்படைத்தான்**
**அதறிந்துதன் பொன்னடிக்கே**
**நானெனப் பாடலந்தோ**
**நாயினேனைப் பொருட்படுத்து**
**வானெனைவந் தெதிர்கொள்ள**
**மத்தயானை அருள்புரிந்து**
**ஊனுயிர் வேறுசெய்தான்**
**நொடித்தான்மலை உத்தமனே"**
**(திருமுறை – 7)**

ஒரு பாத்திரத்தில் பாலை ஊற்றுவதற்கு முன்னே, அந்தப் பாத்திரத்தைத் தூய்மை செய்தல் வேண்டும். 'நன்பால் கலம் தீமையால் திரிந்தற்று' என்பார் திருவள்ளுவ நாயனார். சீவனாகிய கலத்தை முன்னே தூய்மை செய்த பிறகே ஞானமாகிய பாலை அதில் ஊற்றவேண்டும். இவையெல்லாம் இறைவன் ஆணைவழி நடக்கின்றது. ஆகையால் 'எமன் விடுத்த தூதோ' என்று சொல்லுகின்றார். ஊனையும் உயிரையும் வேறு செய்தல் எமனுடைய வேலை. வேறு செய்தால்தான் ஞான நிலையத்தை அடைய முடியும். அந்த ஞானத்தைப் பெறமுடியும். திருவடிக்குப் போகமுடியும். இது சாதாரண உலக வழக்கில் சொல்லப்பட்டது.

எமன் என்று வந்தவன் குருநாதன்தான். எமனாகப் பார்த்தான் அந்தப் பெண்ணை. அது எமன் அல்ல. குருநாதன் தன் அருட்பார்வையினாலேயே ஊனையும் உயிரையும் வேறு செய்தாள். அதனால்தான் பெண்கள் கண்ணுக்கு வாட் கண் என்று சொல்லுவார்கள். வாள் என்றால் அறுக்கும் கருவி, ஒளி, வாட்போர். **வாள் என்ன செய்யும்? அறுக்கும். எதை அறுக்கும்? ஊனத்தை அறுத்தது. எப்படி? பார்வையினாலே அறுத்தது. அதனால்தான் வாட் கண் என்றார்கள்.**

**நீள நினைந்தடியேன் உமை நித்தலும் கைதொழுவேன்**
**வாளன கண்மடவாள் அவள் வாடி வருந்தாமே**
**கோளிலி எம்பெருமான் குண்டையூர்ச்சில**
**நெல்லுப் பெற்றேன்**
**ஆளிலி எம்பெருமான் அவை அட்டித் தரப்பணியே.**
**(திருமுறை – 7)**

சுந்தரமூர்த்தி சுவாமிகளே தன் மனைவியின் கண்களைப் பார்த்து வாட்கண் என்று சொல்லுகின்றார். அப்படி ஒளி பொருந்திய கண்கள் யாருக்கு இருக்கும் என்றால் குருநாதனுக்குத்தான் இருக்கும். **யாருடைய உள்ளத்துள்ளே அருள் நலம் செறிந்து, ஒளி விளங்குகின்றதோ, அவர்கள் கண்கள் ஒளிமயமாக இருக்கும். அந்தப் பார்வை பட்டாலே நம்முடைய ஆன்மா புனிதமடையும்.** அப்படிப்பட்டவர்கள் . பார்வை அணுக்கமாக இருப்பவர்கள் மேலே படவேண்டும். தூரத்தில் இருப்பவர்களைப் பார்த்து "கிட்ட வாங்க உங்களை என் கண்ணால் பார்க்கிறேன்" என்றா சொல்லுவது? கிட்டே வந்து உட்கார்ந்து ஏங்கிக் கொண்டு கிடக்கின்றானே அவனுக்கு அந்தப் பார்வை படவேண்டும். அப்படிப் பட்டால் அது விளைகின்ற பயிரிலே நீர் பாய்ச்சினாற்போலே. வராதவர்களுக்கு ஏதாவது சொன்னால் அது பாழ் என்று அர்த்தம்.

**"நோக்கினாள் நோக்கி இறைஞ்சினாள் அஃது அவள்**
**யாப்பினுள் அட்டிய நீர்" (1093)**

முதலில் பார்த்தாள். பிறகு இறைஞ்சினாள் அப்படிப் பார்த்தது வளர்ந்த பயிருக்கு நீர் பாய்ச்சியது போல் இருந்ததாம். அப்படி வளரும் பயிருக்கு நீர் ஊற்றுவதுபோல, அவளும் பார்த்தாள். இவனும் பார்த்தான் அந்த ஆன்மாவில் இருந்த ஊனம் அறுபட்டது. அல்லது ஊனத்தை இருள் என்று வைத்துக் கொண்டால் அவளது கண் வாளுக்கு ஒப்பாகச் சொல்லப்பட்டிருக்கிறது. வாள் என்பது ஒளி. அந்த ஒளி பாய்ந்தது. இருள் (ஊனம்) அகன்றது. இவ்வளவு நாள் பொறுத்து இது நிகழ்ந்தது. நடக்கவேண்டி இருக்கின்றது. ஆகவே இந்தக் காலம் வருகின்றபோதுதான் அவை நடக்கும். பள்ளியில் சேர்த்து ஆறு மாதங்களே ஆயின. "என்னங்க!என் பையன் படிக்கவில்லையே"என்றால்! ஒன்றாவது படிப்பதற்கு ஓராண்டாவது வேண்டாமா? உடனே படிக்கவேண்டும் என்று நினைத்தால் எப்படி முடியும்?

இலக்கணத்திலே ஒரு கருத்து உண்டு. "பழையன கழிதலும் புதியன புகுதலும் வழுவல கால வகையினானே" (நன்னூல் - 462) என்று வரும். இது புறனடை. புறம் நடை என்றும் சொல்லுவார்கள். எனக்கு ஒரு 25 ஆண்டுகளுக்கு முன் திருமணம் நடந்தது. இப்போது பழசாகிவிட்டது. "பழையன கழிதலும்" பழமையானதைக் கழித்துவிட்டு, புதுசா எதையாவது சேர்த்துக் கொள்ளலாம் இல்லையா! வழுவல என்று இலக்கணம் சொல்லிவிட்டது. இப்படி யாராவது சொன்னால்தான் தப்பு. இலக்கணம் சொல்லிவிட்டது என்பதற்காக பழமையாகிவிட்ட மனைவியை கழித்துவிட்டு புதுமையாக ஒரு பெண்ணை இல்லத்தில் புகுமாறு செய்யலாமா? அந்த இலக்கணத்தின் கருத்து அதுவாயிருக்குமா? புதியன என்பது என்ன? பழையன என்பது என்ன? புதுமை என்பது ஞானம். பழமை என்பது ஆணவம். இந்தப் பழமையான அறியாமை

ஆதலால், காலத்தால் உணர்த்துகின்ற உணர்ச்சிகளைத்தான் ஊன் பிரித்தல் என்று சொன்னார். அதை எமன் என்று நாம் பொருள் கொள்ளக் கூடாது. ஆணவம், கன்மம், மாயை என்ற மும்மலங்களால் ஏற்பட்ட துன்பங்களும், வலியும் பிரிந்து போகுமாறு போகின்ற காலங்களில் கூட இந்த ஆன்மாவுக்கு கொஞ்சம் ஊனம் இருக்கத்தான் செய்யும். அந்த ஊனத்தைப் போக்கவே, அவன் சிவ ஒளியாய்த் திருமேனி தாங்கி நின்றான். அதனால்தான் எமனோ என்று நினைக்கின்றான். அவன் சிவந்த நிறமாக இருந்தான். அது சிவ ஒளி. சவ ஒளி போக சிவ ஒளியாகி நின்றான். ஊனை நீக்கி உயிரை ஒளி மயமாக்கியது. அது காலத்தால் நிகழ்ந்த நிகழ்ச்சி. அதனால் எமன் விடுத்த தூதோ என்றார்.

தில்லை மாதோ – தில்ல நகர். அங்கே தெய்வங்கள் எல்லாம் கூடுகின்ற இடம். தெய்வ நகர் அது. முப்பத்து முக்கோடி தேவர்களும், ரிஷிகளும் என்று சொல்லுகின்றோமில்லையா? அத்தனை பேரும் கூடுகின்ற நகரமாக இருப்பது தில்லை. அந்த இடத்தில் கூடி நின்று இருப்பார்கள் எல்லோரும். அப்படிக் கூடுகின்றவர்களிலே இவர் யாரோ? இவர் முத்தரா, பக்தரா, தேவரா, மக்களா? அல்லது மக்களே போல்வர் தேவரனையர் என்று சொல்லுகின்றார்களே அவர்களா? ஐயந்தானே? ஆனால் திருவள்ளுவர் தெரிந்துதான் சொல்லுவார். மக்களேபோல்வர் கயவர். தேவரனையர் கயவர். ஏன் என்றால் அந்தக் கயமையை அதற்குள் மறைத்துக் கொள்கிறார்கள்.

அதனால் அவர் சொல்லுவதுபோல் இவர் யாரோ என்று உள்ளம் மலங்கியது. அந்த ஐயமும் உள்ளத்திற்குள் எழுந்தது. அதற்கு இன்னொரு காரணமும் இருக்கின்றது. மாது என்றால் அழகு என்று பார்த்தோம் இல்லையா? ஆகவே, திருவருளே பேரெழில் வடிவாகி வந்து, முன்னே நின்று, எல்லாவற்றையும், மலவல்லமையையெல்லாம்

அழித்தது. "மாதோ" என்ற சொல்லை, மாது + ஓ என்று பிரிக்கவேண்டும். மாதோ என்று வியப்புச் சொல்லாக மட்டும் எடுத்துக் கொள்ளக்கூடாது. மாது வேறுயாருமில்லை. **மூலப்பொருளாக இருக்கின்ற ஓங்காரமே பெண்ணாக வடிவெடுத்து வந்தது.** அந்த மகாப் பிரணவமே இந்த வடிவில் வந்து என்னைத் தேற்றியது என்ற குறிப்பையும் உள்ளடக்கி "மாதோ!" என்று கூறுகிறார்.

**மடமயிலோ!**

அடுத்து மடமயிலோ என்று சொல்லுகின்றார். **மனிதனுக்கு எப்போதும் மயக்கம் இருக்கின்றது.** அவருக்கும் அந்த மயக்கமெல்லாம் இருந்திருக்கின்றது. எதனாலே மயக்கம் வந்தது? மலச்சார்பினாலே மயக்கம் வந்தது. இந்த உலக்கதில் நாம் உழன்று கொண்டிருக் கின்றோமே! ஆகவே மலம் சேர்ந்திருக்கின்றது. மலம், மலம் என்று சொல்லிக்கொண்டு இருக்கிறோமே! அப்படி யென்றால் என்ன என்று பார்க்கலாம்.

ஆணவ மலம், கன்ம மலம், மாயா மலம் என்ற மூன்று மலங்கள் இருக்கின்றன. இன்னும் நிறைய மலங்கள் இருக்கின்றன. இவற்றில் சார்வதினால் நமக்கு ஒரு மயக்கம் உண்டு. எப்படியென்று கேட்கின்றீர்களா? எனக்குக் கோபம் வந்து ஒருவரைப் பளார் என்று அறைந்து விட்டேன். பல் இரண்டு கீழே விழுந்துவிட்டது. "பார்த்தீங்களா? என்னை என்னமோன்னு நெனச்சிகினு இருக்காரு! விட்ட அறையில் ரெண்டு பல்லு விழுந்துபோச்சி" என்று சொல்லும்போது அதில் ஒரு மயக்கம். " ஐய்யோ! பல்லு விழுந்து போச்சே; இனிமேல் இவுரு எப்படிக் கடிச்சி சாப்பிடுவாரு?" என்று நினைக்கவேண்டாம்? பல்லு விழுந்து போச்சு என்றால் அதில் இவருக்கு ஒரு பெருமிதம். அதனால் அது ஒரு மயக்கம். தான் செய்துவிட்ட செயல் தப்பா சரியா என்று

**போரதோ!**

இதற்கு அப்புறம்தான் போரதோ என்பதைப் பற்றிச் சொல்லவேண்டும். போது என்றால் தாமரைதானே! என் இதயத் தாமரையில் எழுந்தருளிய உருவோ, ஒளியோ, விசும்போ? இங்கே இன்னொரு கருத்தையும் சொல்லுகின்றேன். மலர்மிசை ஏகினான் என்றால் இதயத் தாமரை மட்டுமல்ல. **இறைவன் எங்கெங்கே மலர்ச்சி இருக்கின்றதோ அங்கெல்லாம் எழுந்தருளுவான். இதயம் மலர்ந்தால் மட்டுமல்ல. அறிவுமலர்ந்தால் அறிவிலே இருப்பான். அன்பு மலர்ந்தால் அன்பிலே இருப்பான். ஆற்றல் மலர்ந்தால் ஆற்றலிலே இருப்பான். இப்படி எங்கெங்கே என்னென்ன நலம் மலர்கின்றதோ அங்கெல்லாம் அவன் இருக்கின்றான். உள்ளும் மலர்கின்றான். வெளியிலும் மலர்கின்றான். புறத்தில் மலர்கின்றான். அகத்தில் மலர்கின்றான். புறப்புறத்தில் மலர்கின்றான். அகப்புறத்தில் மலர்கின்றான். இப்படி எல்லா இடத்திலும் மலர்கின்றான்.**

முருகன் எங்கெங்கே இருக்கிறான் என்று கேட்டதற்கு நக்கீரர் பெருமான் திருமுருகாற்றுப் படையில் சொல்லுவார்.

> **"காடும் காவும் கவின்பெறு துருத்தியும்**
> **ஆறும்குளனும் வேறுபல் வைப்பும்**
> **சதுக்கமும் சந்தியும் புதுப் பூங்கடம்பும்..."** (225)

இதுபோலச் சொல்லிக் கொண்டே போகிறார். இங்கெல்லாம் இறைவன் இருக்கின்றான். இந்த இடங்களில் எல்லாம் மலர்ச்சி இருக்கின்றது. ஆகவே அங்கெல்லாம் இறைவன் இருக்கின்றான்.

அப்படியானால் நாம் செய்ய வேண்டிய வேலை என்ன? எதையாவது மலரச் செய்யவேண்டும். மலர்ந்ததற்கு என்ன அடையாளம் தெரியுமா? நம்

பக்கத்தில் உட்கார்ந்திருப்பவர், "இவர் என்ன அருமையாகச் சொன்னார் பாத்தீங்களா! என்றால், "ஆங்!என்ன சொல்லிட்டார் பெரிசா" என்போம்.இப்படிச் சொன்னால் நாம் மலரவில்லையென்று அர்த்தம். அவர் சொன்னதைக் கேட்டு, நாம் மகிழ்ந்தால் மலர்கின்றோம் என்று பொருள். அப்படி மகிழ்கின்ற குணம் சாதாரண உயிருக்கு வராது. என்ன காரணம்? உள்ளம் குவிந்து கிடக்கின்றது. அதுதான்.

அப்படிக் கூம்பிய உள்ளத்தில் இறைவன் வருவதில்லை. மலர்ந்த உள்ளத்தில் குடியிருக்கிறான். இதற்கு ஒரு அடையாளம் சொல்லுகிறேன். மொட்டாக இருக்கின்ற வரையில் அதில் மணம் இருப்பதில்லை. மலர்ந்த மலரிலே மணம் வரும். மலர்ந்த மலரிலே மணம் வருவதுபோல, விரிந்த இடங்களிலே இறைவன் இருக்கிறான், என்ற கருத்தை நினைவில் வைத்துக் கொள்ளவேண்டும். ஆகவே போதோ என்று சொன்னார்.

## விசும்போ

விசும்பு என்றால் எங்கும் பரந்திருப்பது. எல்லாம் தோன்றுவதற்கு நிலைக்களமாக இருப்பது. அருவமாய் இருப்பது. அறிவாய் இருப்பது. இவள் எல்லாமாக இருந்தாள். என்னுள் தோன்றுகின்ற காட்சிகளுக்கெல்லாம் காரணமாக அமைந்தாள். அருவமாக இருக்கின்றாள். அறிவாய் மலர்கின்றாள். அதனால் விசும்பு என்றார்.

## புனலோ

புனல் என்றால் தண்ணீர். குளிர்ச்சியாக இருப்பது. பிறப்பென்னும் வெம்மையைத் தணிவிப்பது. பிறவா நிலையைத் தருவது. கருணையே வடிவாக நிற்பது. புலன்களில் எழும் ஆசை என்னும் வெம்மையையும் தீர்த்துத் தணிவித்தது. அதனால் புனலோ என்றார்.

# 3. உருவில் கலத்தல்

**தெளிவு**

இன்று மணிவாசகப் பெருமானின் 'உருவில் கலத்தல்' எப்படி என்பதைப் பற்றிச் சிந்திக்க இருக்கின்றோம். இதில் நுழைவதற்கு முன்னே சில செய்திகளைத் தெளிவு செய்து கொள்ள வேண்டும். காட்சி, ஐயம், தெளிவு என்று முறை செய்யப்பட்டிருக்கிறது. ஆகவே இன்று நாம் தெளிவாக சிலவற்றை முன்கூட்டித் தெரிந்து கொண்டு, அதற்குப் பிறகு உள்ளே நுழையலாம்.

'ஐயுறல்' என்று சொல் ஐயம் அல்லது சந்தேகம் என்ற பொருளிலே மட்டும் இல்லை. 'ஐ' என்றால் தலைமை, அழகு. நமக்கு ஒரு பொருளிடத்தில் எப்போது ஐயம் வருகின்றதோ, அப்போது அதைப் பற்றிய தெளிவு நம்மிடத்திலே வந்து சேரும். ஐயுறுதல் என்றால் வந்து சேருதல். நமக்கு ஐயம் எப்போது வந்து சேரவில்லையோ அப்போது நம்மை நன்மை வந்து சாராது. தலைமை நமக்கு ஏற்பட வேண்டுமென்று சொன்னால் ஐயங்கள் வரவேண்டும். இந்தச் சொல்லிலே என்ன பொருள் இருக்கிறதென்று பார்த்தீர்களா ?

ஐ + உறல் என்றால், அழகு வந்து சேருதல், தலைமைப்பாடு வந்து சேருதல் என்ற பொருளிலே இந்த ஐயுறல் என்ற சொல் அமைந்திருக்கின்றது. தெளிவு - இன்றைக்கு நாம் பார்க்கப்போகின்ற தலைப்பு தெளிவு. அதற்காகச் சொல்லுகின்றேன்.

நேற்று மொழியியல் அறிஞர் சில அருமையான செய்திகளை நமக்குச் சொன்னார். அவர் சொன்ன ஒரு கருத்து, என் சிந்தனைக்கு மாறுபட்டதாக இருந்தது. அதைப் பற்றிய தெளிவைச் சற்றுச் சிந்திப்போம். பாடத்தைத் துவங்கும் முன் "தென்னாடுடைய சிவனே போற்றி! எந்நாட்டவர்க்கும் இறைவா போற்றி!!" என்று

சொல்லுகின்ற பழக்கம் எனக்கு உண்டு. அதற்கு அடுத்து "அருட்பெருஞ்சோதி! அருட்பெருஞ்சோதி! தனிப் பெருங்கருணை! அருட்பெருஞ்சோதி!" என்று சொல்லுவேன். இப்படிச்சொல்லுவது எதற்காக என்றால், நான் 'யார்' 'எவர்' என்று தெரியாமல் இருக்கட்டும் என்று தான். "முன்ன பார்த்தா எங்காளு போல இருக்குது, பின்னால பாத்தா உங்காளுபோல இருக்குது" என்று சொல்லுவார்கள். "தென்னாடுடைய சிவனே போற்றி" என்று சொன்னால் சைவர் என்று சொல்லுவார்கள். "அருட்பெருஞ்சோதி" என்று சொன்னால் சன்மார்க்கி என்று சொல்லுவார்கள். அப்படியும் இப்படியுமாக இருக்கலாம் என்பதற்காகத்தான் இப்படிச் சொல்லுகிறேன். ஆக இது ஒரு தெளிவு.

இந்தத் 'தென்' என்ற சொல் இருக்கின்றதே, அதற்குப் "பிதிர்"என்று பொருள்படும் என பரிமேலழகர் சொல்லியிருக்கிறார். நேற்று மொழியியல் அறிஞர் குறிப்பிட்டபோது, 'தென்' என்பது இறந்துபட்ட முன்னோர்கள் என்று குறிப்பிட்டார்கள். அவர் குறிப்பிட்டது பரிமேலழகருடைய உரையைத்தான். அது பொருந்துகின்றதா ? என்று நாம் எண்ணிப் பார்த்தல் வேண்டும். நம்முடைய மொழிக்கு எவ்வளவு பெருமை இருக்கின்றது என்பதைத் தெரிந்து கொள்ளுவதற்கு, ஒரு சின்ன ஆய்வு செய்து பார்ப்போம்.

தென்னாடு என்று சொல்லுகின்ற போது தென் நாடு என்று ஒரு நாடு. அப்படியே வட நாடு என்று ஒரு நாடு. இப்படியே கிழக்கு நாடு, மேற்கு நாடு என்று திசைகளைச் சொல்லி நாடுகளைச் சொல்லுகின்றோம். எதுவரையிலும் கிழக்கு! எதுவரையிலும் மேற்கு! எதுவரையிலும் தெற்கு! எதுவரையிலும் வடக்கு!என்று எழுந்து வந்து சொல்லிப் பாருங்கள். நீங்கள் எதுவரையிலும் தெற்கு என்று சொன்னீர்களோ அது வடக்காகும். இப்படிப் போகப்போக என்ன ஆகும் ? நாம் நின்ற இடம் வடக்காகி

இனி, 1959 லே என்னுடைய திருவாசக உரையில் இந்தக் குறிப்பையும், மேலும் சில குறிப்புகளையும் விரிவாகச் சொல்லிக் கொண்டிருந்தேன். அப்போது எங்களுக்கு வழிகாட்டியாக இருந்தவர்கள் இராமநாத அடிகளார் என்ற பெரியார். அவர், திருக்குறளுக்கும், திருவாசகத்திற்கும் பொழிப்புரை எழுதி வந்த நேரம் அது. திருவாசகப் பொழிப்புரையை வெளியிட்டார்கள். தென் என்ற சொல்லுக்குப் பிதிரர் என்று பொருள் சொல்லியிருக்கின்றீர்களே! அது சரியா? என்று கேட்டோம். அவர்கள் அதற்கு, "எனக்கு இது விளங்கலே, தேமொழி சொல்லுவதுதான் சரியான கருத்து, அதை அப்படியே குறித்து வைத்து எழுதுங்கள்" என்று சொன்னார்கள். ஏன் அதைச் சொன்னார்கள் என்றால், இந்தக் கருத்து நன்றாக இருக்கின்றது; இது சரியான முறை உடையது; ஆகையினாலே அதைக் கட்டுரையாக எழுதினால் நன்றாக இருக்கும் என்று சொன்னார்கள். பெரியவர்கள் சில நேரங்களில் சில கருத்துகளை வேறு ஏதோ சிந்தனையில் விட்டுவிடுவதுண்டு. அப்படியே பரிமேலழகரும் வேறு ஏதோ சிந்தனையில் இப்படிச் சொல்லியிருக்கக் கூடும் என்று உங்களுக்குத் தெளிவு சொல்ல விரும்புகின்றேன்.

இன்றைய தலைப்பு தெளிவு என்பதால் சில சிலவற்றைத் தெளிவுபடுத்தலாமே என்று எண்ணுகின்றேன். இது என்னுடைய எண்ணம். மேலும் இன்னொன்று சொல்லுகின்றார். தெளிவு வருவதற்கு முன்னே ஐயம் வருவது சரி. **ஐயம் இல்லாமலேயே தெளிந்துவிட்டேன் என்று சொல்லாதீர்கள். ஐயம் ஒவ்வொருவர்க்கும் கட்டாயம் வரவேண்டும்.**

**"தேரான் தெளிவும் தெளிந்தான்கண் ஐயுறவும்**
**தீரா இடும்பை தரும்".** **(510)**

தெளிவில்லாதவர்கள் இரண்டு பேர்கள் சேர்ந்துவிட்டால் இடும்பையாகத்தான் இருக்கும். துன்பமாக இருக்கும். இடும்பை என்ற சொல்லிலே இன்னொரு அர்த்தம் இருக்கின்றது. துன்பத்தை இடுகின்ற பை. இடும்பை எனப் பெயர் வந்தது இந்த உடம்புக்கு.

தென்புலத்தாரை நீங்கள் நினைவில் வைத்துக் கொண்டால், இனிமேல் தென்புலத்தார் என்று சொன்னால் பிதுரர் எனும் பொருளை மறந்துவிட வேண்டும்.

ஏன் இந்தப் பெயரை வைத்தார்கள் என்பதைத் தெளிவுபடுத்திக்கொள்ளலாம். இது ஒரு காரணப் பெயர். அதை அந்த மரபுப்படி விளக்கினால்தான் உங்களுக்கும் அது நன்மை. ஒருவருக்கு அவர் பெற்றோர் ஒரு பெயர் வைத்திருந்தார்கள். ஏதோ ஒரு காரணத்தாலே, பிறந்த நாளைப்பார்த்து ஒரு பெயரை வைத்தார்கள். க, கா, ந, நா என்று ஏதோ ஒரு எழுத்தை முதலாக வைத்துப் பெயர் வைத்தார்கள். அந்தப் பெயர் வழங்கிக்கொண்டே வந்தது. அவர் பிள்ளைகள் மத்தியிலே பழகுகின்ற நேரம் வந்தது. ஒரு மாணவன் சொன்னான்; "அதோ பாருடா ஓரைக்கண் வாத்தியார் வருகிறார்" என்று. ஏன் அப்படிச் சொன்னான்? அவர் கண் ஓரைக் கண்ணாக இருந்தது; அதனால் அப்படிச் சொன்னான். பள்ளிக்கூடங்களில் ஆசிரிய-ருக்குப் பிள்ளைகள் சில பெயர்கள் வைப்பார்கள். ஆசிரியருக்கு வேறு பெயர் இருக்கும். இவர்கள் ஒரு பெயர் வைப்பார்கள். "மூக்குசளி வாத்தியார் வரார்டா" என்பார்கள். 'முட்டிக்கால் வாத்தியார் வரார்' என்பார்கள். இதெல்லாம் பிள்ளைகள் வாத்தியாருக்கு ஒரு காரணம் பற்றி இடுகின்ற பெயர்கள். ஆனால் அவருடைய பெயர் எந்த நல்லோரையில் பிறந்தாரோ அந்த நல்லோரையை மையமாக வைத்துப் இடப்பட்டிருக்கும். அதுபோலத்தான் நாட்டுக்குப் பெயர் வைப்பதும் ஒரு காரணத்தை அடிப்படையாக வைத்து பெயரிட்டிருப்பார்கள்.

இங்கே இறைந்த பொருள் என்று கொள்ள வேண்டும். பொருள் நுட்பமாய் உள்ளது. அதனால், எந்த நாட்டம் உடையவர்களுக்கும் இறைந்த பொருளாக இறைவனாக, இருக்கின்றாய்; ஞான நாட்டம் உடையவர்களுக்கு சிவமென்ற பொருளாக விளங்குகின்றாய், என்பது இதன் பொருள். தென் நாட்டிற்கு மட்டுந்தானா இந்தக் கடவுள் சொந்தம்? வேறு நாட்டவர்க்கு இவன் கடவுள் இல்லையா? அப்படிச் சொல்லவில்லை. எந்த நாட்டிலும், ஞான நாட்டம் உடையார்க்குச் சிவமாக விளங்குகின்றான். நம் எல்லோருக்குமா சிவமாக இருக்கின்றான்? இல்லை எனக்கு இறைவனாக இருக்கின்றான். ஞான நாட்டம் உடைய அவருக்குச் சிவமாக விளங்குகின்றான். எனக்கு அந்த நாட்டம் இல்லை. அதனால் வேறு நாட்டமாக இருக்கின்றான். கருத்துத் தெளிவுக்காக இதை விளக்கினேன்.

நம்மிடத்திலே அருமையான, பெரிய செய்திகள் பல உண்டு. நாம் பக்கத்தில் இருந்தால் கூட அவற்றையெல்லாம் தெரிந்து கொள்வதுமில்லை; தெளிந்து கொள்வதுமில்லை.

திருக்கோவையார் என்ற ஒரு நூலைப் பற்றிச் சொல்ல வருவோமேயானால், அதை யார் பாடியது? என்று சைவப் பெருமக்கள் கேட்பார்கள். அதுதான் ஆச்சரியமான செய்தி. ஞானக் களஞ்சியத்தைப் பெருமான் நமக்குக் கொடுத்திருந்தும், திருக்கோவையாரை யார் பாடியது என்று சைவப்பெருமக்கள் கேட்பதை அன்று மட்டுமில்லை, இன்றும் பார்க்கலாம். திருக்கோவையார் மிகவும் அற்புதமான நூல்.

நாலடியாரில் ஒரு அருமையான பாடல்.

**"பொன்னே கொடுத்தும் புணர்தற்கு அரியாரைக்**
**கொன்னே தலைக்கடப் பெற்றிருந்தும் – அன்னோ**
**பயனில் பொழுதாக் கழிப்பரே நல்ல**
**நயமில் அறிவினவர்'**

பயன் கொள்ளுகின்ற அறிவில்லாதவர்கள், அதைக் கொள்ள மாட்டார்கள் என்று அந்த நாலடியார் பாடல் திட்டுகின்றது. பொன் கொடுத்தாலும் கொள்ள மாட்டார்கள். அப்படிப்பட்ட அரியவர்கள் மிகவும் எளிமையாக வருவார்கள். அந்த எளிய தன்மையைப் பலரும் பயன்படுத்திக் கொள்வதில்லை. யாரும் தேடித் தேடமுடியாதிருக்கின்ற பரம்பொருள், எளிவந்த பிரானாக வருகிறான் உலகிடையே. அப்படி உலகிடையே வந்து ஆசாரிய மூர்த்தமாக நிற்கிறான் நம்மிடையே. ஆசாரிய மூர்த்தமாக நின்று ஏதேனும் உரைக்கின்றபோது, "இவர் யார் நமக்குத் தெரிந்தவர்தானே! இவர் யார் நாம் அறிந்தவர்தானே! என்று சாதாரணமாக நினைத்துக் கொள்ளுவோம். ஆனால் அதே நேரத்திலே, அவர் வாயிலாகத்தான் நமக்குப் பல செய்திகளை இறைவன் தெளிவிக்கின்றான்.

அப்படி அரிய தோற்றம் கொண்டு நம் மத்தியில் வருகின்றபோது அவனுடைய தோற்றம் நமக்குத் தெரிவதில்லை. அந்த அருமை தெரியவில்லையென் பதற்காக ஒரு பெண்ணாகத் தோற்றம் கொண்டு வந்து மணிவாசகப் பெருமான் முன்னே நிற்கின்றான். மனைவியாக இருக்கின்ற ஒவ்வொரு பெண்ணும் அருமைப்பாடு உடையவர்கள். தாயாக வந்த ஒவ்வொரு பெண்ணும் மிகுந்த அருமைப்பாடு உடையவர்கள்;

தெய்வத்தினுடைய மற்றொரு அம்சம், அல்லது அவதாரம்; தெய்வ நலம் கனிந்த ஒரு தோற்றம்; அது மிக எளிமையாக வந்தது. ஏன் தெய்வம் தாயாக வந்தது தெரியுமா? அதை நாம் தெரிந்து கொள்ளவேண்டும். நம்மைத் திருத்த அவனுக்கு உரிமையில்லை. அதை நினைத்தால் எனக்கு அழுகை வருகின்றது. நம்மைத் திருத்தவோ, தெளிவு செய்யவோ இறைவனுக்கு உரிமை கிடையாது. அவன் நமக்குச் சொந்தம் கிடையாது. அவனும்

அநாதி. நாமும் அநாதி. என்று நீ அன்று நான் என்பார் தாயுமானவ சுவாமிகள். அதனால்தான் என்னையும் அநாதி என்றும், உங்களைப்பார்த்தாலும் அநாதி என்று சொல்லிக் கொள்ளுகிறோம்.

அநாதியாகிய பொருள் இறைவன். அவன் நம்மிடத்திலே உறவு கொள்ள முடியவில்லை. அதனாலே ஒரு வடிவத்தில் பண்பாக அவன் இறங்கி, தாயாகி, என்னை மகனாகக் கொள்ளுகிறான். அப்போதுதான் அவனால் என்னை ஈடேற்ற முடியும். தாரமாகி எனக்குப் பல அனுபவங்களைத் தருகின்றான். அப்போதுதான் என்னை உயர்த்த முடியும். தந்தையாகி எனக்கு அறிவுரை சொல்லுகின்றான். அப்போது தான் என்னைத் தெளிவு படுத்த முடியும். தாயாய், தந்தையாய், தாரமாய், உடன் பிறப்பாய், உற்றாராய், சுற்றமாய், இப்படியெல்லாம் வந்து அங்கே நிற்கிறான். இவைகளை எல்லாம் நாம் எண்ணாமல் நூலை மட்டும் படிப்போம்.

**"ஈன்றாளுமாய், எனக்கு எந்தையுமாய் உடன் தோன்றினராய்" என்று இந்தத் தேவாரத்தைச் சடங்காகப் படிப்போமே தவிர இதன் கருத்தை உணர்ந்து படிப்பதில்லை.**

"அப்பனும் நீ, அம்மையும் நீ, அன்புடைய மாமனும் நீ—" இந்தப் பாட்டு உங்களுக்குத் தெரியும் என்று நினைக்கின்றேன். இந்தப் பாட்டைப் படித்துக் கொள்ளுங்கள். ஆனால் அப்படிப் படிக்கும்போது இதன் பொருளை உணர்ந்து, அதனால் உருக்கமோ, உள்ள நெகிழ்ச்சியோ, இறைவன்தான் நமக்கு இப்படியெல்லாம் வந்திருக்கிறான் என்ற உணர்வோ நம்மில் யாருக்கும் ஏற்படுவது கடினமாக இருக்கின்றது. அதை நினைக்கின்ற போது நெஞ்சம் உருகி, நீராகிவிடுகின்றது. இதை உணர்ந்த மணிவாசகப்பெருமான்,

"அருபரத்தொருவன் அவனியில் வந்து
குருபரனாகி அருளிய பெருமையைச்
சிறுமையென்று இகழாதே"

என்று மிக அருமையாக எடுத்து விளக்கியிருப்பார். இவற்றையெல்லாம் நாம் தெளிவு செய்து கொள்ளுவோமேயானால், மணிவாசகப் பெருமானின் அற்புதக் கொடையையும், நம்மீது அவர் கொண்ட அளப்பருங் கருணையையும், அவரின் பரந்த உள்ளத்தையும் நம்மால் உணர முடியும்.

பண்டைக் காலத்திலே புலவர் பெருமக்கள் எல்லாம் தொல்காப்பியத்திற்கு சாதாரண பொருளைச் சொல்லி, அந்தப் பொருள் 400 துறையில் நிறைவில்லாமல் போன பிறகு மணிவாசகரை இறைவனே அனுப்பி, "அகப்பொருள் இன்னது என்று நீ போய் விளக்கு" என்று சொன்னான் போலிருக்கின்றது. வெறும் காம நூலாக எல்லோரும் காணுகின்றார்கள். அப்படிச் சொல்லுவது சரியல்ல. தொல்காப்பியத்தைப் படித்தால் விளங்கவில்லை; அதனால் மணிவாசகப் பெருமானே! நீதான் இந்தக் கோவையைச் செய்ய வேண்டுமென்று அவரை அனுப்பியிருப்பான் என்று எனக்குத் தோன்றுகின்றது. தொல்காப்பியருடைய நுண் உணர்வுகளைப் புரிந்து. துறைகளை அமைத்துப் பாடலைப் பாடியவர் நமது மணிவாசகப் பெருமான். அதன் சிறப்பை நாம் தெரிந்துத் தெளிய வேண்டும். அது மிகவும் அருமைப்பாடு உடையது.

அதிலே இன்னொரு குறிப்பைத் தெளிவு செய்த பிறகு நூலுக்கு வருகிறேன். இப்போது நம்மை ஆட்கொள்ள வருகின்ற தோற்றமாக தாய், தந்தை, மகன், உற்றார், உறவினர் என்றெல்லாம் சொன்னேன். "இதிலெல்லாம் கடவுளைக் காணோமே?" என்று கேட்டால், இவர்களிடமெல்லாம் நம்மால் கடவுளைக்

காணமுடியவில்லையென்று தான் பொருள். நாமெல்லாம் தாயுமானவரா? மலர் பறிக்கப் போன இடத்திலே மலரைப் பறிக்காமல் இறையுணர்வில் ஒன்றி, "பார்க்கின்ற மலரோடு நீயிருத்தி" என்று சொல்லுகின்ற உணர்வு நமக்கு வருமா? தாயுமானவருக்குத்தான் மலரைக் கூடப் பறிக்க முடியாத உணர்ச்சி வந்ததே தவிர, நமக்குக் கடவுளே நேரே வந்து காட்சி தந்தால் கூட, "உங்க கிட்ட எதாவது அடையாள அட்டை இருக்கிறதா" என்றுதான் கேட்போம். "நீங்கள்தான் கடவுள் என்பதற்கு யாராவது சான்றிதழ் கொடுத்திருக்கிறார்களா"என்று கேட்போம். மணிவாசகப் பெருமானிடம் வந்து, " இனையன்யான்" என்று தன்னை அறிவித்துக்கொண்டானாம். அப்படி அறிவித்துக் கொண்டு அவரை ஆண்டான். அப்படிப்பட்டவர் பாடிய நூல் இது. அந்த உணர்வுகள் நிரம்பிய நூல் இது. ஆகையினாலே ஒரு கருத்தை மீண்டும் தெளிவுபடுத்திக் கொள்ளலாம்.

இறைவன் நமக்கு அப்படியே வருவதில்லை. அவன் இந்த மாதிரி தேகங்களைக் கொள்ள முடியாது. அப்படி இந்த மாதிரி தேகங்களைக் கொள்ளமுடியாத பொருளுக்குச் "சோதி" என்று பெயர். அந்த சோதிக்கு ஆதியுமில்லை;அந்தமில்லை. இதனை

"**ஆதியும் அந்தமுமில்லா அருட்பெருஞ்சோதி**'

என்று பாடுவார். நாம் அதன் பெருமைகளைப் பாடலாமே தவிர அதற்கு ஆதியுமில்லை; அந்தமில்லை. அந்த ஆதியும் அந்தமுமில்லாப் பொருள் நம்மை ஆட்கொள்ளுவான் வேண்டி, உரிமை கொள்வான் வேண்டி, அங்கிருந்து கொஞ்சம் இறங்கி வருகின்றது. சோதியாக மேலேயிருந்த பொருள், அதன் சாரம் கொஞ்சம்கீழே இறங்கி வருகின்றபோது பரம் என நின்றது. அந்த பரத்திலிருந்து இன்னும் கொஞ்சம் கீழே இறங்கி வருகிறான். அப்போது பரை என பெயர் பெற்றது. பரை என்றால் எங்கும் பரவி

நிற்பது என்று பொருள். அல்லது பராசக்தி என்றும் சொல்லுவார்கள். இந்தப் பரையிலிருந்து வெளிப் படுகின்ற ஒரு சிதறலுக்கு, ஒரு ஒளிக்கூற்றுக்கு சிவம் என்று பெயர்.

அந்தச் சிவம்தான் நம் முன்னே வந்து நின்ற பெண் வடிவம். இப்போது நம் முன் வந்து நின்ற வடிவம் நாலாவது வடிவம். "சோதியே சுடரே சூழ் ஒளி விளக்கே!" எங்கேயும் தேட வேண்டாம். மணிவாசகரே எல்லாவற்றையும் சொல்லிவைத்திருக்கிறார். "அருட்சுடரே, அருள் விளக்கே, அருட்சோதி சிவமே" என்பார் வள்ளல் பெருமான். இந்தப் படிமுறையைச் சொல்லுகிறார். எப்படி நமக்காக இறங்கி வந்து, எளிமைப்படுத்திக் கொண்டு நிற்கிறான் என்று சொல்லுகிறார். மண் மண்ணாகவே வந்து நின்றால் அதை அள்ளிச் சாப்பிட முடியுமா? எவ்வளவு அருமையாக, உருண்டு திரண்டு, கனியாக, சுவையாக, இனிமையுடன் வந்து நிற்கின்றது! இது அவனது எளிவந்த தன்மை. அது மட்டுமல்ல. அதிலே அழகுமிருக்கின்றது; அருமையும் அமைந்திருக்கின்றது. எது அருமையுடனும், எளிமையுடனும், அழகுடனும் திகழ்கின்றதோ அது இறைவனாக இருக்கும்.

"அருமையில் எளிய அழகே போற்றி" என்று சொல்லுவார். அந்த நிலைகளை நாம் எண்ணிப் பார்க்கின்றபோது நம் முன்னே வந்து நின்ற பெண் "சிவம்"என்று எண்ணிக் கொள்ள வேண்டும். அதனால்தான், உங்கள் பரம்பரை என்ன? என்று கேட்பார்கள். பரம் என்பது தந்தை, பரை என்பது தாய். இவை இரண்டுக்கும் சேர்த்து வெளி வந்தது பெண். அது சிவம். ஆதியும் அந்தமுமில்லாத நிலையில் இருக்கும்போது அது ஆணா, பெண்ணா என்று சொல்ல முடியாத நிலையில் இருக்கின்றது. அப்போது அருட்பெருஞ்சோதி அது. அந்த நிலையில் அதை "ஆணிலி, பெண்ணிலி" என்று பேசலாம். ஆனால் பரை என்று வந்தபோது, ஆண்

என்றோ, பெண் என்றோ சொல்லியாக வேண்டும் மரபுக்கு. பிறகு இந்த உயிரினங்களைத் தன்வயப்படுத்தி, உயர்த்த வருகின்றபோது சிவம் என்று சொல்லியாக வேண்டும் மரபுக்கு. அந்த சிவம்தான் இங்கே பெண்ணாக வந்தது. அதைத் தெரிந்து கொள்ளுவது எதுவோ அதற்குத் தெளிவு என்று பெயர். அந்தத் தெளிவுதான் நாம் கலந்து கொள்ளுகின்ற உருவம், ஒளி. அந்தத் தெளிவிலே கலந்து கொள்ளுவதுதான் உருவில் கலத்தல்.

எப்படிக் கலந்து கொள்ளுகிறோம் என்று பார்ப்போம். இதுவரை சொல்லி வந்தது முன்னுரை. பேரின்ப உரை என்று ஒன்று சொல்லியிருக்கின்றார்கள். 'பார்வைபோலும் வடிவு என்று அறிந்தது'. முன்னே வந்து நின்ற பெண்ணினுடைய பார்வை மிகவும் ஒளி பொருந்தியதாக இருந்தது. நேற்று சிலவற்றையெல்லாம் பார்த்தோம். பார்வை என்பது சாதாரணமானது அல்ல. கண் என்பதும் சாதாரணமான கருவியல்ல. இருளைப் போக்கும் ஒளியை ஊட்டும். இந்த இரண்டும் கண்ணிலே நடக்கின்றது. இந்தப் பார்வையினால் இரண்டு வேலை நடக்கின்றது. ஒன்று இருளை நீக்குகின்றது. இன்னொரு முறை ஒளியைத் தேக்குகின்றது. இந்தப் பார்வை இது மட்டுமா செய்கின்றது? அவளுடைய வடிவமும் அப்படித்தான் இருக்கின்றது. கண்ணை வைத்து அந்த வடிவத்தை மதிப்பிடலாம்; அதன் அளவை மதிப்பிடலாம்; அதன் ப்ண்பை மதிப்பிடலாம்.

"அளக்குங்கோல் காணுங்கால் கண்ணல்லது இல்லை பிற" என்பார் திருவள்ளுவப் பெருந்தகை. ஒருவரை அளப்பதற்குக் கண் ஒன்றே போதும் என்று சொல்லியிருக்கிறார்கள். 'சாமுத்திரிகா லட்சணம்'. என்பர் நம் முன்னோர். ஒருவருடைய கண்ணை வைத்தே இவருக்கு ஞான நாட்டம் உண்டு;இவருக்கு உணர்ச்சி நாட்டம் உண்டு;இவருக்கு என்னென்ன நாட்டம் இருக்கின்றது? இவர் என்ன நிலையினர் என்று

சொல்லலாம் என்பது நூல்மரபு. அந்த மரபை நீங்களும் படித்துவிட்டால் நீங்களும் சொல்லலாம்.

ஆகையால் இந்தப் பார்வைபோலும் வடிவு என்று அறிந்தது. அந்தப் பார்வை மட்டுந்தான் சிறப்பு என்பதல்ல. அந்த வடிவமே சிறந்தது. வடிவம் முழுதும் பயன்படுவது. இந்த வடிவம் முழுதும் பயன்படுவது என்பதைத் தெரிந்து கொள்வது ஒரு பெரிய அறிவு. இப்போதெல்லாம் நாமெல்லாம் அறிவியல், அறிவியல் என்று சொல்லிக் கொண்டிருக்கின்றோம். அறிவியல் என்று சொன்னால் தான் மதிப்புபோல் தெரிகின்றது. நம்முடைய நூல்கள் எல்லாம் அறிவியல்தான். பிறந்ததிலிருந்து, வளர்ந்து, வாழ்ந்து கொண்டிருக்கின்ற ஒவ்வொரு செயலுமே அறிவியல்தான். தனியே அறிவியல் சொல்ல வேண்டிய அவசியமே இல்லை. எதை எடுத்துக் கொண்டாலும் அறிவியல்தான்.

'அதிகமாகப் பாலைக்கொடுத்து விடாதீர்கள்' குழந்தைக்கு என்கிறார்கள். அதுவும் அறிவியல்தான். இந்த நேரத்தில் கொடுக்காதீர்கள். இந்த நேரத்தில் பாலைக் கொடுங்கள் என்று சொல்வது அறிவியல் இல்லையா? அளவு படுத்துவது, முறைப் படுத்துவது எல்லாம் அறிவியல்தான். ஆகையால் அறிவியல் என்று தனியே சொல்லிக் கொண்டிருக்க வேண்டிய அவசியமில்லை. வாழ்நாள் முழுதும் அறிவியலில்தான் ஓடிக்கொண்டிருக்கின்றது. அதாவது ஒரு அறிவியல் வந்ததும், இன்னொரு அறிவியல் கொஞ்சம் மேலே போய்விடும். அது பெரிய அறிவியல் என்று நினைத்துக் கொள்ளக் கூடாது.

சைக்கிள் கண்டுபிடித்தவன் பெரிய அறிவாளி என்று நினைத்துவிடக் கூடாது. அவனை விடப்பெரிய அறிவாளி அவனுக்கு முன்னே இருந்தானே! கட்டை வண்டியையும், மாட்டு வண்டியையும் கண்டுபிடித்தானே! இவனுக்கு முன்னே, இன்னொருவன் மூட்டையை பலகை

மேல் சவுக்குக் கட்டையை வைத்துவிட்டு உருட்டினானே! அவன் இவனைவிட அறிவாளியில்லையா? **எந்த ஒரு செய்தியும் நமக்குத் தேவை என்று வருகின்றபோது அறிவு வேலை செய்ய ஆரம்பித்துவிடும்.** சிறிது சிறிதாக அந்த அறிவு விரிவுபட்டு மேலே போய்க் கொண்டே-யிருக்கும். அந்த அறிவு கொஞ்சம் பரிணாம வளர்ச்சி அடைந்து வருவதற்குள் நமக்கு வயதாகிவிடுகின்றது. இந்த அறிவை எடுத்துக் கொண்டு மற்றவர்கள் வளருவார்கள். இப்படித்தான் அறிவு வளர்ச்சி அடைந்து கொண்டு இருக்கின்றது. அந்த அறிவை எடுத்துக் கொண்டு பிழைபட்ட அறிவு கூட வளர்ந்தாலும் வளரும். நம்முடைய அறிவியல் துறை வேறு. பிறருடைய அறிவியல் என்பது வேறு.

**நம்முடைய அறிவியல் என்பது வாழ்க்கையோடு ஒட்டிச் செல்வது. இடர்ப்பாடு இல்லாதது. பிறருடைய அறிவியல் இயற்கையோடு செல்வது போல செயற்கையாகச் சென்று, இடர்ப்பாட்டையும் சிக்கலையும் உண்டாக்கும்.** மேலை நாட்டு அறிவியலில் இடர்ப்பாடு உண்டு. இந்த நாட்டு அறிவியலில் எந்தக் காரணத்தைக் கொண்டும் தீமை பயக்காத செய்திகளை நமக்குத் தந்திருக்கின்றார்கள். இதற்கு எடுத்துக்காட்டாக நிறையச் சொல்லலாம். காலத்தின் அருமை கருதி, உங்கள் சிந்தனைக்கே விட்டுவிடுகின்றோம்.

பார்வைபோலும் வடிவு என்று அறிந்தது. அந்த அறிவை அறிகின்றபோது தெளிவுபடுத்திக் கொள்ள வேண்டும். இதுவரையில் தெளிவு தெரிந்தது. நேற்று பார்த்த பொருள் எங்குமாய் இருந்தது. அதற்குப் பெயர் சிவம். அப்படிச் சொல்லலாமா? பெரியவர்கள் அப்படிச் சொல்லமாட்டார்கள். எங்குமாய் இருந்தது குருநாதன். என்பார்கள். ஏன்? உங்களுக்கே தெரிந்த செய்திகளைச் சொல்லுகின்றேன்.

ஒவ்வொரு மனிதனும் ஒவ்வொரு புத்தகம். அப்படிச் சொல்லுகின்றார்கள் இல்லையா? நீங்கள் யாரைச் சந்தித்தாலும் ஒரு புத்தகத்தைச் சந்தித்ததாக அர்த்தம். அப்போது அவர்கள் நமக்குக் குருவாகின்றார்கள். நமக்குச் சொல்லித் தருகின்றார்கள். எத்தனையோ செய்திகளைச் சொல்லித் தருகின்றார்கள். அப்படியானால் அறிவு எங்கும் பரந்து கிடக்கின்றது. அப்படிப் பரந்து கிடக்கின்ற பொருளைக் குருநாதன் என்று சொல்லுவார்கள். அது இந்தப் பெண்ணுக்குப் பொருந்துமா? என்று கேட்டால், அவள் என் வாழ்வில், எல்லாவற்றிலும் இரண்டறக் கலந்து நிற்பவள். இனி அவளுக்குத் தெரியாமல் எதுவுமே இல்லை. அவளுக்குத் தெரியாமல் எதுவுமே இருக்கக் கூடாது என்ற நிலையில் அறிவு, அசைவு, அன்பு, உணர்வு அனைத்திலும் கலந்து நிற்பவள் அந்தப் பெண். இந்த முதன்மையைத் தெரிந்து கொண்டு நடப்பதற்காக இதைச் சொன்னேன்.

"ஐயா! உங்களுக்கு ஒரு துணையை அனுப்புகின்றேன். இவர் உங்களை போகவேண்டிய பாதையில் கொண்டு வந்து விட்டுவிடுவார். அதுவரை உங்களுக்குத் துணையாக வருவார்"என்று சொல் கின்றார்கள். சரி இவர் பரவாயில்லை. இன்னொருவர். அவர் என்னைவிட நோஞ்சான். மூச்சு விட்டால்கூடக் கீழே விழுந்துவிடுவார். அவரைத் துணையாக அனுப் பினார்கள் என்றால்! அவருக்குத் துணை என்றா பெயர்? இல்லை. துணை என்பது என்னினும் வலிமையாக இருக்கவேண்டும். வழிக்குத் துணையாக இருப்பவர்கள் நம்மினும் வலிமையாக இருக்கவேண்டும்.

உலகத்திலே மாயை முதலாய மலங்களிலே ஆட்பட்டு, அதன் காரணமாக எண்ணங்களிலே உழன்று கொண்டிருக்கின்ற மனிதனை அதிலிருந்து மீட்டு எடுத்துக் கொண்டு போவது மிகவும் கடினமான காரியம். அப்படி மீட்டு எடுத்து இந்த வாழ்வின் முடிவிலே பெறவேண்டிய

பயனைப் பெறுமாறு செய்கின்ற பெண்ணுக்குத் துணை என்று பெயர். அதை நாம் தெரிந்து கொள்ளவில்லையே! புரிந்து கொள்ளவில்லையே! என்பதற்காகத்தான் திருக் கோவையாரில் பெண்ணைக் கொண்டுவந்து நிறுத்து கின்றார். இதெல்லாம் காரணம். ஒரு பெண் வடிவில் இறைவன் வரவேண்டிய அவசியமில்லை. ஆனால் மணிவாசகரின் உள்ளத்திற்குள்ளே இறைவனுடைய கருணை இப்படிச் சொல்லுமாறு, செய்யுமாறு செய்திருக் கின்றது, என்று எடுத்துக் கொள்ளவேண்டும். எல்லாக் கோவையினின்றும் இந்தக் கோவையார் மாறு பட்டிருப்பதற்கு அதுவும் ஒரு காரணம்.

குருநாதன் என்ற சொல்லுக்கு என்ன பொருள் என்று பார்க்கவேண்டும். குரு என்றால் ஒளி. நாதன் என்றால் ஒலி. ஒளியும் ஒலியுமாக எங்கும் பரந்திருக்கின்றது அந்தச் செம்பொருளாகிய சிவம். அந்தச் சிவமாகிய பரம்பொருள், ஒளியும் ஒலியுமாக எங்கும் பரந்திருக்கின்றது. இந்த இரண்டும்தான் இந்த உலகத்தை இயக்கிக் கொண்டிருக் கின்றன. பெண்கள் ஒளியாகவும் இருக்கின்றார்கள். ஒலியாகவும் இருக்கின்றார்கள். ஒளியும் முக்கியம். ஒலியும் முக்கியம். ஆண்களுக்கு ஒளி குறைவு. பெண்களுக்கு ஒளி அதிகம். பெண்களிடத்தில் ஒலி மென்மையாக இருக்கும். ஆண்களிடத்திலே ஒலி வன்மையாக இருக்கும். மென்மை என்பது பயன்படும் வகையிலே. மென்மையென்றால் சத்தம் குறைவாக இருக்கின்றது என்று நினைத்துக் கொள்ளக்கூடாது. அதற்குச் சில உதாரணங்களைச் சொல்லுகிறேன்.

உணர்ச்சிக்கு ஆண்கள். ஒளி நிலைக்குப் பெண்கள். இறைவன் உணர்ச்சி மயமாகமாட்டான். ஒளிமயமாக இருப்பான். சீவன் உணர்ச்சி மயமாகிவிடுவான். பெண்கள் என்றும் அமைதியாக இருப்பார்கள். உணர்ச்சி வயப்படமாட்டார்கள் என்பதல்ல. திட்டினால்கூட கொஞ்சம் அமைதியாக இருப்பார்கள். அடிக்கடி கோபம் வருவது ஆண்களுக்குத்தான். ஆனால் கடைசியாக

அவர்கள் திரும்பினால் அது வேறு விதமாக இருக்கும். அதற்கு என்ன அடையாளம்?

ஒளி இருக்கின்ற இடத்திலே முடி இருக்காது. உணர்ச்சி இருக்கின்ற இடத்திலே முடி இருக்கும். உணர்ச்சிக்கு அடையாளம் முடி. ஒளிக்கு அடையாளம் முடி இல்லாமை. அதனால்தான் பெண்களுக்கு முகத்திலே முடி கிடையாது. புரிகின்றதா? ஆண்களுக்கு முகத்திலே முடி இருக்கும். எங்கெங்கே முடி இல்லையோ அங்கெல்லாம் ஒளிநிலை தவழ்கின்றது என்று பொருள். எங்கெங்கே முடி இருக்கின்றதோ அங்கெல்லாம் உணர்ச்சி இருக்கின்றது. இதை நீங்களே சிந்தித்துப் பாருங்கள். முடியற்ற இடம் ஒளி தேங்கும் நிலையம். முடி உள்ள இடம் உணர்ச்சி தேங்கும் நிலையம். ஒளியும் ஒலியும்தான் இந்த உலகத்தை இயக்குகின்றது. இந்த இரண்டும் இருப்பது குருநாதனிடத்திலே. இதைத்தான்.

"நாதவிந்து கலாதீ நமோநம"

என்பார். இதை 'நாத விந்து கலாதீ நமோநம என்று சொல்லக் கூடாது. "நாத, விந்துகள் ஆதி நமோ நம"என்று பிரித்துப் பொருள் கொள்ளவேண்டும். கலாதி என்று சொல்லக்கூடாது.

ஒளியா? ஒலியா? எது முன்னே இருந்தது? அதன் நிலையிலே ஒளி முன்னது. நமக்கு வருகின்றபோது ஒலி முன்னதாக வரும். அதனாலே இதுவா? அதுவா? என்று பார்க்கக் கூடாது. தன்னிலை, முன்னிலை என்று இரண்டு இருக்கின்றது. தன்னிலையிலிருந்து முன்னிலை வேறுபாடாகத்தான் இருக்கும். உதாரணத்திற்கு ஒன்று சொல்லுகின்றேன். நான் முன்னே போய்க் கொண்டிருக்கிறேன். என்னுடைய வடிவம் உங்களுக்குத் தெரிகின்றது. ஆனால் உங்கள் வடிவம் எனக்குத் தெரியவில்லை. என்னை நீங்கள் கூப்பிடவேண்டு மென்றால் என்ன செய்யவேண்டும். ஒன்று கையைத்

தட்டவேண்டும், இல்லையென்றால் என் பெயரைச் சொல்லிக் கூப்பிடவேண்டும். அப்போது என்னைத் திரும்பிப் பார்க்க வைத்தது ஒலி. அந்த ஒலி தான் உங்கள் உருவத்தைப் பார்க்கச் செய்கின்றது. இது ஒளி. உங்களைத் திரும்பிப் பார்க்கச் செய்தது ஒலி. இறைவன் ஒளியாக இருக்கின்றான். இந்த சீவன்கள் எங்கோ பராக்குப் பார்த்துக் கொண்டு போய்க்கொண்டிருக்கின்றன. அவர்களை அழைக்க ஒலி எழுப்புகின்றான். அதுதான் 'ஓ' என்ற நாதம். ஒளியாக நின்றவன், ஒலியை எழுப்பி உலக உயிர்களைத் தன் வயப்படுத்துகின்றான். இரண்டு கூறாக நின்று ஆக்கத்தைச் செய்கிறான் என்றதனாலே "குருநாதன்" என்று சொன்னார்கள். ஒரு பாடலே கூட இரண்டு நாளைக்குச் சொல்லலாம்.

ஒரு துறைக்கு விளக்கம் சொல்ல ஆரம்பித்தாலே மிகவும் நீண்டு விடும். அவ்வளவு செய்திகளை அதற்குள்ளே அடக்கி வைத்திருக்கின்றார்கள். சூத்திரம் தானே இது. சூத்திரமாக இருப்பதனாலே பல்வகைப் பொருள்கள் அதில் செறிந்து, திட்பமும், நுட்பமும், சிறந்து காணப்படும் பாடல்கள் இவை.

நம்மை ஆட்கொள்ள வருகின்றபோது ஏன் ஒளியாக வரக்கூடாது? தெளிவுதானே! தெளிந்து கொள்ளத்தானே வேண்டும்! ஒளியாக வந்தால் நாம் உட்கார்ந்து கொண்டிருக்கமாட்டோம். எழுந்து ஓடிவிடுவோம். ஒரு தீப்பிழம்பாகத் திரண்டு, சக்கரம் போல் உருண்டு, கதவைத் திறந்துகொண்டு வந்தால், என்னமோ வருதுங்க என்று எழுந்து ஓடிவிடுவோம். அப்படியானால் அவன் நம் வடிவிலே வரவேண்டும். நாம் எப்படி யிருக்கின்றோமோ அப்படி நம் வடிவிலே வரவேண்டும். நாய்க்கு உபகாரம் செய்ய வேண்டுமானால் நாயாக வரவேண்டும். காக்கைக்கு உபகாரம் செய்ய வேண்டுமானால் காக்கையாக வரவேண்டும். குருவிக்கு உபகாரம் செய்ய வேண்டுமானால் குருவியாக வரவேண்டும்.

**"கருங்குருவிக்கு அன்று அருளினைப் போற்றி"**

அதற்குப் பிறகு பன்றிக் குட்டிகளுக்குத் தாயாக வந்து பால் கொடுத்தான். பன்றிக்கு, மாடாக வந்து உபகாரம் செய்ய முடியாது. பன்றியாகத்தான் வரவேண்டும். அந்தந்த நிலையில் வந்தால்தான் ஏற்றுக்கொள்வார்கள் மக்கள். அதனாலே இந்த மனித வடிவத்திலே வந்தான். குருவாக வந்தான். அப்படியானால்கூட உதாசீனப்படுத்தி விடுவார்கள் என்று எண்ணிப் பெண்ணாக வந்தான். ஏன் பெண்ணாக வந்தான்? கிளைக்கதைகள் சொல்லுவதற்கு நேரமில்லை. அதனால் நேரடியாகச் செய்தியைச் சொல்லிவிடுகின்றேன். **இந்தச் சீவன் ஆட்படுவான் என்பதற்காகப் பெண்ணாக வந்தான்.**

ஒரு இடத்தில் களவு போய்விட்டது. நாயைக் கொண்டு வந்தார்கள். அந்த நாய் ஒரு இடத்திற்குப் போய் அங்கேயே சுற்றிச் சுற்றி வருகின்றது. என்ன காரணம் என்று ஒருவருக்கும் தெரியவில்லை. அந்த இடத்தில் கதவு மூடியிருந்தது. இந்த வீட்டிற்குள்தான் திருடன் இருக்கிறான் என்று எண்ணினார்கள். திறந்து பார்த்தால் அங்கே ஒரு பெண் நாய் கட்டப்பட்டு இருக்கின்றது. அந்தப் பெண் நாய் இருந்ததை, மோப்பம் பிடித்துக் கொண்டு அது இருக்கும் இடத்திற்குப் போய்விட்டது இந்த ஆண் நாய். அவ்வளவுதானே தவிர வேறு ஒன்றுமில்லை.

ஓகோ! நாய் இதற்குத்தான் இங்கே வந்ததா? என்று தெரிந்து கொண்டார்கள். அங்கே கள்வன் இல்லையென்பதைப் புரிந்து கொண்டார்கள். பெரிதும் தன் உணர்வுக்கு ஏற்புடையதாக ஒன்று இருக்குமானால், வேறு ஒன்றை நாடாது இந்தச் சீவன். களவு செய்யப் போகும் ஒருவன், நாய் இருக்கும் வீட்டிற்குச் சென்றால், அந்த நாய்க்குப் புலால் துண்டங்களை வீசி விடுவானானால் அந்த நாய் குரைக்காது. அப்புறம் இவனுக்குத் தொல்லை இருக்காது. அந்த நாய்க்கு

மாறுபட்டவன் அல்ல இந்தச் சீவன். இந்தச் சீவனுடைய உணர்ச்சிக்கு ஏற்புடையதான ஒரு வடிவம் நிற்கிறது பெண் வடிவிலே. அதைப் பார்க்கிறான் அதை வைத்துத்தான் இவனை ஆட்கொள்ளவேண்டும். அதனால் அப்படி வந்தான். இதைப் "பார்வை விலங்கு" என்று சொல்லுவார்கள் சித்தாந்தத்திலே.

மானை வைத்து மானைப் பிடிப்பர். யானையை வைத்து யானையைப் பிடிப்பர். நம்மைப் பிடிப்பதற்கு இந்த உபாயம் செய்கின்றானே தவிர, அவன் இந்த வடிவம் எடுக்கவேண்டிய அவசியமே அல்ல. இல்லையென்றால் நாம் ஒத்துக்கொண்டு அவனிடத்தில் போகமாட்டோம். அப்படிப் 'பார்வை விலங்கை' வைத்து விலங்கைப் பிடிப்பது போலே, தான் மானுடச் சட்டை தாங்கியிருக்கிற ஒரு சீவனிலே நின்று இந்தச் சீவனை ஆட்கொண்டான். அந்தச் சட்டை வந்தது. அந்தச் சட்டைக்குள் ஒரு சீவன் இருக்கின்றான். அந்தச் சீவனுக்குள்ளே அவன் இருக்கின்றான். அப்படி இருந்து நம்மை ஆட்கொள்ளு கின்றான்.

நமக்குக்கூட சில சமயம் தோன்றும், இவர் முன்னே பேசியது ஒரு மாதிரியாக இருந்தது. இப்போது பேசுவது வேறுமாதிரியாக இருக்கின்றது என்று. முன்னே அவருக்குள்ளே அவன் உணர்ச்சியாக இருந்து பேசினான். இப்போது இவன் உணர்ச்சியினால் பேசுகின்றான். அதனாலே வேறாக இருக்கின்றது. "எனதுரை, தனதுரை" என்று திருஞானசம்பந்தரும், "நான் சொல்லும் வார்த்தையெல்லாம் நாயகன்தன் வார்த்தை" யென்று வள்ளல்பெருமானும், சொல்லுவார்கள், "அவன் சொன்னான். நாங்கள் சொன்னோம்" என்பார்கள். அவர்களையே சாதாரணமாக இருக்கும்போது "கேட்டீர் களானால், "நானா சொன்னேன்! நினைவில்லையே!" என்பார்கள். அப்படியானால் அவர்கள் பொய் சொல்லு கின்றார்களா? இல்லை. உண்மையைத்தான் சொல்லு

கின்றார்கள். இன்று பாடத்திற்கு வரும்போது இந்த சாலையின் எல்லைக்குப் போய்த் திரும்பி வந்தேன். என்னமோ நினைவு போய் விட்டேன்.

ஆகையால் அந்த வடிவத்தில் அவனே இருக்கின்றான். ஒன்றை மட்டும் நாம் நினைவிலே வைக்கவேண்டும். சமைக்கின்ற பெண்களாக இருந்தாலும் சரி, உழைக்கின்ற ஆண்களாக இருந்தாலும் சரி, படிக்கின்ற குழந்தைகளானாலும் சரி, யாராக இருந்தாலும் சரி, "என்னுடைய உழைப்பு பிறர்க்கு நலமாக வேண்டும்" என்று எண்ணுபவர்கள் உள்ளத்திற்குள் "அவன்" இருந்து உழைக்கின்றான்; சமைக்கின்ற பெண்கள் உள்ளத் திற்குள்ளே இறைவனிருந்து சமைக்கின்றான். படிக்கின்ற பிள்ளைகள் உள்ளத்திற்குள்ளே அவன் இருந்து படிப்பிக்கின்றான்.

ஆக, நீங்கள் "நாம் செய்யும் செயல்கள் பிறர்க்குப் பயன்படவேண்டும், பயனுடையதாக இருக்க வேண்டும்" என்று எண்ணிவிட்டால் போதுமானது. அந்த உள்ளத்திற்குள் அவனே இருந்து சமைக்கின்றான்; அவனே இருந்து உழைக்கின்றான்; உரைக்கின்றான்; அனைத்தும் செய்கின்றான்.

ஆக, இந்தச்சீவன் செய்ய வேண்டியது எல்லாம் "நாம் செய்யும் செயல் பிறர்க்குப் பயன்படவேண்டும்" என்று எண்ணுவதுதான். மற்றபடி இவன் செய்யவேண்டிய அனைத்தையும் அவனே பார்த்துக் கொள்ளுகின்றான். உணர்த்துபவனும் அவனே, உணரும் பொருளும் அவனே. உணரும் பொருள் வேறு; உணர்பவன் வேறு; உணர்த்துகின்றவன் வேறு. ஆனால் உணர்த்துபவனும் அவனே. உணர்பவனும் அவனே. உணரும் பொருளும் அவனே. அப்படி ஒரு நிலை வருகின்றது. இப்படித் தெளிவு செய்கின்றார் மணிவாசகப் பெருமான். இனி, பாடலைப் பார்ப்போம்.

## தெளிதல்

*பாயும் விடையரன் றில்லையன் னாள்படைக்*
*கண்ணிமைக்குந்*
*தோயு நிலத்தடி தூமலர் வாடுந் துயரமெய்தி*
*ஆயு மனனே யணங்கல்ல எம்மா முலைசுமந்து*
*தேயு மருங்குற் பெரும்பணைத் தோளிச் சிறுநுதலே.*

பழந்தமிழ்ப் பாட்டு. அதனாலே சொற்களுக்குக் கொஞ்சம் பொருள் தெரியாத மாதிரி தெரியும்.

சிறுநுதல் – சின்ன நெற்றி. பெரிதும் ஆண்களை விடப் பெண்களுக்கு நெற்றி சிறிதாக இருக்கும். நுதல் என்பதற்கு நெற்றி என்று எல்லோரும் பொருள் சொல்லியிருக்கின்றார்கள். **நுதல் என்பது இந்த நெற்றி அல்ல. நுதல் என்றால் விழி என்று பொருள். இந்தக் கண் (விழி) அல்ல. புருவ மத்திக்குத்தான் நுதல் என்று பெயர். பொட்டு வைக்கிறோம் இல்லையா அந்த இடத்தில் இருப்பதற்குத்தான் நுதல் என்று பெயர்.** அந்த விழிக்குத்தான் நுதல் என்று பெயர். நுதலுதல். நுதல் – இதை ஒரு பொருட் பன்மொழியாகக் கொள்ளவேண்டும். நுதல் கண் என்றோ, கண் நுதல் என்றோ சேர்த்துப் பார்க்கவேண்டும்.

புனிற்றிளங்கன்று என்று சொல்லுகிறோம். புனிறு என்றாலும் கன்று என்றுதான் பொருள். இளங் கன்று என்றாலும் கன்று என்றுதான் பொருள். கன்று என்றாலும் இளங்கன்று என்றுதான் பொருள். இதன் தன்மையை மிகுத்துச் சொல்வதற்காகச் சொன்னார்கள். இதை ஒரு பொருட் பன்மொழி என்பார்கள். கண் நுதல் என்றும் சொல்லலாம். நுதற்கண் என்றும் சொல்லலாம். அந்தக் கண் வெளிப்படுகின்ற நுண்மையான இடத்திற்கு நுதற் கண் என்று பெயர். அதனால்தான் அந்த ஒளி வெளிப்படுகின்ற இடம் கடினப்படக் கூடாது என்பதற்காகப் பெண்களுக்குப் பொட்டு வைத்தார்கள். ஒளி இங்கேதான் விளங்குகின்றது என்பதைத் தொட்டும்

வைத்தார்கள். "நெற்றிக்கு நேரே புருவத்திற்கு மத்தியில் உற்றுற்றுப் பார்க்க ஒளிவிடும் ஆனந்தம்" என்பார் திருமூல நாயனார். அந்த உண்மையை விளக்குகின்ற இடம் எதுவோ அந்த இடத்திற்குத்தான் நுதல் என்று பெயர். சிறுநுதல் என்று பெயர். **இந்த ஒளிநிலை விளங்குகின்ற ஆற்றல் பெரிதும் பெண்களுக்கே உண்டு. ஆண்களுக்கு மிகவும் குறைவு. பெண்களின் சிந்தனையில் ஒரே நாளில் கண்கள் திறக்குமானால் ஆண்களுக்கு நான்கு நாட்கள் ஆகும்.**

ஒளி விளங்கும் இடத்திற்கு நுதல் என்று பெயர். இந்த இரண்டு விழிகள் இருக்கின்றன அல்லவா. இதற்கு உள்ளே இன்னும் இரண்டு விழிகள் இருக்கவேண்டும். புருவ மத்தியில் விளங்கும் விழி மிகவும் முக்கியமான விழி. அதனால்தான் அதைப் பொட்டு வைத்து மறைத்து வைத்திருக்கிறார்கள். அந்த இடத்தை ஒருவருடைய உணர்ச்சியினால் மயங்கச் செய்யலாம். மயங்குதல் ஏற்படாமல் இருப்பதற்காகவே பொட்டு வைத்து மறைத்திருக்கிறார்கள். யாரேனும் மயங்குமாறு செய்து விடுவார்களோ என்று பொட்டு வைத்து இருக்கிறார்கள்.

பொட்டு வைத்த அடையாளங்களைப் பற்றி உங்களுக்குத் தெரிந்து இருக்கும் என்று எண்ணுகின்றேன். இருந்தாலும் முறைமை பற்றி உங்களுக்குச் சொல்லு கின்றேன். அங்கே என்னென்ன பொட்டுகள் வைப்பார்கள். சாந்து அல்லது சந்தனம், அல்லது குங்குமப் பொட்டு வைப்பார்கள். அதற்குமேல் நீறு அணிவார்கள். இவையெல்லாம் ஒவ்வொரு காலங்களில் அணிவது. சந்தனம் அணிந்தால் அந்த இடத்திலிருந்து அறிவு வெளிப்படுகின்றது என்று அர்த்தம். ஒளி ஒன்றுதான் ஆற்றல் பலவாக அந்த இடத்திலிருந்து வெளிப்படும். அப்போது சந்தனம் என்பது அறிவு வெளிப்படும் காலம். அறிவு இருக்கிறது என்பதற்கு அடையாளம் சந்தனம். மகிழ்ச்சி அல்லது இன்பம் அதற்குச் சாந்து வைப்பார்கள். இன்பம் என்றால் எதையோ நினைத்துக் கொள்ளாதீர்கள்.

மகிழ்ச்சியாக இருப்பதற்குத்தான் இன்பம் என்று பெயர். ஆற்றல் பெருகி இருப்பதற்கு அடையாளம் குங்குமம். **இல்லறத்திற்கு வந்த பிறகு ஆற்றல் பெருகியிருக்க வேண்டும். அதனால்தான் குங்குமம் வைத்தார்கள். ஏன்? ஆற்றலால் ஆண்மகனை இயக்குதல் வேண்டும்.** அதனால் அந்த இடத்திற்குச் சிறுநுதல் என்று சுட்டிக் காட்டினார்கள். "மனமே! நீ என்னத்திற்காகத் துயரப்படுகின்றாய்?" என்று கேட்கின்றார்.

**எதையுமே அதிகமாக ஆய்தல் கூடாது.** எதையும் ஆராய்ந்து கொண்டே இருக்கக் கூடாது. திருநீறு பற்றிப் பிறகு சொல்லுகிறேன். ஆய்தல் எப்படி இருக்கவேண்டும்? **பயன்கொள்ளும் வகையிலே ஆய்தல் இருக்கவேண்டும்.** தவிர வெங்காயமாக இருக்கக் கூடாது. வெங்காயத்தை உரித்தால் கடைசியில் ஒன்றும் இருக்காது. அதனால் தான் பெரியார், 'வெங்காயம், வெங்காயம்' என்று சொல்லிக் கொண்டிருந்தார். **ஆய்ந்தால் கடைசியில் ஒன்றும் இருக்காது என்பதைத் தெரிந்துதான் சொல்லியிருப்பார் போலிருக்கிறது.**

திருவள்ளுவர் சொல்வது போல, "கற்றதனால் ஆய பயன் என் கொல்?" இந்தத் திருக்குறளை எப்படிப் பொருள் கொள்ளலாம் என்று பாருங்கள்.

"கற்றதனால் பயன் என்?"

"ஆய பயன் என்?"

"கற்றதனால் ஆய என்?"

"கற்றதனால் என்?"

"பயன் என்?"

"ஆய என்?"

'என்ன பண்ணீங்க?' சொல்லைக் கொஞ்சம் மாற்றிப் போட்டால் போதும். இதற்குப் பெரிய உரை ஒன்றும் சொல்லத் தேவையில்லை. ஆய்வது என்பது

ஆய்ந்து, ஆய்ந்து இதற்குள்ளே இருக்கும் சத்தை எடுப்பதுதான். அந்த சத்துதான் பரம்பொருள் என்று தொழாரெனின் என்? அதனால் அந்த மூலப்பொருளைப் பற்றுவதற்காக நம்முடைய ஆய்வு இருக்கவேண்டும் அதற்குத்தான் சத்விசாரம் என்று பெயர். வள்ளல் பெருமானும் இதைத்தான் சொல்லியிருக்கிறார். "சத்திவிசாரம் செய்" என்று சொன்னால், 'இவன் ஏதோ ஒன்றைச் செய்து கொண்டிருக்கிறான்'. மனிதனுக்கு விசாரம் என்றால் என்ன வென்று தெரியவில்லை. அன்ன விசாரம் அதுவே பெரியவிசாரம் என்றுதான் இருப்பார்கள்.

## பாயும்விடை அரன் தில்லையன்னாள்

இந்தச் சிறுநுதலாள் இருக்கின்றாளே! அவள் தில்லையைப் போன்றவள். மணிவாசகரைவிட இனி யாரும் பெண்ணை இந்த அளவுக்கு உயர்த்திப் பேச முடியாது. தகுதி அறிந்து உயர்த்தியிருக்கின்றார். உலகத்தில் யாருமே அவர் அளவுக்கு உயர்த்த முடியாது. யாராவது ஒருவர், "ஆண்களோடு பெண்களும் சரிநிகர் சமானம்" என்று பாடிவிட்டால் அவர்களைப் புரட்சி செய்தவர்களாக எண்ணிக்கொண்டு இருக்கின்றோம். மணிவாசகரைவிட வேறு யாரும் அத்தகு புரட்சியைச் செய்யமுடியாது; பெண்ணை உயர்த்திப் பேசவும் முடியாது.

இங்கே நிற்கின்றாளே இந்தப் பெண் யார் தெரியுமா? தில்லையை ஒத்துக் காணப்படுகின்றாள். அப்படியெனின் தில்லை என்றால் என்ன? தில்லை இறைவனுக்கு உரியது; அருள்வெளி. கைலை ஞான வெளி. எப்போதும் கைலை வெளியிலிருந்துதான் நமக்குக் காட்சி கொடுப்பதையோ, ஞானம் வழங்குவதையோ இறைவன் செய்கின்றான். தன்னில் ஐக்கியப்படுத்திக் கொள்ளும் போது தில்லையில் நிற்பான். அருளும் இடம்; அணைக்கும் இடம் என்று இரண்டு இருக்கின்றன. அருளும் இடம் கைலை. அணைக்கும் இடம் தில்லை. ஒரு பெண்ணை மனைவியாக

ஏற்றுக் கொள்ளுவது மணமேடை. அவளை அணைக்கும் இடம் படுக்கை அறை. விளங்குவதற்காகச் சொன்னேன். இதேபோல் இறைவனுடைய கூறிலும் உண்டு. இந்த இரண்டிற்கும் வித்தியாசம் தெரியும்போது அவர்கள் என்ன பொருளில் இந்த வார்த்தைகளைக் கையாள்கின்றார்கள் என்று தெரிந்துவிடும்.

பாயும் விடை என்று சொல்லுகிறார், விடை பாயும். வினா இருந்தால் விடை பாயாமல் என்ன செய்யும்? வினை இருந்தால் விடை பாயத்தானே வேண்டும். நீங்கள் செய்த வினை இருந்தால் விடை பாயத்தான் செய்யும். அப்போது வினா எழுந்தால் விடை வரும். இல்லையா? அப்படி வினை இருக்கின்ற இடத்திலே இறைவன் விரைந்து செல்லுகின்றான். வினையைத் தீர்ப்பதற்கு விரைந்து செல்லுகின்ற செயல்தான் விடைமேல் அமர்ந்து செல்லுதல்: விடை என்பது வினைக்கு விடை கொடுப்பது என்று அர்த்தம்.

விடை என்றால் எருது இல்லீங்களா? என்றால், எருதுதான். பாயும் விடை என்றால் பாயந்து செல்லுதல். எருதை அறத்தின் வடிவமாகச் சொல்லியிருக்கின்றார்கள். அறத்தின் வடிவம் எருது. ஏன் அப்படிச் சொல்ல வேண்டும்? அறம் என்பது பற்று இல்லாதது. பற்று அற்ற நிலை எதுவோ அது அறம்.

"அழுக்காறு அவா வெகுளி இன்னாச்சொல் நான்கும்
இழுக்கா இயன்றது அறம்" (35)

இந்த நான்கு வகையான பற்றுகளும் அகன்ற இடத்தில் அறம் நிலைக்கும். அதுதான் அறம்.

இப்போது, மாடு ஒன்று இருக்கின்றது. இந்த மாட்டை உங்கள் வீட்டிலும் கட்டலாம். எங்கள் வீட்டிலும் கட்டலாம். எங்கள் வீட்டு வண்டியிலும் உங்கள் வீட்டு வண்டியிலும் யார் வீட்டு வண்டியிலும் கட்டலாம். "இல்லையில்லை, இது அவர்கள் வீட்டு வண்டி. நான் அதை இழுக்கமாட்டேன்" என்றா சொல்லும்? மாட்டை எந்த வண்டியில்

வேண்டுமானாலும் கட்டலாம். அதை இழுக்கும். யார் வீட்டில் கொண்டு கட்டினாலும் அவர்கள் வீட்டு வேலையைச் செய்யும். அதற்குப் பற்று கிடையாது. அது தன் கடமையைச் செய்யப் போகின்றது. செய்து கொண்டிருக்கிறது. அதனால் அதை அறத்தின் வடிவமாகச் சொன்னார்கள். சேவையே அதன் நோக்கமே தவிர, சேவையிலிருந்து அது பின் வாங்காது. யார் பூட்டி வண்டியை ஓட்டினாலும் அது பாட்டுக்குப் போய்க் கொண்டிருக்கும். பற்றற்று வேலையைச் செய்து கொண்டிருக்கும்.

பற்றற்று இருக்கும் மாட்டின் மேல் பற்றற்று இருக்கும் பெருமான் அமர்ந்து பற்றறுக்கச் செல்லுகின்றான். அப்படிச் செல்லுவது வினைக்கு விடை கொடுக்க. இப்படிச் செய்தவன் எங்கேயிருக்கிறான் என்றால் தில்லையிலே இருக்கின்றான். வினையை அறுத்துவிட்டு அவன் தில்லைக்குப் போய்விட்டான். தில்லையில் இருந்து கொண்டு அவன் என்ன செய்கிறான்?

தில்லையிலிருந்து கொண்டு உலகத்திற்கு இரண்டு வகையாக நன்மை செய்து கொண்டிருக்கிறான். அறத்தில் இரண்டு கூறு இருக்கின்றது. ஒன்று அறக்கருணை; மற்றொன்று மறக்கருணை. தில்லையில் இருந்து கொண்டு உலகம் முழுமைக்கும் பற்றுக் கோடின்றி ஆற்றலை வழங்கியபடியே பற்றின்றி நிற்கின்றான். அவனுக்கு எந்தவிதப் பற்றும் கிடையாது. போகும்போது பற்றறுக்கப் போனான். ஆனால் தில்லைக்குப் போன பின்பு அதைச் செய்யவில்லை. பற்றறுத்த இடங்களுக்கு ஆற்றல் வழங்கிக் கொண்டிருக்கின்றான். உழுத நிலத்தில் பயிரிடுவது போல பற்றறுமாறு செய்த சீவன்களுக்கு நலம் செய்ய தில்லையிலே வாழ்கிறான். அதைத்தான் தில்லை என்று சொன்னார்கள்.

தில்லை என்பது பற்றி மற்றொரு சிந்தனை. தில்லை என்பது பஞ்ச பூதங்களில் ஒன்று என்று வைத்துக் கொள்ளுவோம். உண்மையில் தில்லை என்பது பஞ்ச

பூதங்களுக்கு மேலே இருக்கின்றது. விளங்குவதற்காக தில்லை என்பது பஞ்ச பூதங்களிலே ஒன்று என்றே கொள்ளுவோம். தில்லை என்பது ஒன்றே ஒன்று மட்டுமில்லை. ஏராளமான தில்லைகள் இருக்கின்றன. சிதம்பரமும் ஏராளமாக இருக்கின்றன. ஏதோ ஒன்றுதான் இருக்கின்றது என்று நினைக்கவேண்டாம். சிதம்பரம் என்பதற்கு அளவில்லை. அதை அப்புறம் சுட்டிக் காட்டுகிறேன். பஞ்ச பூதங்களுக்கு மேலே இருக்கும் தில்லையையும் விட்டுவிடுவோம்.

பஞ்ச பூதங்களில் 'வான்' சிதம்பரம். **வானில் எந்தப் பற்றும் கிடையாது. அது எதிலும் நிற்காது. எல்லாவற்றிலும் கலந்து கொள்ளுமே தவிர எதையும் தான் எடுத்துக் கொள்ளாது. தன்னுடைய ஆற்றலை வழங்கிவிட்டு, அதை விட்டுப் பிரிந்து வந்து எப்போதும் போல் சுத்தமாக இருக்கும். இந்த மண்ணுக்கும், நீருக்கும், நெருப்புக்கும், காற்றுக்கும் ஒளியை வழங்குகின்றது. மற்ற நான்கு பூதங்களுக்கும் எல்லாவகையான அமிழ்த ஆற்றலையும் பொழிகின்றது. அப்படிப் பொழிந்ததற்காக அவற்றிட- மிருந்து எந்தக் கைம்மாறையும் அது கேட்டதில்லை. பிரிந்து நிற்கும்போது அனைத்திலிருந்தும் விடுபட்டு நிற்கும். தனித்தும் நிற்கும். கலந்தும் நிற்கும்.** அந்த நிலையை நாம் தெரிந்து கொள்ள வேண்டும்

கைலையிலிருந்து விடைமேல் வந்தான். தில்லையில் நின்று ஆடிக்கொண்டு இருக்கின்றான். இரண்டுபேருக்கும் ஆட்டந்தான். இரண்டும் வெவ்வேறு வகையான ஆட்டங்கள். இந்த இரண்டு இடங்களிலிருந்தும் செயல்படுவது எப்படியோ அப்படி இந்தப் பெண்ணும் இருக்கின்றாள். **எல்லாவற்றிலும் தன்னுடைய உணர்வுகளைத் தேக்குகின்றாள் இந்தப்** பெண். **அதற்காக ஆண்மகனிடத்திலிருந்து எந்தக் கைம்மாறையும் கருதுவதில்லை. தியாகத்தின் வடிவமாக இருக்கின்றாள். அதைத்தான் கருணையின் வடிவம் என்று** சொன்னார்கள்.

ஆசாரியன் எவ்வளவோ அறிவுரைகளையும், ஆற்றலையும் வழங்குகின்றான். மாணவனிடம் இருந்து ஒன்றும் எதிர்பார்ப்பதில்லை. நீ எப்போது நலம் பெறுவாய்! நீ எப்போது வாழ்வாய்! என்று எதிர்பார்க் -கின்றானே தவிர, இந்தச் சீவனிடம் அவனுக்குக் கொடுக்க ஒன்றுமே கிடையாது. **அறியாமையை நம்மிடமிருந்து பெறுகின்றான். அதுவும் அவனிடம் இல்லையென்ற காரணத்தினால் அல்ல. அந்த அறியாமை இந்தச் சீவனிடத்தில் இருந்தால் அவனுக்குக் கெடுதி செய்திடப் போகின்றதே என்ற கருணையினால் அதை நம்மிடமிருந்து பறித்துக் கொள்ளுகிறானே தவிர வேறல்ல.**

ஒரு குழந்தை இருமிக் கொண்டேயிருந்தது. அதற்கு ஒருவர் மிட்டாய் கொண்டு வந்து கொடுத்தார். உடனே தாயார் வந்து அந்த மிட்டாயைப் பிடுங்கிவிட்டாள். ஏன்? மிட்டாயைச் சாப்பிட்டால் குழந்தைக்கு மேலும் இருமல் அதிகப்பட்டுவிடுமோ என்றுதான்.

சீவனிடத்தில் மகா மலங்கள் எல்லாம் இருந்து கொண்டிருந்தன. அவை இந்தச் சீவனைத் துன்புறுத்திக் கொண்டிருந்தன. அவற்றை நலம் செய்யப் பறித்தானே தவிர, அவற்றைப் பறிக்க வேண்டுமென்ற அவசியம் அவனுக்கு இல்லை. பறித்தவன் அத்துடன் நில்லாமல் வேறொன்றைக் கொடுக்கின்றான். கெடுதியைப் பறித்தான். நலங்களைக் கொடுத்தான், கைம்மாறு கருதாமல். அப்படி எந்தக் கைம்மாறும் கருதாமல் அந்தப் பெண் பணி செய்து கொண்டிருக்கிறாள் தில்லையைப் போல.

இதற்காக மட்டுமா அவளைத் தில்லை என்று சொன்னார்கள்? தீவினையில் செல்லாமல் தடுப்பவள் ஒரு பெண். அறம் தான் ஒரு பெண்ணுக்கு இன்றியமையாதது. அந்த அறத்தைத் தன் உள்ளத்துக்குள் தேக்கி, அருள் சுரந்து நிற்பவள் பெண்.

"அறம் கறியாக அருள்சுரந்தூட்டும்" என்று மணிமேகலை சொன்னதுபோல அறந்தான் ஒரு பெண்ணுக்கு இன்றியமையாதது. அந்த அறத்தை மையமாக வைத்துக் கொண்டு, மனமாக வைத்துக் கொண்டு வாழ்க்கையை நடத்தவேண்டும். அதனால்தான் 'இல்லறம்'என்று சொன்னார்கள். புரிகின்றதா? இல்லறம் அவர்களால்தான் நடக்கவேண்டும். இல்லறம் என்பதற்குச் சிலர் அறம் இல்லாதது என்று பொருள் சொல்லியிருக் -கின்றார்கள். அது எவ்வகையிலும் பொருந்ததாத கூற்று.

என்னுடைய கருத்துப்படி, இல்வாழ்க்கை என்று திருவள்ளுவர் வைத்து இருக்கின்றாரே, அதற்கு என்ன அர்த்தம் என்று கேட்டால், "தன்னலம் இல்லாத வாழ்க்கை" என்று விரித்துப் பொருள் கொள்ளவேண்டும். இல்வாழ்க்கை என்றால் மனையாளுடன் கூடிய வாழ்க்கை என்று சொல்லியிருப்பார்கள். மனையாள் இருந்தால் தானே இல்வாழ்க்கை. இல்லறம். அவள் இல்லாவிட்டால் இல்லறம் என்றே பெயரில்லையே. ஒரு ஆணும் பெண்ணும் சேர்ந்தால்தான் வாழ்க்கை என்றே பெயர். இல்லாவிட்டால் அதற்கு வாழ்க்கை என்றே பெயரில்லை. வாழ்க்கை என்பதே ஆணும் பெண்ணும் கூடியதுதான். அதற்குப் போய் இல்லாளுடன் கூடியது என்று கூற அவசியமே இல்லை. **இரண்டுபேரும் இணைந்து வாழ்கின்ற வாழ்க்கையில் தன்னலம் இருக்கக் கூடாது.** அதைப் பற்றிய செய்தியைப் பிறகு விளக்கமாகச் சொல்லுகிறேன். அதற்குரிய சான்றுகள் அதிலேயே இருக்கின்றது. நீங்களே சிந்தித்துப் பாருங்கள்.

ஆகவே இந்த அறத்தைச் சான்றாக வைத்து, எங்கே வினை நிகழ்கின்றதோ அங்கே அவர்கள் உள்ளம் செல்லுகின்றது. அந்த உள்ளம் 'அற உள்ளம்'. அதையே தங்கள் ஆணைக்கு உள்ளாக்கி வைத்திருக்கின்றார்கள். அறத்தை ஆணையாக்கி அறத்தின் மேல் ஆணை செலுத்துகின்றவர்கள் பெண்கள். இதைப் பாயும் அரன் என்றார்.

அரண் என்றால் காப்பு என்று பொருள். அரன் என்று சொன்னால் காப்பவன் என்று பொருள். அரண் என்றால் மதில் சுவர் என்று பொருள். நாட்டைக் காப்பதற்குக் கோட்டைச் சுவர் (அரண்) இருப்பதுபோல என்னைக் காப்பதற்கு இவள் இருக்கின்றாள். ஆயிரம் காவலர்கள் இருந்தாலும் ஒருவரைக் காப்பாற்றிவிட முடியாது. ஒருவனுக்கு வாய்ந்த மனைவி அவனைக் காப்பாற்றி விடுவாள். என்னுடைய உணர்ச்சியினுடைய தீங்கிலிருந்து என்னை யாராலும் காப்பாற்ற முடியாதது. அவளால்தான் என்னைக் காப்பாற்றி நெறியில் நிறுத்த முடியும். எவ்வளவுபெரிய சட்டம் போட்டாலும் என்னைக் காப்பாற்ற முடியாது. அவ்வளவு பெரிய காவல்! எப்படி சீவனை வினையிலிருந்த நீக்கி, அறம் செய்து, இறைவன் காப்பாற்றினானோ, அப்படி இவள் என்னைக் காப்பாற்றுகிறாள்.

எப்படி விடைமேல் வந்து வினையை நீக்கிக் காப்பு செய்ததால் அவனுக்கு அரன் என்று பெயர் வந்ததோ, அதுபோலே அவளும் அரண் செய்து கொண்டிருக் கின்றாள். அதனாலே அவளை அன்னாள், விடை அன்னாள், தில்லை அன்னாள், பாயும் விடை அன்னாள், பாயும் தில்லை அன்னாள், அரன் தில்லையன்னாள், அரன் விடையன்னாள், என்று பொருள் கொள்ள வேண்டும். அப்படி அவள் வினையைத் தீர்க்கின்ற வகையில் செயல்பட்டுக் கொண்டிருக்கின்றாள்.

சுருக்கமாக இன்னொன்று சொல்லுகின்றேன். பெண்களுக்கு மலர் சூடுவது என்றால் மிகவும் பிடிக்கும். கணவன் வெளியில் சென்று வீட்டிற்குத் திரும்பி வரும்போது மலர் கொண்டுவந்தால், வாங்கி அப்படியே தலையில் வைத்துக் கொள்ள மாட்டார்கள். எந்தப் பெண்ணும் வைத்துக் கொள்ள மாட்டார்கள். அதை இறைவன் திருவடியில் வைத்துவிட்டு, கணவனுக்கு உணவு போட்டுவிட்டு, சாவகாசமாக உட்கார்ந்து கொண்டு கேட்பார்கள். "காலையில் எட்டணாதானே

எடுத்துக் கொண்டு சென்றீர்கள். எப்படி இந்தக் காசு வந்தது?" என்று கேட்பார்கள். கடன் வாங்கி இந்த மலரை வாங்கி வந்தேன் என்று சொன்னால், இந்த மலர் எனக்கு வேண்டியதில்லை என்று சொல்லிவிடுவார்கள். இல்லை, இல்லை, எனக்குக் கையூட்டுக் கொடுத்தார்கள் நிறைய; அந்தப் பணத்திலிருந்து இதை வாங்கிவந்தேன் என்றால், அப்போதும் அந்த மலரை வேண்டாம் என்று சொல்லி விடுவார்கள். மலரை வாங்கி வந்தால் உங்கள் வருவாய்க்குள் வாங்கிவரவேண்டும். தவறான வழியில் சென்று காசு சம்பாதித்து, அதில் மலர் வாங்கிவரக்கூடாது என்று சொல்பவளாக இருக்கவேண்டும் பெண். இப்படிச் சொல்லுகின்ற பெண்ணைத் தொல்காப்பியத்தில் பார்க்கலாம். அதுதான் பெண்ணுக்கு அழகு. **கணவன் வரவறிந்து வாழ்க்கை அறத்தைக் கடைப்பிடிப்பவளாகப் பெண் இருக்கவேண்டும்.** அதனால் பாயும் விடையன்னாள் என்றார்.

பிறகு தில்லையன்னாள் என்று சொன்னதனாலே, **வினையை மட்டும் நீக்கிவிட்டால் போதாது. வினைவை உண்டாக்க வேண்டும்.** அதனாலே தன்னோடு அணைத்து நின்று பெரு நலங்களை விளைவிக்கவேண்டும். பாயும் விடையிலே அருள் புரிகின்றாள். தில்லை அன்னாள் என்பதினாலே அணைக்கின்றாள் என்று அர்த்தம்.

அணைப்பு என்பது ஒன்றும் சாதாரணமான செய்தி அல்ல. அதில் பெரிய செய்திகள் அடங்கியிருக்கின்றன. அந்தச் செய்திகளை மீண்டும் வாய்ப்பு வருகின்றபோது சொல்லுகின்றேன். எப்படியும் வாய்ப்பு வரத்தான் செய்யும். அணைத்தல், அதனாலே ஏற்படுகின்ற நிகழ்ச்சிகள், அந்த உண்மைகள், எப்படி அந்த உணர்வுகள் எழும் என்பதையெல்லாம் அகராதியில் பார்த்தால் தெரியாது. இவையெல்லாம் உணர்வு சம்பந்தப்பட்டவை. "உணர்ந்தார்க்கு உணர்வரியோன்". உணர்ந்து உணர்ந்து கூறினும், உணர்வுக்கு அப்பாற்பட்ட செய்திகள் இது. உணர உணர உணர்வுக்கு அப்பாற்பட்ட பொருளிது.

**படைக் கண்**

அவளுடைய கண்கள் படைக் கண்கள். ஒரு படை புறப்பட்டுப் போனால் என்ன செய்யும்? படை என்பது பகையை வெல்லும் என்று அர்த்தம். இப்போது இவளுடைய கண்கள் படையாக இருக்கின்றன என்கிறார். எங்களுடைய இராமநாத ஐயா அவர்கள் அடிக்கடி சொல்லுவார்; கோயிலுக்குப் போகும்போது உடன் மனைவியையும் அழைத்துக் கொண்டுதான் செல்ல வேண்டும், என்பார். ஏன் அப்படி என்று கேட்டதற்கு, **"ஆண்மகனது மனம் எப்போதும் சலனத்தில்தான் இருக்கும். அவன் எப்போதும் சரியானவன் இல்லை. மனைவி கூடவே வரும்போது, இவன் கண்கள் வேறுபக்கம் திரும்ப, மனைவியின் கண்கள் இவனைப் பார்க்கும்போது பேசாமல் அடங்கிவிடுவான். அதனால் தான்" என்றார்.** நகைச்சுவையாகச் சொன்னாலும், நடைமுறையில் பார்க்கும்போது இதில் எவ்வளவு பெரிய உண்மை பொதித்து கிடக்கிறது என்பதைப் பார்த்தால்தான் தெரியும்.

**இந்தப் படைக் கண்கள் நம்மைத் தீமையிலே செல்லாமல் தடுக்கின்ற கண்கள். அது மட்டுமல்ல பல உண்மைகளை விளக்கித் தீமைகளை அகற்றும் தன்மையது.** அதனால்தான் இந்தக் கண்ணுக்குச் சிறப்பு அதிகம். மீண்டும் உங்களுக்கு நினைவூட்டுகின்றேன்.

திருக்குறளிலே, கண்ணோட்டம் என்ற அதிகாரத்தைப் பாருங்கள். "கண்ணுக்கு அணிகலம் கண்ணோட்டம்" என்பார் திருவள்ளுவர். கண என்பது இரக்கம் உடைய ஒரு பொருள். இரக்கத்தைக் காட்டுவது. கண்ணோட்டம் இல்லையென்று சொன்னால் 'மண்புக்கு மாய்வது மன்' என்று சொல்லியிருக்கிறார்கள். இந்த உலகம் எப்போதோ போய்விட்டிருக்கும். கண்ணோட்டம் என்றால், கண்களில் இரக்கம் இருக்கவேண்டும். அது பலவேறு பிணிகளைப் போக்குவது. அப்படிப்பட்ட

படைக் கண்களை உடையவளாக அவள் இருக்கின்றாள். அவள் கண்கள் படைக் கண்கள். என் பகையை அகற்றி, என் வினையை அகற்றி, என்னை அறம் செய்ய இவள் இருக்கின்றாள். இப்போது தெளிவு வந்துவிட்டது. என்னை அணைத்து அருளூட்ட இவள் இருக்கின்றாள். இந்தத் தோற்றம் என்னை ஆட்கொள்ள வந்துவிட்டது என்ற தெளிவு வந்துவிட்டது.

இப்போது அந்த உருவில் மனம் கலக்கிறது. இதுதான் உருவில் கலத்தல். அந்தக் கண்கள் தீமையை அழித்து ஒளியை வழங்குகின்றன. அவளது பாதம் நிலத்தில் தோய்கின்றது. எனக்கு அவளது பாதம் தெரிகின்றது. எந்தப் பாதம் இது? நான்முகனும், திருமாலும் தேடியும் அடைய முடியாத திருவடி இது. அது தெரிகின்றது. எனக்கு ஞானம் கொடுத்து, வாழ்விக்க வந்திருக்கின்றது. இருளறுத்தது மட்டுமல்ல. எனக்குக் கொடுக்கவேண்டிய ஞானத்தைக் கொடுக்க வந்திருக்கின்றது. புலன் இன்பத்தில் ஆட்படுகின்ற என்னை அதிலிருந்து விடுபடச் செய்கின்றது. திருவடி இன்பத்தைக் காட்ட வந்திருக்கின்றது என்பதைத் ங்தோயும் நிலத்தடிங்என்று குறிப்பிடுகிறார்.

அடி தோயும் என்பதினாலே என் உள்ளத்திலும் திருவடி தோயும் என்று அர்த்தம். ஏன் என்றால் அதுதான் அடி. அடி என்பது ஏது என்று நமக்குத் தெரியவில்லையே! அதுதான் நம்மை அடிக்கின்றது. நாம் அடுக்க நம்மை அடித்துக் கொண்டேயிருக்கின்றது. தப்பு செய்யாதே! தப்பு செய்யாதே! என்று அடித்துக் கொண்டேயிருக்கும். ஞானம் நம்மைத் திருத்திக் கொண்டேயிருக்கும். அதனாலே அடி என்றே சொல்லுகிறார்.

"தூமலர் வாடும்" என்பதற்குப் பெண்ணுடைய மாலை வாடும் என்று சொல்வது பொதுவான கருத்து. இங்கே மலர் என்பது நெஞ்சத்தைக் குறிக்கும். அவளது

நெஞ்ச மலர் எனக்காக வாடுகின்றது. ஏன் தெரியுமா? "என் நெஞ்சார அவருக்கு இன்னும் உபகாரம் செய்ய முடியவில்லையே!"என்று வாடிக் கொண்டிருக்கின்றது. அது வாடுவதாலே என்னை ஏற்றுக் கொள்ளப் போகின்றது என்று அர்த்தம். ஓர் ஆசிரியர் "இந்த மாணவனுக்குப் புரியவில்லையே" என்று வாடுகிறார் இவனை எப்படி வாழ்விப்பது? என ஏங்குகிறார் என்று அர்த்தம். எப்படி இவனை உருவாக்குவது? உய்விப்பது? என்று ஏங்குகிறார். நம்மைத் திருத்த வந்த அந்தத் தோற்றம் வாடுகின்றது. ஏன்? இந்தச் சீவன் இன்னும் தெளியாமல், இதுவா? அதுவா? என்று தெரிந்து கொள்ளாமல், ஆராய்ச்சி செய்து கொண்டேயிருக்கின்றதே! அப்படியே விழுந்து பற்றிக் கொள்ளவேண்டாமா? தெளிய வேண்டாமா? தெளிந்து செயல்படவேண்டாமா? பெண்ணைப் பார்த்தோம்;மனம் ஒத்திருக்கிறது. உடனே திருமணத்தை முடித்துக் கொண்டு வாழ்க்கையைத் தொடங்கிவிட வேண்டாமா? அதை விடுத்து இன்னும் இவள் அப்பா யார்? அம்மா யார்? எந்த ஊர்? என்று ஆராய்ச்சி செய்து கொண்டேயிருக்கின்றானே!என்று வாடுகின்றது.

திருமுருகாற்றுப் படையில் நக்கீரர் பெருமான் ஆறுபடை வீடுகளுக்குப் போ போ என்று சொல்லு கின்றார். போகின்றோம். ஒவ்வொரு . படைவீடாகப் போய்விட்டு ஆறாவது படைவீட்டிற்குப் போகிறோம். அங்கே போன பின்னே இறைவன் வெளிப்பட்டவுடனே, நீங்கள் காலதாமதம் ஏதுமின்றி விழுந்து வணங்கி விடவேண்டும் என்கிறார்.

கைதொழூஉப் பரவி காலுற வணங்கி (252)

விடவேண்டும் என்கிறார். அடுத்த நொடிக்கு காத்திருக்காதீர்கள். ஆராய்ந்து கொண்டிருக்காதே. அதனால் மணிவாசகர் சொல்லுவார்:

**"துயரமெய்தி ஆயுமனனே"**

தோயும் நிலத்தடி காட்டிய பிறகு ஏன் வாடுகின்றாய்? திருவடியைக் காட்டிய பிறகு ஏன் துயரம் எய்துகின்றாய்? வாடுகின்ற உள்ளத்தைக் காட்டிய பிறகுமா துயரம் எய்துவது? அந்தத் திருவடியைப் பற்றிக் கொள். அப்படி இல்லாமல் ஆய்ந்து கொண்டிருக்காதே. நிரம்ப ஆய்ந்து கொண்டிருந்தால் என்ன ஆகும் தெரியுமா?

ஒருநாள் கீரை வாங்கிக்கொண்டு போயிருந்தேன் வீட்டிற்கு. என்னையே ஆய்ந்து கொடுக்கச் சொன்னார்கள். நானும் ஆய்ந்து கொடுத்துவிட்டுக் குளிக்கச் சென்று விட்டேன். அதற்குப் பிறகு என் மாமியார் வந்தார்கள். அவர்களிடம் அந்தக் கீரையை ஆய்ந்து கொடுக்கச் சொன்னார்கள். அவர்கள் அதில் பாதியை ஆய்ந்து எடுத்துப் போட்டுவிட்டார்கள். அதற்குப் பிறகு என் பெரியம்மா வந்தார்கள். அவர்களிடம் கொடுத்து ஆயச் சொல்லிவிட்டுப் போனார்கள். அவர்கள் அதில் பாதியை எடுத்துத் தூரப் போட்டுவிட்டார்கள். நான் வந்து பார்க்கும்போது 1/8 பங்குதான் அங்கே இருந்தது. இன்னும் யாராவது இருக்காங்களா? என்று கேட்டேன். இன்னும் இரண்டு பேர் ஆய்ந்தால் கீரையே இருக்காது.

ஆகையால் சும்மா ஆய்ந்து கொண்டே போய்க் கொண்டிருக்கக் கூடாது. அந்தப் பெண்ணின் மனதில் இடம் பெறு.

**அணங்கு அல்லள்**

என்னை அச்சுறுத்துவதறகாக வந்த அதி தேவதை அல்லள். அணங்கு காமன், என்று ஒரு பொருள். அச்சுறுத்தும் அதி தேவதை என்று பொருள். ஒளி என்று ஒரு பொருள். அணங்கு அல்லள். இவள்மேல் இன்னும் சந்தேகப்படாதே. உன் குருநாதன்தான் இவள். அணங்கு

என்றால் அப்படித்தோன்றி அச்சுறுத்திவிட்டுப் போய்விடும். இதில் இரண்டு செய்திகள் உண்டு.

அணங்கு என்றால், சிலது பேய்கள் போல வந்து நிற்கும்.

"இந்தப் பெண்ணைக் கட்டிக் கொண்டதைவிட ஒரு பேயைக் கட்டிக்கொண்டிருக்கலாம்" என்பார்கய். அதாவது பெண் வடிவம் தெய்வ வடிவம். தெய்வம் பெண்ணாக வருவது உண்டு. பேயும் பெண்ணாக வந்து நிற்பதுண்டு. இவள் உன் நெஞ்சை அலைபாயச் செய்யக் கூடிய தோற்றம் அல்ல. பேய் அலையுமாறு செய்வது. ஒரு பெண் நம் வாழ்க்கைக்குத் துணையாக வந்துவிட்டால், நம் நெஞ்சத்தில் அலைமோதுகின்ற தன்மை போய்விடும். அது எப்போது அடங்கும்? நிறை கொள்ளாத பெண் இவனுக்குத் துணையாக வந்தால் இவனது மனமும் நிறைகொள்ளாது. அப்படிப்பட்டவள் அல்லள் இவள். இவள் அணங்கு அல்லள்.

இந்தப் பஞ்ச பூதத்தில், ஒரு பூதத்தின் அதி தெய்வத்தை நீங்கள் வணங்கினால் அதற்கேற்ற பயன்கிடைக்கும். கிடைக்காமல் போகாது. ஆனால் அனைத்து நலமும் ஒருங்கே கிடைக்காது. இந்தச் சீவன் பெறவேண்டிய அனைத்து நலன்களும் ஒன்றாகக் கிடைக்காது. அதி தெய்வங்கள் என்பது பிரம்மா, திருமால், ருத்திரன், சிவம், சதாசிவம் இவையெல்லாம் பஞ்ச பூதங்களின் அதி தெய்வங்கள். இங்கே சிவம் என்று இருப்பதால், அங்கே சிவம் என்று குறிப்பிட்டதும் இதுவும் அதுவும் ஒன்று என்று எண்ணிக் கொள்ளக்கூடாது.

அதிதெய்வங்களிலும் பிரம்மன், திருமால், ருத்திரன், சிவன், சதாசிவம் இருக்கின்றார்கள். அதில் பிரம்மா மண்ணுக்கும், திருமால் நீருக்கும், ருத்திரன் நெருப்புக்கும், சிவம் காற்றுக்கும், சதாசிவம் வானுக்கும் அதி

தெய்வங்கள். இதே பெயரில் பரம்பொருளும் உண்டு. அந்தப் பரம்பொருள்தான் இவள். இவள் அணங்கு அல்லள். அதிதெய்வம் அல்ல.

அதிதெய்வங்களை வணங்கினால் பயன் மிகவும் குறைவாக இருக்கும். பரம்பொருளாகிய திருமால் வேறு. அதிதெய்வமாகிய திருமால் வேறு. பரம்பொருளாகிய சிவம் வேறு. அதி தெய்வமாகிய சிவம் வேறு. ஆனால் இங்கே குறிக்கப்படுகின்ற திருமால் அதி தெய்வம். அவர் படியளக்கின்றவர். அவரால் நாழி அளவுதான் கொடுக்கமுடியும். நாலு நாழி கேட்கக்கூடாது. கேட்டால் அவரால் கொடுக்க முடியாது. இன்றைக்கு எனக்கு ஐந்து ரூபாய்தான் கொடுக்க வேண்டுமென்றால் ஐந்து ரூபாய்தான் கொடுப்பார். அதற்கு மேல் கொடுக்க மாட்டார். பிரம்மாவால் பரம்பொருளின் ஆணை வழி நின்றுதான் படைக்கமுடியுமே தவிர, தானே யார் ஒருவருக்கும் ஆயுளைக் கூட்டியோ, குறைத்தோ படைக்கமுடியாது. அதிதெய்வங்களுக்கு அவ்வளவுதான் ஆற்றல்.

ஆனால் எல்லாம் வல்ல பரம்பொருளுக்கு, இவர்களை எடுத்து எறிந்துவிட்டு, தானே ஆக்கல், அழித்தல், காத்தல், மறைத்தல், அருளல் ஆகிய அனைத்தையும் செய்து விடமுடியும். பிரம்மா படைக்கும் தொழிலை மட்டுந்தான் செய்வான். திருமால் காக்கும் தொழிலை மட்டுந்தான் செய்வான். ருத்திரன் அழிக்கும் தொழிலை மட்டுந்தான் செய்வான். சிவம் அல்லது சக்தி மறைக்கும் தொழிலை மட்டுந்தான் செய்யும். சதாசிவம் அருளும் தொழிலை மட்டுந்தான் செய்யும்.

அப்படி இந்த அதி தெய்வங்கள் ஒவ்வொன்றும் ஒவ்வொரு தொழிலை மட்டுந்தான் செய்யமுடியுமே தவிர அனைத்துத் தொழிலையுமோ, அல்லது வேறு எந்தத் தொழிலையுமோ செய்யமுடியாது. பரம்பொருள் மட்டுமே

அனைத்துத் தொழிலையும் செய்யும். அந்தப் பரம்பொருள்தான் இவள். அணங்கல்லள். அத்தனை நலங்களையும் வழங்கக்கூடிய அநாதிப் பொருள்தான் உனக்கு முன்னே வந்திருக்கின்றது. அணங்கல்லள் என்று சொல்லுகிறார்.

**அம்மா முலை சுமந்து**

அம் என்றால் அழகிய, மா என்றால் பெரிய, முலை என்றால் மார்பு என்பது உங்களுக்குத் தெரிந்த செய்தி. பெண் என்று சொல்ல வந்தபோது உறுப்புக்களைச் சொல்லித்தானே ஆகவேண்டும். என்ன அழகு அது? மா என்றால் பெரிய, சிறந்த, அளவிறந்த என்றெல்லாம் பொருள் இருக்கின்றது. அப்படி அழகும், அளவிறந்த சிறப்பும் வழங்கக் கூடிய கருவி இது. இந்தத் தோற்றம் அளவிலா அழகையும் - யாருக்கு? - இந்த சீவனாகிய உனக்கு அளவிலா அழகையும், அளவிலா நலத்தையும், சிறப்பையும் வழங்கக் கூடிய கருவி இது. இது வரையிலும் பெறாத நலங்களை உனக்குக் கொடுக்கக் கூடிய கருவி இங்கே இருக்கிறது என்பதைச் சொல்லுகின்றார். இதை உணர்ந்து கொள்ளுவதில்லை நாம். இது ஏதோ ஒரு கருவி அவ்வளவுதான் என்று நினைக்கின்றோம். தெளிவைச் சொல்லுகின்றார்.

இந்தக் கருவிகள் என்ன செய்கின்றன? இருவகையான ஞானங்களை வழங்குகின்றன. என்ன ஞானம்? நூல் ஞானம், நுண் ஞானம் என இரண்டு. நூல் ஞானம் என்பது - பல்லாயிரம் நூல்களைப் படிக்கின்றோம் என்று வைத்துக் கொள்ளுங்கள். அத்தனை நூல்களும் வழங்கா அறிவையும் அனுபவத்தையும் இந்தக் கருவிகள் வழங்கும். நுண் ஞானம் என்பது மதி நுட்பம். மதி நுட்பத்தையும், நூல் நுட்பத்தையும் அதில் ஈடுபடாமலேயே இந்தக் கருவிகள் வழங்கவல்லவை. இந்தக் கருவிகளின்

மூலமாக அவற்றை நீங்கள் பெற்றுவிடலாம். அவற்றைத் தந்து ஆன்மாவைச் செழிக்கச் செய்கின்ற அழகுடையது இது. பெரிய ஞானானுபவங்களைத் தரவல்லது இது. அந்த ஞான அனுபவத்தைத் தருகின்றபோது வேறு ஒன்று கிடைக்கும். ஒன்று கூடினால் ஒன்று குறைந்து காணப்படும். அப்படிக் குறைந்து காணப்படுவது இடை.

அதைத் தேயும் மருங்குல் என்கிறார். அந்த அனுபவங்கள் மிக மிக உலகியலாகிய உலகியலில் கூடிக் கிடக்கும் நலங்கள் எல்லாம் குறையும். யோகத்திலே காணப்படுகின்ற அனுபவங்கள் எல்லாம் குறைந்து காணப்படும். உலகப் பண்டங்களில் இருக்கின்ற இன்பங்கள் எல்லாம் குறைந்து காணப்படும். அருளியல் இன்பங்கள்தான் மிகும்.

உலக இன்பங்களைக் குறைத்து, அருளின்பங்களை மிகச் செய்து, ஆன்மாவுக்கு சிறப்பைச் செய்து, முத்தி நலம் வழங்கக் கூடியது. இதனைப் பெருந்தோளி என்பார். தோள் – "தோளா முத்தச் சுடரே போற்றி," துளைக்கப்படாத தன்மையைச் செய்வது. ஓட்டை விழாத நல்ல பாத்திரமாக ஆகிவிடுவீர்கள். அப்படிப்பட்ட தன்மை உடையதற்குத் தோள் என்று பெயர். பெருமை அனைத்தையும் வழங்கக் கூடிய தோள் படைத்தவள் இந்தப் பெண்.

இவள் மிகவும் சிறிய நெற்றி படைத்தவள், என்று இந்தப் பெண்ணின் அத்தனை நலங்களையும் சொல்லி, குருநாதன் தான் உங்களுக்கு அத்தனை சிறப்புகளையும் நலங்களையும் செய்து வழங்குவான். அவன்தான் இப்போது உன் முன்னே வந்து நிற்கிறான். என்பதைத் தெளிந்து கொள். இப்படித் தெளிந்த தெளிவையும், தான் அதனோடு கலந்த கலப்பையும், மணிவாசகப் பெருமான் இங்கே தெரிவித்திருக்கின்றார்.

# 4. அருளில் கலத்தல்

## முன்னுரை

மணிவாசகருடைய அருள்மொழிகளைச் சிந்தித்து மனதிலே ஏற்றுக் கொள்ளுகின்ற நாள் நமக்குக் கிடைத்திருக்கின்றது. இந்த நல்ல நாளிலே அவருடைய மொழிகளைச் செவிமடுப்பதற்கு நாம் புண்ணியம் செய்திருக்க வேண்டும். இன்றைய தலைப்பு 'அருளில் கலத்தல்' என்று கொடுத்திருக்கிறார்கள். அதற்கு அவரே 'நயப்பு அல்லது நயத்தல்' என்று தலைப்பு கொடுத்திருக் கின்றார். அந்தத் தலைப்பை மட்டும் கொஞ்சம் முதலிலே சிந்திக்கலாம்.

எதைச் சொன்னாலும் நயமாகச் சொல்ல வேண்டும். இந்த 'ந' 'ஞ'வாக மருவும். ஞயம்பட உரை. எதைச் சொன்னாலும் நயமாகச் சொல்லுங்கள் என்று சொல்லுவார்கள். அப்படியென்றால் விரும்பும் வகையிலே சொல்லுதல் வேண்டும். நயம் என்பதற்குத் திடம் என்று ஒரு பொருள் உண்டு. அப்படித் திடமாக இருத்தல் வேண்டும். எது திடமான பொருளோ அது நயமாகவும் இருக்கும். விரும்பத்தக்கதாகவும் இருக்கும். அதனாலே நயப்பு என்று தலைப்புக் கொடுத்துப் பேசுகிறார்.

எப்படி நயப்பது? நயக்க வேண்டிய முறையில் நயப்பது. உதாரணமாக ஒரு செய்தியை எடுத்துக் கொள்ளுவோம். யார் யார் எப்படி எப்படி நயக்கிறார்கள் என்று பார்ப்போம். ஒரு பெரிய குளம் இருந்தது. அந்தக் குளத்திலே தாமரை மலர்கள் மலர்ந்திருந்தன. காலை நேரத்தில் கதிரவன் உதயமானான். கதிரவன் உதயத்திலே அந்தக் குளத்தை நோக்கிப் பலர் வந்தனர். அதிலே ஒரு அம்மையார் நீர் முகந்து கொள்ள வந்தார். தாமரை மலரைப் பார்த்ததும் அந்த அம்மையாருக்குத் தன் குழந்தையின்

நினைவுதான் வந்தது. தொட்டிலிலே உறங்கிக் கொண்டிருந்த குழந்தை கண் விழித்து, முகம் மலர்ந்து இப்படித்தான் இருப்பான் என்று மகிழ்ச்சியோடு வீட்டிற்கு விரைந்தார்கள்.

இன்னொரு இளைஞன் அங்கே வந்தான். அவன் அந்தத் தாமரை மலர்வதைப் பார்த்தான். அவனுக்குத் தான் காதலிக்கும் காதலியின் முகம் போலல்லவா இந்தத் தாமரையும் மலர்ந்து இருக்கின்றது என்று காதலியின் நினைவோடு திரும்பிச் செல்லுகின்றான்.

அதே இடத்திலே ஒரு யோகி வந்தார். அவர் அந்த மலரைப் பார்க்கும் போது "தன் இதய வெளியிலே எழுந்தருளிய திருவடி போல் அல்லவா மலர்ந்திருக் கின்றது" என்று எண்ணுகின்றார்.

சிறிது நேரத்திற்கு எல்லாம் அந்தப் பக்கத்தில் ஒரு வணிகன் வந்தான். குளத்திலே இறங்கி அனைத்தையும் பறித்துக் கொண்டு போய்விட்டான், விலைக்கு விற்கலாம் என்று. அந்த மலரைப் பலர் பார்த்தார்கள். ஒவ்வொருவர் விருப்பமும், விரும்புகின்ற நோக்கமும் பலவாக இருக்கின்றது.

மணிவாசகரும் விரும்புகின்றார். மற்ற கோவை ஆசிரியர்களும் விரும்புகின்றார்கள். மற்ற கோவை ஆசிரியர்கள் ஒரு பெண்ணை வைத்து விரும்பு கின்றார்கள். மணிவாசகரும் ஒரு பெண்ணைப் பார்த்து விரும்புகின்றார். இவர் அந்த யோகியைப் போல, அந்தத் தாயைப் போல, அந்தக் காதலனைப் போலச் சிந்திக்கின்றார்.

**உலகம் என்பது ஏதோ பயனற்றது என்று எண்ணிவிடக் கூடாது. உலகத்தைச் சந்திக்கின்ற ஒவ்வொருவரும் உலகத்தை விரும்புதல் வேண்டும்.** நான் ஏன் இந்த உலகத்தில் இருக்கிறேன் என்று அலுத்துக் கொள்ளக் கூடாது. இன்னும் நான் இந்த உலகத்திலே அதிக

நாள் இருக்க வேண்டும்; இருக்கும் நாள் வரையிலும் நலமாக இருத்தல் வேண்டும் என்றும், பலருக்குப் பயன்பட வேண்டும் என்றும், அதற்காக அந்த நாட்களை நீட்டித்தல் வேண்டும் என்றும் வேண்டிக் கொள்ளுதல் வேண்டும். இந்த உலகம் நமக்குப் பயன்படாது என்று நினைத்திருந்தால் இறைவன் இந்த உலகத்தை நமக்குப் படைத்துக்கொடுத்திருக்கமாட்டான்.

**இந்த உலகத்தை நாம் விரும்புகின்ற வகையினாலே தான் பயன் கொள்ள முடியும்.** எந்த ஒரு பொருளை நாம் சந்தித்தாலும், சந்தித்த பொருள் சாதாரணமானதாக இருந்தாலும், விரும்புகின்ற நமது உள்ளம் பெரிதாக இருக்க வேண்டும். **இந்த உலகத்தைப் பார்த்து மோசமானது என்று சொல்லக் கூடாது. ஒருவரைப் பார்க்கும் போது மோசமானவர் என்று சொல்லுதல் கூடாது**

**"அழுவார் அழக்காட்டும் ஆடி உலகாம்"**

உலகம் எப்படி இருக்கின்றது? ஒரு கண்ணாடி போல் இருக்கின்றது. நீங்கள் அழுதால் அந்தக் கண்ணாடிக்குள் அழுவதுபோலத்தான் தெரியும். நீங்கள் சிரித்தால் அந்தக் கண்ணாடிக்குள் சிரிப்பதுபோலத்தான் தெரியும். உலகம் நீங்கள் சிரிக்கின்றபோது உங்களைப் பார்த்துச் சிரித்துக் கொண்டிருக்கின்றது. நீங்கள் அழுகின்றபோது உங்களைப் பார்த்து அழுது கொண்டு இருக்கின்றது. ஆகவே அழுவதும், சிரிப்பதும் உலகமல்ல. நீங்களே. ஆக எப்படி விரும்புதல் வேண்டும்? மகிழ்ச்சியாக வரவேற்க வேண்டும். மகிழ்ச்சியினாலே விரும்புதல் வேண்டும்.

மணிவாசகப் பெருமான் தன் முன்னே நின்ற ஒரு பொருளை நயக்கின்றார். அவர் ஒரு ஆண்மகனாக நின்று, இறைவனைப் பெண்ணாக முன்னிறுத்தி, வந்து நின்ற அந்தப் பெண்ணை நயக்கின்றார். ஏன் நயக்கின்றார்? **அது ஒரு நிறைந்த வடிவம். எல்லாநிலையினாலும் அந்தப் பெண் நிறைந்து நிற்கின்றாள். அவளிடம் ஒரு தெய்வீக நலம் தெரிகின்றது. இனி இவளுடைய தொடர்பினாலே நாம்**

**பெற வேண்டிய நலங்களை யெல்லாம் பெறலாம்வதர வேண்டிய நலங்களையெல்லாம் தரலாம் என்று நயக்கின்றார். அந்த நிறைவுதான் அருள். அருள் என்ற சொல்லுக்கு நிறைவு என்று பொருள். இந்தச் சொல்லின் அடிப்படை ஆர் + உள்.**

ஆர் + உள் என்ற இரண்டு சொற்களின் கூட்டினால், வருவது அருள் என்ற சொல். ஆர்தல் என்றால் நிறைதல் என்று பொருள். அந்த 'ஆர்' என்ற வினைச் சொல்லில் முதல் நிலை குறைந்து 'அர்' என்றாகும். அதனுடன் உள் என்ற சொல்லும் சேர்ந்தால் 'அருள்' என்று ஆகும்; "உள் நிறைவு" என்ற பொருளைத் தரும். **ஒரு பொருளைப் பார்த்தால் மனத்திற்குள் ஒரு நிறைவு வரவேண்டும். அப்படி நிறைந்தால்தான் நயக்க முடியும். மனத்திற்குள் நிறையாத எந்தப் பொருளையும் யாரும் விரும்பியதும் இல்லை. பயன் கொண்டதும் இல்லை.** அப்படிப் பயன் கொள்ள வேண்டுமென்றால் நாம் அதை விரும்பித்தான் ஆக வேண்டும். அது ஒரு பக்கத்தில் மட்டும் பயனல்ல. இரு பக்கத்திலும் பயனுண்டு.

பயனைத் தேக்கி வைத்துக் கொண்டிருக்கின்ற ஒருவர் அதைக் கொடுத்தால்தானே அவருக்கு மகிழ்ச்சி. பயனுக்காக ஏங்கி நிற்கின்ற ஒருவர் அதை எடுத்தால்தானே மகிழ்ச்சி. எடுப்பதும் கொடுப்பதும் இரண்டு பக்கங்களிலும் நிகழும். **அப்படி இரண்டு பக்கங்களிலும் ஒருசேர நிகழ்வதற்கு நயப்பு என்று பெயர்.** அதனால் நயப்பு என்ற சொல்லை எடுத்துக் கொண்டு அதிலே கலந்து கொள்ளுகின்றார்

சங்க நூற் புலவர்கள், தொல்காப்பியர் போன்ற இலக்கணப் புலவர்கள், இவற்றையெல்லாம் மிகவும் செப்பமாக, விளங்கும் வகையிலே அந்த நூல்களிலே சொல்லியிருக்கின்றார்கள். பழந்தமிழ் நூல்களிலே நமக்கு அக்கறை இல்லாததாலே அதன் ஆழம் நமக்குத் தெரியவில்லை. இந்த ஆழம் என்பது நூலிலே

மட்டுமில்லை. வாழுகின்ற மக்களிடத்திலே, அவர்களு டைய உள்ளத்திற்குள்ளே இருக்கின்றது. என்னுடைய உணர்ச்சியை உங்களால் புரிந்து கொள்ள முடியாது. உங்களுடைய உணர்ச்சிகளையும் நான் புரிந்துகொள்வது என்பது கடினம்.

உணர்ச்சிகளைப் புரிந்து கொள்ளுவது என்பது உணர்ச்சி உடையார்க்கன்றி வேறுயாராலும் முடியாது. "உணர்ச்சி உணர்வோர் வலித்து" என்பர். ஒருவருடைய உணர்ச்சியைப் புரிந்து கொள்ள வேண்டுமென்றால் அந்த உணர்ச்சி உணர்வோருக்கும் இருக்க வேண்டும். இதுவே தொல்காப்பியர் சொல்லுகின்ற வாசகம். அந்த உணர்வோடு சொல்லுகின்றார். இறைவன் எந்த உணர்வோடு தன் முன்னே வந்து நிற்கின்றானோ அந்த உணர்விலே இவர் நயக்கின்றார். அவன் கருணையின் வடிவம். இவர் கரைகின்ற வடிவம்; கருணையில் கரைகின்ற வடிவம். அப்படிக் கரைகின்றபோது நயப்பு என்பது இயல்பாக அமையும்.

நான் கூட உங்கள் கருணையில் கரைகின்றேன் என்று சொன்னால் வாய் மெச்சாகத்தான் இருக்குமே தவிர உண்மையாக இருக்காது. என்னை விரும்புகிறேன் என்று சொன்னால் என்னோடு கரைதல் வேண்டும். நான் கரைந்தால் நீங்களும் கரைதல் வேண்டும். குழந்தை அழுதால் தாய் அழாமல் இருக்க முடியாது. அன்புடைய -வர்கள் மனம் வெதும்பினால் அன்புடையவர்கள் வெதும்பாமல் இருக்க முடியாது. அதுபோல் கருணையின் வடிவமாக வந்து நிற்கின்ற வடிவத்தைப் பார்த்துத் தானும் கரைந்து நிற்பதுதான் இயல்பு. இந்த இரண்டும் ஒரு சேர நின்றால் அதற்கு நயப்பு என்று பெயர்.

மணிவாசகப் பெருமானிடம் தோய்ந்த ஒரு பெரியவர் ஒவ்வொரு தலைப்புக்கும் 'பேரின்ப உரை' என்று ஒரு உரை செய்து இருக்கின்றார்கள். அவர் யார்? எந்த ஊர்? என்ன பெயர் என்று தெரியவில்லை. அதை

உரையாசிரியர்கள் யாரும் குறிப்பிடவில்லை. அதில், "நாம் சந்திக்கின்ற திருமேனியால் பயன்பெறலாம்" என்று உள்ளது. **உலகத்திலே பயன் தராதது எதுவுமே இருக்க முடியாது. எல்லாமே பயன் தரக்கூடியவைதான்.**

ஒரு விவசாயி நெல்லை அறுவடை செய்து, களத்திலே கொண்டு வந்து போட்டான். அதை அடித்துக் குவித்துத் தூற்றியும் எடுத்தான். ஒரு பக்கம் பதர் இருந்தது. ஒரு பக்கம் நெல் இருந்தது. இன்னொரு பக்கம் கூளம்; வேறொரு பக்கம் வைக்கோல் கிடந்தது. இதில் அந்த விவசாயி எதை விரும்புவார்? எல்லாவற்றையும் விரும்பியாக வேண்டும். கருக்காய் என்பதும் ஒரு பக்கம் கிடக்கிறது. நெல்லை மூட்டை கட்டி விடுவார். கூளங்களையெல்லாம் வாரி குப்பையிலே போட்டு விடுவார். வைக்கோலைப் போராகப் போட்டு வைப்பார். இத்தனையும் பயன்கொள்ளக் கிடக்கின்ற பொருள்களே. வைக்கோல் விவசாயத்திற்கு உதவியாக இருந்த எருதுக்கு உணவாகின்றது. கூளங்கள் நெல் தந்த நிலத்திற்கு அடுத்த ஆண்டு எருவாகின்றது. இந்தக் கருக்காயும் அப்படியே. இப்படிப் பல்வகையிலே ஒரு பொருள் பயன்படுகின்றது.

அதே போலத்தான் சந்திக்கின்ற ஒரு வடிவம் முழு வடிவமாக இருப்பதால் அதில் எந்தப் பகுதியும் பயனற்றதல்ல. முழுதும் பயனுடையது. அதனால் நாம் பெற வேண்டிய பயன் அனைத்தையும் பெறலாம். பெற வேண்டிய திடம் அனைத்தும் பெறலாம். பெற வேண்டிய அனைத்தும் பெறலாம் என்பதே இந்தத் தலைப்பின் பொருள். அனைத்தும் கொடுக்கின்றவராக இருக்க வேண்டும் நம் முன்னே வந்து நிற்பவர். மனித சமுதாயத்தில் ஒரு மனிதன் வந்து நின்றால் கூட அவர் தெய்வீக ஆற்றல் உடையவர் என்று உணர்தல் வேண்டும். இல்லையென்றால் இயற்கை ஆற்றல் உடையவர் என்று உணர்தல் வேண்டும்.

மண் ஆற்றல் குறைவதில்லை. நீர் தன் தன்மையினின்று குறைவதில்லை. நெருப்பு தன் வலிமையை இழந்ததில்லை. காற்றும் தன் ஆற்றலைக் குறைத்துக் கொண்டதில்லை. பஞ்ச பூதங்களும், தோன்றிய காலத்திலிருந்து இந்தக் காலம் வரையிலும் நன்மை கொடுத்துக் கொண்டேயிருக்கின்றது நயப்போர்க்கு. குறைந்துவிடவில்லை. அப்படிப்பட்ட நலங்கள் கொடுக்கின்ற வடிவங்கள் முன் வந்தால், அது தெய்வ நலம் சிறந்த ஒன்று என்று தெரிந்து கொள்ள வேண்டும். ஆகையினால்தான் எல்லாமே தெய்வ நலம் பொருந்திய வடிவங்களாக சமுதாயத்தையும், சமுதாய மக்களையும் பார்த்தார்கள் பெரியோர்கள்.

மணிவாசகப் பெருமானுடைய முன்னிலையிலே வந்து நிற்கின்ற பெண் நயப்புக்கு உரியவள். அவளுடைய திருமேனி பயன் கொடுக்கக் கூடிய ஒன்று. பயன் கொடுக்கக் கூடிய ஒன்றைப் பயன் கொள்ளாமல் விட்டுவிடுவது பயனில்லை. அதுவாக விரும்பி வந்திருக்கின்றது. அதைப் பயன் கொள்ளுதல் வேண்டும்; அதுவும் விரும்பிப் பயன் கொள்ளுதல் வேண்டும். இதைக் கருதித்தான் திருவள்ளுவர்

"வீழுநர் வீழப் படுவார்க்கு அமையுமே
வாழுநம் என்னுஞ் செருக்கு". (1193)

எனச் சொன்னாரோ என்று எனக்குத் தோன்றுகின்றது. அது விரும்பி நம்மிடம் வருகின்றபோது, நாமும் அதை விரும்பிப் பயன் கொள்ளுதல் வேண்டும். பயன் கொள்ளத் தெரிந்து கொள்ள வேண்டும். இணையிலாத ஒரு பொருள் நம்மிடத்தில் இணங்கி வந்து நிற்கின்றபோது நாமும் அதை விரும்பிப் பயன் கொள்ளவேண்டும். அப்போது பயன் பெறலாம் என்ற நயந்த தன்மையை இந்தத் தலைப்பிலே சொல்லுகின்றார்.

வந்த பொருள் எத்தகையது? எங்கும் நிறைந்த பொருள். உலகியலாகச் சொன்னால் அவள் என்

எண்ணமெல்லாம் நிறைந்த பொருள். என் சிந்தையெல்லாம் நிறைந்த பொருள்' என்று அவர் சொல்லுகின்றார். எங்கும் நிறைந்தது பரம் பொருள். இவள் எப்படியிருக்கின்றாள்? முதல் நாள் பார்த்தேன். பார்த்த பிறகு நான் சென்றுவிட்டேன். செல்லுகின்ற போதெல்லாம் அவள் நினைவு; உண்ணுகின்ற போதெல்லாம் அவள் நினைவு. உறங்குகின்ற போதெல்லாம் அவள் கனவு. நான் ஏதேனும் தொட்டால் அப்படித் தொட்ட இடத்தில் அவளது தனித் திருமேனி. காண்பவையெல்லாம் அவளாகவே நிற்கின்றாள். இது உலகியலிலே ஈர்ப்புண்ட ஒருவனுக்கு ஏற்படுகின்ற நிலை.

உலகியலிலேயே அப்படி ஏற்படுமென்றால், இதனினும் எத்தனையோ கோடி பேரெழில் வாய்ந்த பொருள், பரம்பொருள்! ஆசாரியனாக முன் வந்து நிற்கின்றபோது, அது தன்னை ஆட்கொண்டவுடனே இதயாதீதத்திலே மட்டும் அமைவ -தில்லை; எழுகின்ற அனைத்து ஆதாரங்களிலும் நின்று திருநடம் செய்து கொண்டிருக்கின்றது. வள்ளல் பெருமான் பாடிய அனுபவ மாலையில் இவற்றை விளக்கமாகப் பார்க்கலாம். எல்லா இடங்களிலும் நீக்கமற நிறைந்து இருக்கின்ற பொருளாக இருப்பதனால் நயக்க வேண்டிய கட்டாயம் ஏற்படுகின்றது. இனி இந்தப் பொருளின்றி, இந்த வாழ்க்கையில் பெறத் தக்க பேறு வேறு ஒன்றுமில்லை. இதுதான் பெறுகின்ற பேறு. பெறுகின்ற பேறு -களுக்கெல்லாம் நிலைக்களமானது. இதைக் கருதித்தான்

"பெண்ணிற் பெருந்தக்க யாவுள"

என்பார் திருவள்ளுவதேவ நாயனார். இதைச் சொன்னவுடனே அடுத்த வரியான

"கற்பெனும் திண்மை உண்டாகப் பெறின்" (54)

என்பது நினைவுக்கு வந்துவிடும். இவனை ஆட்கொண்டு பெற வேண்டிய பயன் அனைத்தையும் அவன் பெறுமாறு செய்து, இனிப் பிறவா நிலைக்கு அவனை ஏற்றுவேன்

என்று உறுதி பூண்ட வடிவம் முன்னே நிற்கின்றது. அதனாலே திருமேனியால் பயன் கொள்ளலாம் என்று இந்தப் பேரின்ப உரை அமைந்தது. ஆம். எது நமக்கு நலம் தருகின்றதோ அதை நயத்தலே நல்லது. திருமந்திரத்தில் ஒரு பாட்டு:

"ஆத்த மனையாள் அகத்தில் இருக்கவே
காத்த மனையாளைக் காமுறுங் காளையர்
காய்ச்ச பலாவின் கனியுண்ண மாட்டாமல்
ஈச்சம் பழத்துக் கிடருற்ற வாறே. (201)

உரியதை விரும்புதல் நல்லது. உரிமைக்கு உடையதாக ஆக்கிக் கொண்டு விரும்புதல் நல்லது. என்ன அழகு தெரியுமா அந்தப் பாட்டில் உள்ள நயம்! "காய்ச்ச பலாவின் கனி உண்ண மாட்டாமல்" - பலா நமக்கு எளிமையாகக் கிடைக்கக் கூடிய ஒன்று. சிரமங்கள் அதிகமில்லை. அப்படியே சிரமம் இருந்தாலும் அதன் கனி உண்ணும்போது மிகவும் இன்பமாக இருக்கும். அதை விட்டு விட்டு ஈச்சம் பழத்தை விரும்புகின்றார்களே!. அது சின்னச் சின்னச் செடியாக் இருக்கும். அதைச் சுற்றி முள்ளுமிருக்கும். மிகவும் சிரம்ப்பட்டுத்தான் அதைப் பறிக்க முடியும். பறித்தாலும் கையில் முள் குத்திவிடும். இவ்வளவு இடர்ப்பட்டுப் பறித்தாலும் அந்தப் பழம் மிகவும் துவர்ப்பாக இருக்கும். அதை விரும்பி உண்பவனுடைய மடமையை என்னென்பது!

இதோடு மட்டுமல்ல. அந்த இடத்தில் சுருட்டைப் பாம்பு இருக்கும். அது கடித்தால் உடம்பெல்லாம் தடித்து பெருந்துன்பத்தைத் தரும். இந்த உவமையை மிகவும் அழகாகக் கையாண்டு இருக்கிறார் திருமூல நாயனார். உரிய இடத்திலல்லாமல் வேறொரு இடத்தை விரும்பினால் பலாவை விட்டு ஈச்சம் பழத்தை விரும்பியதையொக்கும் என்கிறார். உரிமையுடையது பரம்பொருள். உரிமையல் லாதது உலகியல்.

**உலகியலிலே கையை வைத்து அன்றாடம் அல்லல் பட்டுக் கொண்டிருக்கின்ற மனிதன், உலகியல் துன்பங்களால் படாதபாடு பட்டுக் கொண்டிருக்கின்றான்.** ஆகவே அந்தத் தலைமகன் என்ன நினைக்கின்றான்? என் எதிரிலே வந்து நிற்கும் இந்தத் தலைமகளை நயந்து, முழுமையாகப் பயன்பெற்று, என் வாழ்க்கையை ஈடேற்றிக் கொள்வேன் என்று நினைக்கின்றான். ஒரு மாணவன் ஏன்ன நினைக்கின்றான்? "பொன்னே கொடுத்தும் கொளர்க் –கரியார்" இந்த ஆசாரியர். சுலபமாகக் கிடைத்திருக் கின்றார். அவரைப் பயன்படுத்தி என் அறிவையும் ஆற்றலையும் பெருக்கிக் கொள்வேன் என்று எண்ணு கின்றான். இந்த குருநாதனைக் கொண்டே இப் பிறவியைத் தீர்த்துக் கொள்ளுவோம் என்று எண்ணு கின்றான். இதனாலே தான் பயன் பெற வேண்டும்; அதை நயத்தல் வேண்டும் என்று எண்ணுகின்றான்.

நமக்கு முன்னே வந்து நிற்பது, அது பெண்ணாக இருந்தாலும் சரி, ஆசாரியனாக இருந்தாலும் சரி, நம்மைப்போல் மனித வடிவம்தானே! எப்படிப் பழகுவது?

**"பழக்கம் தவிரப் பழகுதலன்றி உழப்புவதென்"**

இதுவரை சாதாரணமான மனிதனாகப் பார்க் –கின்றீர்கள். சாதாரணப் பெண்ணாகப் பார்க்கின்றீர்கள். சாதாரணப் பொருளாகப் பார்க்கின்றீர்கள். அந்தப் பழக்கத்தைத் தவிர்த்து, அதனுள் அவன் இருப்பதைக் காணப் பழகுங்கள். அதனால்தான் முன்னேயே சொன்னேன். பார்க்கின்ற கண்தான் மிகவும் முக்கியமானது. மலரை உதாரணமாக எடுத்துக் கொண்டதே இதற்காகத்தான். பார்க்கின்ற பார்வைக்கு ஏற்ப, உணர்வுக்கு ஏற்ப உண்மை புலப்படுகின்றது. சரியான பார்வையில்லையென்றால், உண்மை கூட சரியாகப் புலப்படாமல் போய்விடுகின்றது. இத்தனையும் தன் மனதிற்குள்ளே நினைக்கின்ற மணிவாசகப் பெருமான் மனத்திலே தன் குருநாதனை நயந்தும்,

பயன்பெறலாம் என்று விழைந்தும் வீழ்கின்றார். (வீழ்தல் - அன்பு செய்தல்)

அப்படிப் பார்க்கின்ற உருவத்தில் என்னென்ன இருக்கின்றன என்று சுருக்கமாக நினைக்கின்றார். அதை முதலில் உலகியலாகப் பார்க்கலாம். தலைமகன் தலைமகளைப் பார்த்தான் என்பதுதான் இந்தப் பாடலின் கருத்து. பார்க்கின்ற பொருளிலே தவறில்லை; பயன்கொள்ள வேண்டிய முறையிலேதான் பயன் கொள்ள வேண்டும் என்று முன்னமே பார்த்தோம். அதற்கு இன்னொரு உதாரணத்தைச் சொல்லுகின்றேன். உதாரணத்தின் மூலம் தான் பொருளை சரியாகப் புரிந்து கொள்ள முடியும்.

வாழை மரம் இருக்கின்றது. வாழை மரத்தில் எல்லாப் பொருள்களும் பயன்படக்கூடியவை. அதன் அடித்தண்டு வயிற்றை மிகவும் தூய்மை செய்யக் கூடியது. இடைப்பட்ட தண்டு இருக்கின்றதே அது கல்லைக் கரைக்கும் தன்மை உடையது. வாழைக்காய் கையைக் காலைப் பிடிக்கும் தன்மை உடையது. வாயு சம்பந்தமானது. கச்சில் இருக்கின்றதே அது உடம்புக்கு மிகவும் நலமானது. பூ இருக்கின்றதே அது இன்னும் நலம் செய்யக் கூடியது. மரம் ஒன்று. அதில் உள்ள பாகங்கள் பல. பயன்படும் வகையில் வேறு வேறு பயனைக் தரக்கூடியது. இதில் எந்த நேரத்திலே எதைத் தேர்ந்தெடுத்து உண்ண வேண்டும் என்பது அறிவு. எதையேனும் கொடுங்கள் பரவாயில்லை என்று சாப்பிட்டுவிடக் கூடாது. அதே போலத்தான் தன் எதிரிலே காணுகின்ற தோற்றத்தைப் பயன் கொள்ளும் வகையில் பயன் கொண்டால், எல்லாம் பயன்படும். உயர்வாகப் பயன் கொள்ளலாம்.

ஒரு பெண் இருக்கின்றாள். அந்த வடிவத்தில் என்னென்ன இருக்கின்றன என்று சொல்லுகிறேன். ஒன்று போக நிலையம். இன்னொன்று யோக நிலையம். பிறிதொன்று ஞான நிலையம். மற்றொன்று ஆனந்த

நிலையம் - என அந்த வடிவத்தில் நான்கு நிலைகள் இருக்கின்றன. இப்படிச் சொல்லுவதால் எந்தப் பெண்ணைச் சொல்லுகிறேன் என்று உங்களுக்கு ஐயம் வரக்கூடும். தெய்வீகப் பெண்ணானாலும் சரி, சாதாரணப் பெண்ணானாலும் சரி. எல்லாரிடத்திலும் இந்த நிலைகள் உள்ளன. ஏன் என்றால் தெய்வத்தின் ஆற்றல் எல்லோருக்கும் பயன்படக்கூடிய வடிவம் மனித வடிவம்தான். முழுமையாகப் பயன்படக்கூடியது பெண் வடிவத்தில்தான்.

இந்த உடம்பிலே போக நிலையம், யோக நிலையும், ஞான நிலையம், ஆனந்த ஆனந்த நிலையம் என நான்கு நிலையங்கள் அமைந்திருக்கின்றன. இது வெறும் அகராதிகளைப் பார்த்தோ, நூல்களைப் பார்த்தோ தெரிந்து கொள்ளுகின்ற செய்திகள் அல்ல. அப்படி இருந்திருந்தால் அனைவரும் இந்த நேரத்தில் தெரிந்து கொண்டிருக்கலாம்.

இனி ஞான நூல்களைப் படித்தாலும் கூட, படித்தது படித்தவாக்கில் இருந்தால் அதற்குப் 'பாசம்' என்று பெயர். படித்ததைப் படித்தவாறு அப்படியே சொல்லுவோமானால் சரியாக சீரணித்துக் கொள்ளவில்லையென்று அர்த்தம். அது அவ்வளவு பயன்படாது. உண்ட உணவு சீரணிக்கப்பட்டால் உடலுக்குப் பயன்படும்; சீரணிக்காவிட்டால் உடலுக்குத் தீங்கு விளைவிக்கும். சீரணித்த பிறகு உணர்வாகப் பயன்பட வேண்டும்.

மாணவர்களுக்கு ஒரு இலக்கணம் சொல்லுவார்கள்.

**"அன்னம் ஆவே மண்ணொடு கிளியே**
**இல்லிக் குடம்ஆ டெருமை நெய்யரி**
**அன்னர் தலைஇடை கடைமா ணாக்கர்"**

கடை மாணவர்களுக்குச் சொன்ன இலக்கணத்தை விட்டுவிடுவோம். 'அன்னம் ஆவே' என்று சொன்னால், யாப்பிலக்கணம் தவறாது. அன்னம் மாடு என்று சொல்லியிருக்காலாம். 'ஆ' என்று சொல்லியிருக்கிறார். ஆ

என்றால் பசு. இந்த முதல் மாணவனுக்கு அன்னத்தையும், பசுவையும் உதாரணமாகச் சொல்லியிருக்கிறார். அன்னமானது பாலையும் நீரையும் கலந்து வைத்தாலும், நீரைப் பிரித்து பாலை மட்டும் பருகும் ஆற்றல் உடையது என்று பெரியவர்கள் சொல்லி வைத்திருக்கிறார்கள். நீங்களும் அன்னத்தைப் பார்க்கவில்லை. நானும் அன்னத்தை இதுவரைப் பார்க்கவில்லை. ஆனால் பாலைப் பிரிக்கின்ற அன்னத்தைப் பார்த்திருக்கிறேன். அது எது? நான் பார்த்த அன்னத்தை நீங்களும் பார்த்திருக்கிறீர்கள். வீட்டிற்குச் சென்று சோற்றிலே பாலை ஊற்றிப் பிசைந்து ஒரு பத்து மணித்துளிகள் கழித்து எடுத்துப் பார்த்தால், அச்சோறு நீரை மட்டும் பிரித்து விட்டுப் பாலைப் பருகியிருக்கும். இதை நீங்களும் நானும் நாளும் பார்த்திருக்கிறோம். பெரியவர்கள் சொன்ன அன்னப் பறவையை நானும் நீங்களும் பார்த்ததாகச் செய்தி இல்லை.

அடுத்து ஆவே என்று சொல்லியிருக்கிறார். அதற்கு என்ன காரணம்? மாடு என்று சொல்லாமல் ஆ என்று சொன்னதன் காரணம், பசுவானது உண்ட ஆகாரத்தை, அமைதியான ஓரிடத்தில் இருந்துகொண்டு அசைபோட்டு, அசை போட்டு, செரித்துக் கொள்ளும். அப்படியே மாணவனும் ஆசாரியன் சொன்னதை அசை போட்டு அசை போட்டு செரித்துக் கொள்வதாலே ஆ என்று சொன்னதாக உரை ஆசிரியர்கள் சொல்லுவார்கள். ஏன் மாடு என்று சொன்னால் என்ன? அதுவும் அசை போட்டுத்தானே செரித்துக் கொள்ளுகின்றது

அசை போடுவதற்கு மட்டும் என்றால், மாட்டையே சொல்லி --யிருக்கலாம். அதற்காக மட்டும் சொல்லவில்லை. ஆவானது என்ன போட்டாலும் உண்டு விட்டு, நல்ல பாலைப் பொழிந்து தருகின்றது. பசுதான் பாலைத் தருமே தவிர எருது தராது. அதனால் அன்னம் ஆவே என்றால்..எதை வைத்தாலும் உண்டுவிட்டு குழந்தை

முதல் முதியோர் வரை உண்டு மகிழ, நலம்பெற நமக்கு நல்ல பாலைத் தருகிறது.

கடையிலிருந்து அரிசி, பருப்பு, காய்கறிகளை வாங்கி வந்து மனைவியிடம் கொடுத்து, "சமைத்து வை; நான் குளித்துவிட்டு வருகிறேன்" என்று சொல்லிக் குளித்துவிட்டு வந்து சாப்பிட உட்கார்ந்தால், அந்தக் காய்கறிகளையும், அரிசி, பருப்பையும் அப்படியே கொண்டு வந்து எதிரில் வைத்தால் எப்படியோ அப்படித்தான் படித்த நூல்களும், கேட்ட அறிவுரைகளும் நமக்குப் பயன்படாது. பசுவானது உண்டு செரித்து, பாலாகத் தருவதுபோல, கற்று, தெளிந்து, அனுபவத்தில் நின்று, அனுபவத்தின் உச்ச நிலைக்குப் போகின்றபோது தானாக இவை விளங்கக் கூடியவை.

அதனாலே முன்னே குறிப்பிட்ட நிலைகள் எல்லாம் உண்டா என்று ஐயப்படுவது தன்னுடைய அனுபவம் இன்மையைக் குறிக்கும். உண்டு என்பது அனுபவ நிலை. ஒரு பெண்ணின் வடிவிலே இந்த நான்கு நிலைகளும் இருக்கின்றன என்பதை நம் பெரியவர்கள், மிகப்பெரியவர்கள் உணர்ந்து சொல்லியிருக்கிறார்கள். மிகப் பெரியவர்கள் என்றால் யார்? "உலகத்தவர் போலிருப்பர் உண்மை ஞானம் கண்டவர்". நம்மைப் போலத்தான் இருப்பார்கள். ஆகையால், வேறு வகையாக இருக்கமாட்டார்கள். அப்படிப்பட்ட பெரியவர்கள் நயந்த இந்த நான்கு நிலைகளும் சேர்ந்த அந்த வடிவத்தை நாம் நயத்தல் வேண்டும். அப்படி நயந்தவர் மணிவாசகர் பெருமான். நயந்த காட்சியைப் பாடலாகச் சொல்லுகிறார்.

## நயப்பு

அகல்கின்ற வல்குற் றடமது கொங்கை யவையவ நீ
புகல்கின்ற தென்னைநெஞ் சுண்டே யிடையடை யார்புரங்கள்
இகல்குன்ற வில்விற்செற் றோன்றில்லை யீசனெம் மானெதிர்ந்த
புகல்குன்றப் பல்லுகுத் தோன்பழ னம்மன்ன புல்வனைக்கே.

ஆசாரியன் எவ்வளவோ அறிவுரையும், நலங்களும் வழங்குகின்றான். அவன் உன்னிடத்தில் எதையும் எதிர்பார்க்கவில்லை. நீ எப்போது நலம் பெறுவாய்! எப்போது நீ வாழ்வாய்! என்றுதான் எதிர்பார்க்கின்றான். நீ வாழவேண்டும் என்று எதிர்பார்க்கின்றானே தவிர, இந்த சீவன் எதையும் கொடுக்குமா என்று அவன் எதிர்பார்க்கவில்லை. அவனுக்குக் கொடுக்க நம்மிடம் எதுவுமே இல்லை. நம்மிடமிருந்து அறியாமையை, தன்னிடத்தில் அது இல்லாததால் கேட்கிறான் என்று நினைக்கின்றோம். அப்படியல்ல, இந்த அறியாமை அந்த மாணவனிடத்தில் இருந்தால், அவனுக்கு அது தீங்கு விளைவிக்கக் கூடும் என்பதால், அதைப் பறித்துக் கொள்ளுகிறானே தவிர வேறல்ல.

அல்குல் என்பது பெண்களிடத்தில் உள்ள ஒரு அமைப்பு. அல்குல் என்று சொன்னால் அகன்று சுருங்குவது என்று பொருள். இதைக் கம்பரசம் போன்ற நூல்களிலே விகாரமாக எழுதியிருப்பார்கள். அல்குல் என்பது கருவறை. கருவறையைத்தான் அல்குல் என்று சொல்வது வழக்கம். கரு காணாத காலங்களிலே சுருங்கிக் கிடந்து, கருத்தோன்றுகின்றபோது கருவின் வளர்ச்சிக்கு ஏற்பத் தானாக அகன்று கொள்ளுவது. கரு அகன்ற பிறகு தானாகச் சுருங்கிக் கொள்ளுவது, அகலுவது, சுருங்குவது, அதனாலே மகிழ்ச்சிக்குரியதாக, விளைவுக்குரியதாக இருப்பது. விளைகின்ற நிலம் புழுதியாக இருக்கும். சேறாக இருக்கும். விளையாத நிலம் இறுகிவிடும். இறுகுவதும், இளகுவதும் நிலத்தின் இயல்பு. அப்படி இருக்கின்ற ஒரு இடத்திற்கு அல்குல் என்று பெயர்.

மேலோட்டமாகப் பார்த்து எதையாவது சொல்லி விடக்கூடாது. அது போக நிலையம் எனப்படும். அனுபவிக்கின்ற இடம். சாதாரண பேச்சு வழக்கில் போக போக்கியம் என்பார்கள். போக்கியம் என்பது ஒருவருக்கு அடமானம் வைப்பது என்று அர்த்தம். அதில் வருகின்ற விளைவை அனுபவிப்பது என்று அர்த்தம். போகம் உள்

மகிழ்ச்சி. துய்த்தல். அப்போது ஏதோ ஒரு மகிழ்ச்சி வருகின்றது. அந்த மகிழ்ச்சியைத் தருகின்ற இடமாக அது அமைந்திருக் கின்றது. முதன் முதலாக ஆன்மாவுக்கு மகிழ்ச்சியைத் தருகின்ற இடமாக அது அமைந்திருக் கின்றது.

அடுத்து கொங்கை – கொங்கை என்பதற்கு முன்னமேயே பொருள் சொல்லியிருக்கின்றேன். இருந்தாலும் சொல்லுகிறேன். கொங்கு என்றால் தேன் மணம் என்று பொருள். மணமானது மகிழ்ச்சி தருவது. தேன் உடல் நலத்தை உண்டாக்குவது. உடல் நலத்தையும், உயிர் நலத்தையும் ஒருங்கே தரவல்லது தேன். உலகியலிலே உயிருக்கு மகிழ்ச்சியைத் தரவல்லது இந்தத் தோற்றம். அருளியலிலே அழியாத தன்மையைச் சேர்க்கும். அழியாத் தன்மையும், துன்புறா நிலையும் சீ வனுக்குத் தருகின்ற ஒரு ஆற்றல் தேங்கிய இடம் எதுவோ அதற்குக் 'கொங்கை' என்று பெயர். இந்த இரண்டு விளக்கங்களையும் இதில் பார்க்கிறேன். ஆகவே இது ஞான நிலையம்.

போக நிலையத்திற்கும், ஞான நிலையத்திற்கும் இடையிலே ஒன்று இருக்கின்றது. இகத்திற்கும் பரத்திற்கும் இடையிலே ஒரு நிலை இருக்கின்றது. ஒன்று உலகியலை நன்றாகத் துய்த்துக் கொண்டேயிருப்பது. மற்றொன்று ஞானத்தைப் பெற்றுத் துய்த்துக் கொண்டிருப்பது. இந்த இரண்டிற்கும் இடையில் இருப்பது இடை என்றே சொல்லப்படும். அந்த இடைக்கு 'யோக நிலையம்' என்று பெயர். **யோகம் பெருகினால் ஞானம் சுருங்கும். ஞானம் பெருகினால் யோகம் சுருங்கும். இரண்டும் ஒருவருக்கு ஒரே நேரத்தில் நிலைபெறுவதில்லை.**

ஆக யோகத்தின் அடையாளம் இடை பருத்துக் காணப்படுதல். ஞானத்தின் அடையாளம் யோகத்தில் உச்சியில் ஞானம் விளைந்து, ஞானம் பெருகப் பெருக யோகம் சுருங்கிவிடும். அப்படிப்பட்ட யோகத்தை இங்கே பார்க்கிறேன். அதை 'உண்டே இடை' என்று

குறிப்பிடுவார். போகத்தைத் துய்க்கலாம். யோகத்தைப் பயிலலாம். யோக அனுபவங்களைப் பெறலாம். ஞானத்தை அடையலாம். ஞான அனுபவங்களை அடையலாம். அதற்கு மேல் ஒன்று இருக்கின்றது. அதற்கு ஆனந்தம் என்று பெயர். அதைக் காண்பதற்கு இரண்டு விழிகளும் காணப்படுகின்றன. அதை முன் பாட்டிலே சொன்னதால் இந்தப் பாட்டிலே சொல்லவில்லை இவர்.

என்ன இல்லை இவளிடத்திலே? என்ன இல்லை இந்த ஆசானிடத்திலே? என்ன இல்லை இந்த குருநாதனிடத்திலே? என்ன இல்லை இந்த உலகத்திலே? நீ பெற நினைத்தால், அனைத்தும் இருக்கின்றது இந்த உலகத்திலே.

ஒரு திருக்குறளைச் சொன்னால் உங்களுக்கு நினைவு வரும்.

> **இலம் என்று அசைஇ இருப்பாரைக் காணின் நிலன்**
> **என்னும் நல்லாள் நகும். (1040)**

மகிழ்ச்சிக்குரிய வளமும், பிறவும் தர எனக்கு இந்த உலகத்திலே என்ன இருக்கிறது என்று ஒருவன் சோம்பித் தனமாக இருந்தால், அவனைப் பார்த்து இந்த நிலம் சிரிக்கின்றதாம். "மேலாகக் கிளறி உன்னுடைய உழைப்பைத் தந்தால் நான் உனக்குப் பயனைத் தருகின்றேன். மண்ணைக் கொத்திச் சிறிது கீரையை விதைத்தால், உனக்குக் கீரையைக் கொடுப்பேன். இன்னும் கொஞ்சம் கிளறி விதையை ஊன்றிவிடு. உனக்குக் கிழங்கைத் தருவேன்; கனிகளைத் தருவேன். சற்று ஆழமாகத் தோண்டினால் உனக்குப் பலவித கனிப் பொருள்களைத் தருவேன். இன்னும் சிறிது ஆழமாகத் தோண்ட எரிபொருளைத் தருவேன். ஆழமாக அகழ்ந்து எடுக்க எடுக்க, அளவிலாச் செல்வங்களைத் தருகின்ற நிலமகளாக நானிருக்கின்றபோது, நீ எதுவும் இல்லையென்று சும்மா இருக்கின்றாயே! நீ ஒரு ஆண் மகனா?" என்று இந்த நிலமகள் கேலியாகச்

சிரிக்கின்றாள், என்று வள்ளுவப் பெருந்தகை உண்மையை உணர்த்துகின்றார்.

அப்படிக் காணுகின்ற பொருளிடத்தில் அனைத்தும் இருக்க, அதைப் பயன்படுத்திக் கொள்ளாமல் நீ அசைவின்றி இருக்கலாமா? இந்தத் திருக்குறளை மனதில் வைத்துக் கொள்ளுங்கள். பலகாலும் சிந்தித்துப் பாருங்கள்.

அப்படி ஒரு குருநாதன் அவனை அணுகும் முறையில், ஒரு மாணவன் அணுக அணுக, அனைத்து நலங்களையும் தர வல்லவன். எடுத்துக் கொள்ளலாம் நாம். அதற்கு நம்முடைய உழைப்புத்தான் தேவை. அப்படியே உண்மைப் பொருளாக இருக்கின்ற, அந்தப் பெண் மகளிடத்திலும் அனைத்து நலங்களையும் ஒருவர் பெற்றுவிடலாம். ஒன்றுமில்லை என்று ஒருவர் விட்டுவிடக்கூடாது.

"இல்லாள் அகத்திருக்க இல்லாததொன்றில்லை"

அகம் என்பதற்கு வீடு என்றும் பொருள். மனம் என்றும் பொருள். இல்லாள் அகத்து அன்பு இருக்க இல்லாததொன்றுமில்லை. அன்புடைய ஒரு வடிவு இருக்கிறது. உன் எதிரிலே. அதனிடத்திலே எல்லாம் இருக்கின்றது. "நீ அவம் சொல்லுகின்றாய். ஏன் பொய் சொல்லுகின்றாய்?" பெறற்கரிய பேறு தரத்தக்க ஒரு பொருள் என் எதிரிலே வந்து நின்றும் கூட அதனிடத்தில் பெறத்தக்க சுகம் என்ன இருக்கின்றது என்று சொல்லுகின்றாயே! உன்னால் நான் என்ன சுகம் பெற்றேன் என்று ஒரு பெண்ணும் ஒரு ஆணைப் பார்த்துக் கேட்பதுண்டு. ஒரு ஆணும் ஒரு பெண்ணைப் பார்த்துக் கேட்பதுண்டு.

சுகம் என்பது பெறுகின்ற உள்ளத்திற்குள் இருக்கின்றது. பெறுகின்ற உணர்விலே இருக்கின்றது. அதனாலே நீ சொல்லுவது பொய்யாக இருக்கின்றது.

நெஞ்சத்திடம் சொல்லுகிறார் - உண்மே இடை இதை விடைப்பெரிய போக அனுபவங்கள் என்ன பெறப்போகின்றாய்!

அடையார் - தன்னை வந்து அடையார். ஏன் வந்து அடையவில்லை. அடையாததற்கு ஆணவந்தான் காரணம். ஒரு பெரிய பேராசிரியர் அவர் செல்வம் இல்லாமல் மிகவும் ஏழையாக இருந்தார். ஆனால் பெரிய ஞானி. இருந்தாலும் அவருக்கு இருக்க இடம் இல்லாமல் பைத்தியக்காரன் போல இருந்தார். ஒரு பெரிய செல்வந்தர் அவரைப் பார்த்தார். அரிய ஞானங்களைப் போதனை யாகப் பெற்றுக் கொள்ளுங்கள் என்று பலர் சொன்னார்கள். "நான் பெரிய செல்வந்தன். அவரைப் பார்த்தால் அசிங்கமாக இருக்கின்றது. அவரிடத்தில் போய் பாடங்கேட்கச் சொல்லுகின்றீர்களே!" என்று கேட்டார். அதனாலே அவரை இவர் அடையார். ஞானம் அடையார். இந்த ஞானத்தை அடைவதற்கு எப்படி இருக்கவேண்டும். ஒரு பரம ஏழையைப் போல, செல்வத்தை மறந்து, தன் தகுதிகளை மறந்து, எல்லாவற்றையும் மறந்துவிட்டு, பிச்சைக்காரனைப்போல் இருக்கின்றாரே அந்த ஞானியிடத்தில் அவரைவிட பிச்சைக்காரனைப் போல் நிற்கவேண்டும்.

**உடையார்முன் இல்லார்போல் ஏக்கற்றும் கற்றார்**
**கடையரே கல்லா தவர் (395)**

'கடையரே கல்லாதவர்' என்ற வரிதான் ரொம்ப முக்கியம். திருவள்ளுவருக்குக் கோபம் வந்து இப்படிச் சொல்லுகிறார். ஏன்? இந்தச் செல்வந்தன் ஒருகால் ஏழையாகிவிட்டான். சோறுஇல்லை. எங்கேயாவது போய் கையேந்துகின்றான். பசிக் கொடுமை தாங்க முடியவில்லை.

"பொய்யாய மானம் நோக்கி மெய்யாகிய கல்வியை யிழந்தவர் பின்னொரு நாளும் அறிவுடையவராகா -மையால் கடையரே என்றார்"என்பது பரிமேலழகருடைய உரை. அற்பமானது இந்த உடம்பு. இந்த உடம்புக்கு ஆகாரம் வேண்டும். அதற்காக ஏங்கி நிற்கிறான்.

**பசிவந்திடப் பத்தும் பறந்து போம். (ஔவை)**

என்ன மானம் கிடக்கிறது உனக்கு! அழியாத நித்தியப் பொருளாகிய ஞானத்தைப் பெறுவதற்கு இத்தனை கவுரவம் பார்க்க வேண்டுமா? அதனாலே அடையார். ஆணவம் இருப்பதால் அடையார்.

'அடையார் புரங்கள் வில்லிற் செற்றான்' – அடையாராகிய (ஆணவங்களை) முப்புரங்களை வில்லினாலே செற்றான். மேரு மலையை வில்லாகக் கொண்டு முப்புரங்களை எரித்தான் பெருமான் என்பது மரபாக வருகின்ற கதை. அவன் தில்லையில் இருக்கின்றான். அவனுக்கு மற்றொரு பெயர் ஈசன். அவன் எம்மான். அந்த எம்மானை எதிர்ந்தான் சூரியன். இது இறைவனுக்குச் சிறப்பு. முன்னே சொன்னது பெண்ணுக்குச் சிறப்பு. இறைவனாக இருக்கும்போது இறைவனது சிறப்புக்களைச் சொல்லுகின்றார். இறைவன் அந்தப் பெண்ணிடத்திலே குருவாக எழுந்தருளுகின்ற போது அந்தச் சிறப்பை முற்பகுதியில் சொல்லுகின்றார்.

எதிர்ந்த பகல் – சூரியன். பெருமானை எதிர்த்த சூரியனது பல்லைப் பழனம் என்ற ஊரிலே உகுத்தான். திருப்பழனம் என்ற ஊரிலே இறைவனைச் சூரியன் எதிர்த்தான் ஆணவத்தாலே. அப்போது ஒரு அறை கொடுத்தார். எல்லாப் பல்லும் கொட்டிப்போச்சு. இப்படிச் செய்தது நியாயமில்லை. இப்படிச் செய்தவனுக்கு இரக்கம் உடையவன் என்றா பெயர்! உடனே ஒருவர் சொல்லுவார். "உங்கள் கடவுளுக்கு இரக்கமே இல்லைங்கய்யா" என்று. ஈசன் என்றால் அன்புடையவன் என்று அர்த்தம். சூரியனை அடித்தது அன்பினால். ஈசம் என்ற சொல்லுக்கு அன்பு என்று பொருள். ஈசாமை என்ற சொல்லுக்குக் கோபம், சினம் என்று பொருள். "எனக்கு ஈசாமையா இருக்குதய்யா நீ சொல்றது" என்று சொல்லக் கேட்டிருக்கிறோம். இதெல்லாம் அகராதியில் இருக்கிறதா என்று பார்த்துக் கொண்டிருக்கக் கூடாது. தொனிப்பொருள் என்றும், இடத்தில் ஒலிக்கின்ற சிறப்புப் பொருள் என்றும் உண்டு.

பழனம் போன்றவள் எதிரில் நிற்கின்ற பெண். அவளுக்கு அல்குல் இருக்கின்றது. கொங்கைகள் இருக்கின்றன. இடை இருக்கின்றது. நெஞ்சே! அவளுக்கு இத்தனை நலன்கள் இருந்தும் ஏதோ சோர்ந்து போய்க்கிடக்கின்றாயே, புகல்கின்றது என்? அவலப்படு கின்றாயே ஏன்? அவற்றையெல்லாம் விரும்ப வேண்டியது தானே? விரும்ப வேண்டிய இடங்களை விரும்பாமல் இருப்பது தவறு இல்லையா? ஆகையாலே நயத்தலாலே இந்தப் பொருள் வந்தது.

பழனம் அன்ன – இதை நீங்கள் எல்லாம் மனதில் வைத்திருக்கவேண்டிய ஒன்று. அவளை இத்தனைச் சிறப்புகளால் குறிப்பட்டு, தில்லையெம்பெருமானின் பெருமைகளைச் சொல்லி, அந்தப் பெருமான் முப்புரங்களையும் எரித்த செய்திகளையும் சொல்லி, அவன் ஈசனாக நின்று கதிரவனுடைய பல்லை உதிர்த்த செய்தியையும் சொல்லி, அத்தகைய சிறப்பான பழனத்துக்கு ஒப்பானவள் இவள் என்பதைச் சுட்டிக் காட்டுகிறார். இன்னும் பழனத்துக்குப் பல சிறப்புகள் இருக்கின்றன. அதைப் பின்னாலே நாம் பார்ப்போம். அப்படிப்பட்ட இந்தப் பல்வேறு வகையான சிறப்புகளை உடையவள்.

பெண்ணுக்கு எத்தனைச் சிறப்பு சொல்ல முடியுமோ அத்தனைச் சிறப்புகளையும் சொல்லுகிறார். இப்படிச் சிறப்பித்துச் சொன்னவர்கள் மணிவாசகப் பெருமானுக்கு முன்னும் இல்லை என்றே சொல்லலாம். பின்னாலே வந்தவர்கள் ஏதேனும் ஒன்றிரண்டு கருத்துக்களைச் சொல்லிவிட்டால், என்னங்க புரட்சிக் கவிஞர் சொன்னதைப் பாருங்க, பூதக் கவிஞர் சொன்னதைப் பாருங்க, நாதக் கவிஞர் சொன்னதைப் பாருங்க என்று சொல்லிக் கொண்டிருக்கக் கூடாது. இந்தப் பெண்ணின் சிறப்பைத் தில்லைக்கு ஒப்பிடுகிறார். பழனத்துக்கு ஒப்பிடுகிறார். இந்த இரண்டையும் சேர்த்து ஒப்பிடுகிறார். அவளுக்கு என்ன சிறப்பு என்றால் முப்புரத்தை

எரித்தானே அந்த சிறப்பு இருக்கின்றது. பல்லுக்குத்தானே இந்தச் சிறப்பு இருக்கின்றது இந்தப் பல்வளைக்கே என்று சொல்லுகின்றார்.

பல்வள்ளி – பல் வெள்ளைப்பல்களை அணிந்தவள் என்று சொல்லுகின்ற மரபு இருக்கின்றது. வளை என்பதற்கு சங்கு என்று பழங்காலத்தில் வழங்கி வந்திருக்கின்றார்கள். சங்கைத்தான் வளையலாக அணிந்து கொண்டிருந்தார்கள். இப்போது என்னென்னமோ பொருள்களில் வளையல் வந்துவிட்டது. அதனால் பழைய நிலை என்ன என்று நமக்குத் தெரியவில்லை. கையிலே ஏன் வளை போடவேண்டும்?. இந்த வளையல் எல்லாச் சங்கிலிருந்தும் செய்யப்படுவதில்லை. ஊன் அகன்று விளங்கிய சங்கை எடுத்துத்தான் வளையல் செய்தார்கள்.

சேக்கிழார் பெருமான் காரைக்கால் அம்மையார் வரலாற்றைச் சொல்ல வருகின்றபோது, அந்தக் காரைக்கால் கடல் அருகே சங்குகள் வெளியே வந்து விழுகின்றன. எடுத்தவுடனே அதைத்தான் சொல்லுகின்றார்.

மானமிகு தருமத்தின் வழிநின்று வாய்மையினில்
ஊனமில்சீர் பெருவணிகர் குடிதுவன்றி ஓங்குபதி
கூனல்வளை திரைசுமந்து கொண்டேறி மண்டுகழிக்
கானல்மிசை உலவுவளம் பெருகுதிருக் காரைக்கால் (1)

ஊன் அகன்ற சங்கைத் திரைக் கரங்கள் கொண்டுவந்து கரையில் சேர்க்கின்றன. இதை ஏன் சேக்கிழார் எடுத்துக் கொண்டார் என்றால்; பின்னாலே அம்மையார் ஊனை உதறி, எலும்புக் கூட்டோடு, அன்புநிலை எய்திய நிலையிலே கரையேறப் போகிறார். கைலையைச் சேரப் போகிறார். ஊன் அகன்று திருவடிக்குப் போகப்போகிறார். அப்படி ஒரு நயம் பின்னாலே விளையப் போகின்றது. அந்த உண்மையை ஊன் அகன்ற வளை என்று சிறப்பித்துக் கூறுகின்றார். ஊன் அகலவில்லையென்றால் கடலுக்கடியிலேயே இருக்கும். ஊன் அகன்ற சங்குகள்தான் கரையைச் சேரும். ஊன் அகன்றால்தான் பயன்படுத்த முடியும். எவன் ஊனம்

**அகன்றவனோ அவன்தான் பிறருக்குப் பயன்படுவான். இல்லையென்றால் அவன் பிறரைப் பயன்படுத்திக் கொள்ளுவான். பயன்படுத்திக் கொள்ளுபவர்களெல்லாம் ஊனம் உடையவர்கள். பயன்படவேண்டும் என்று நினைப்பவர்கள் எல்லாம் ஞானம் உடையவர்கள்.** அப்படி ஞானத்தை ஒழுக்கமாகக் கொண்டவள் இந்தப் பெண்.

அதனால் அவளைப் பல்வளை என்று குறிப்பிடுகிறார். கையில் வளையல் போட்டுக் கொள்ளுவது என்பது சாதாரணமானச் செயல் அல்ல. "உன்னுடைய ஊனத்தை அகற்றி, உன்னிடம் ஞானத்தைத் தேக்க வேண்டுமென்றால் நான் ஊன் அகன்ற நிலையில் இருக்க வேண்டும். அதற்கு அடையாளமாக இதைப் போட்டுக் கொண்டிருக்கின்றேன்" என்பதைக் குறிக்கவே வளையல் அணிந்திருக்கின்றார்கள் பெண்கள். மும்மலம் அகன்றதற்கு அடையாளம் திருநீற்றைப் போட்டுக் காட்டினார்கள். நான் ஊனம் அகன்றிருக்கின்றேன், தன்னலம் சிறிதும் இல்லாமல் இருக்கின்றேன், உன்னை எப்படியும், எந்த வகையிலும் ஈடேற்றுவேன், அந்த ஒழுகலாற்றில் உன்னை நிறுத்துவேன், அதற்காக நான் உறுதி கொண்டிருக்கின்றேன் என்று சொல்லுகின்ற பெண் போட்ட வளையல்தான் இது. ஆகையால் "பழனமன்ன பல்வளைக்கே" என்று சொல்லுகின்றார். இதுவரையிலும் இந்தப் பாடலுக்கு ஓரளவுக்குப் பொருள் கண்டோம். இனி அடுத்த நிலையிலே சிந்திக்கலாம்.

போகம் என்று பார்த்தோம் அல்லவா? எதிரில் நின்ற வடிவத்தை ஆசாரியனாகப் பார்த்தவுடனே ஞானம் கிடைத்துவிடாது. முதலிலே உலகியலைச் சரியாகப் புரிந்து கொள்ளவேண்டும். உலகியலைப் புரிந்து கொள்ளுவது ஒரு படி நிலை. இதைச் சோபான முறை என்று பெரியவர்கள் சொல்லியிருக்கின்றார்கள். கரடு முரடான கற்களை நாம் படிகளாக மாற்றிக் கொள்ள வேண்டும்.

மலையில் எங்கு பார்த்தாலும் கரடு முரடான கற்களாகக் கிடக்கும். மலைமேல் ஏறிச் செல்ல வேண்டும்

என்றால் படிகள் சரிவர அமைத்துக்கொண்டால் சுலபமாக ஏறிவிடலாம். ஆகையால் அங்கங்கே சிதறிக் கிடக்கும் கற்களைக் படிகளாக அமைத்துக் கொள்ளவேண்டும். பின்பு சுலபமாக மேலே சென்றுவிடலாம். உலகமும் கரடுமுரடாகத்தான் இருக்கும். அது மட்டுமல்ல. நம்மை இடர்ப்பட வைக்கும் தன்மை உடையது இந்த உலகம். இந்த உலகைத் துய்க்க ஆரம்பித்துவிட்டோம் என்றால் "துய்க்கின் நஞ்சாம்" என்னும்படி, விஷமாக மாறிவிடும். அப்படி அது நஞ்சாக மாறாமல், அதை எந்த அளவிலே அமிழ்தமாக்கிக் கொள்ளுவது? என்பதைத் தெரிந்துத் துய்க்க ஆரம்பிக்க வேண்டும். **நஞ்சாகும் அதனை நஞ்சகற்றும் மருந்தாக அவள் அமைந்தாள்.**

அல்குல் - எல்லாக் காலங்களிலும் விரிவடைந்து ஏன் இருக்கக் கூடாது அந்தக் கருவறை? எப்போதும் விரிவடைந்திருந்தால் நஞ்சாகும். அதனால் எப்போதும் விரிவடைந்திருக்கக் கூடாது. தேவைப்பட்ட நேரங்களில் மட்டுந்தான் அது அகன்றும் சுருங்கியும் நிற்கின்றது. அதனாலே அது போக நிலையமாக இருக்கின்றது. ஆகையால் நாம் போகத்தைக் குறைத்துக் கொண்டே வரவேண்டும். துய்ப்பைக் குறைத்துக் கொண்டே வரவேண்டும்.

அப்படியிருந்தால் நம்மால் உயிர் வாழமுடியு மா? இந்த உடம்பு இருக்குமா? என்று ஐயம் எழும். துய்ப்பினால் இந்த உடம்பு போய்விடும் என்ற உண்மையை நாம் உணர்ந்து கொள்ள வேண்டும். உணர்வு போய்விடும். உயிர் பாழ்பட்டு விடும். அளவில் துய்த்தலும், அளவில் நிற்றலும், அளவில் வாழ்தலும் உயிருக்கு ஆக்கம் தரும். இதற்கு விளக்கம் தருவதுபோல, வாழ்வியலாகத் திருவள்ளுவர் சொல்லுகிறார். எனக்கு உரிய மனைவியைத் தொடுகின்றேன். அப்படித் தொடுகின்ற போதெல்லாம் என் உயிர் தழைக்கின்றது. என்று சொல்லுகின்றார்.

"உறுதோறு உயிர்தளிர்ப்பத் தீண்டலால் பேதைக்கு
அமிழ்தின் இயன்றன தோள்." (குறள் 1106)

அவள் தீண்டினால் என் உயிர் தழைக்கின்றது. நான் தொட்டாலும் அப்படித்தான் இருக்கின்றது. அமிழ்தை விட இனிமையாக இருக்கின்றது அந்த அனுபவம். பட்ட மரமும் தழைக்குமாறு செய்வது அமிழ்தம். அவளுடைய தோளை நான் தொடுகின்ற போதெல்லாம் என் உயிர் தழைக் கின்றது. வாடிப்போகவில்லை. வதங்கிப் போகவில்லை. உயிர் தழைப்பதென்பது அன்புத் தழைப்பு, அருள் தழைப்பு, பண்புத் தழைப்பு, அறிவுத் தழைப்பு இப்படி குண நலத் தழைப்புக்கு தழைப்பு என்று பெயர். உயிருக்கு அதுதான் மாட்சி. அந்த நலங்களெல்லாம் அவளைத் தொடுகின்ற போதெல்லாம் எனக்குக் கிடைக்கின்றது.

இங்கே தோள் என்பது தோளைச் சொல்லவில்லை. தோளைச் சார்ந்திருக்கின்ற மார்பகத்தைச் சொல்லுகிறார். அதற்கு இலக்கணம் உண்டு. இதைச் சொன்னால் அந்தத்தான் குறிக்கும் என்பதற்கு இலக்கணம் உண்டு. அதனாலே இந்தப் போக நிலையமாகிய ஒன்றை அறிந்து அளவில் நிற்க வேண்டும். "அளவுக்கு மிஞ்சினால் அமிழ்தமும் நஞ்சு" என்பது பழமொழி. அமிழ்தத்தையும் நஞ்சாக்கலாம். நஞ்சையும் அமிழ்தாக்கலாம். ஆகையால் இந்தச் சேரபானம் என்ற படிமுறை இருக்கின்றதே அது உங்களை எளிமையாக அந்த நிலைக்கு அழைத்துச் செல்லும். அதனாலே, "போக நிலையமாக இருக்கின்ற அந்தத் தோள்கள் இருக்கும் போது, நீ ஏன் கவலைப் படுகின்றாய் நெஞ்சே!" என்று தெளிவு சொல்லுகிறார்.

உலகியலிலே ஒரு ஆணும் பெண்ணும் மண வாழ்க்கையைத் தொடங்குவது இயற்கை. கடவுளே அர்த்தநாரியாக இருக்கின்றான். ஆணும் பெண்ணுமாக இணைந்து வாழ்ந்து கொண்டிருக்கிறோம். இது இயற்கை. அர்த்த நாரி என்னும் போது நாரி என்று வருகிறதில்லையா? இதைச் சொல்லும் போது எனக்கு ஒரு

நினைப்பு வருகின்றது. மொழியியல் அறிஞர் நார் என்பதற்கு முடியைச் சுட்டிக் காட்டினார். பெருமானுடைய முடி என்று விளக்கம் சொன்னார்.

அவருடைய விளக்கம் மிக நன்றாக இருந்தது. ஆனால் நார் என்பதற்கு அது பொருளல்ல. அவர்கள் மொழியின் ஆழத்திற்கு இன்னும் செல்லவில்லை. அதற்கு வேறு பொருள் இருக்கின்றது. நார் என்றால் அன்பு என்று அர்த்தம். பொதுவாக அனைத்து வீட்டிலும், குழந்தைகளைத் திட்டும் போது "நாரி பெத்தது" என்று திட்டுகின்றார்கள். அப்படியென்றால், நார் போன்றவள் பெற்றது என்றா அர்த்தம்? நார் - அன்பு. அதனால்தான் அவனுக்கு நாராயணன் என்று பெயர். அன்புடையவன் என்று பொருள். முடியை வைத்துச் சொல்லவில்லை.

"நட்பு நாரற்றனர், நல்லாருமக்கினார்" என்றது நாலடியார். இந்தச் சொல்லுக்குப் பொருள் என்ன என்று முதலில் புரிந்து கொண்டால், பிறகு அது எப்படிப் பயன்பட்டு வருகின்றது என்பதை உணர்ந்து கொள்ளலாம். "கொங்கை அலை" என்று சொல்லுகிறார். இந்த கொங்கையைப் பற்றி இன்னொரு செய்தியைச் சொல்லுகிறேன். உலகியலில் கணவன் மனைவி என்று வாழ்வது இயல்பு. குழந்தை பிறப்பதும் இயல்பு. அது பச்சிளங்குழந்தையாக இருக்கின்ற போது பால் குடித்துக் கொண்டிருக்கும். ஆறு மாதம், ஒரு ஆண்டு வரையிலும் பால் குடித்துக் கொண்டிருக்கும். குழந்தை பிறந்து ஆறு மாதம் வரையிலும் கூட ஆண்கள் பொறுமையாக இருக்க மாட்டார்கள். பெரிதும் வேட்கையினால் உந்தப் படுபவர்கள் ஆண்கள். அந்த வேட்கையை ஈடுசெய்து கொள்ளும் வகையில் தனக்கு உரிமையாக இருக்கின்ற இடத்தை அணுகுவார்கள். அப்படி அவர்கள் ஒப்புதல் தரவில்லையென்றால் இவர்கள் எங்கேனும் போய்த் தம் உணர்ச்சிகளைத் தணித்துக் கொள்ளுவார்கள். இதற்குப்

பயந்து பெண் தன் மாட்டாமையை எடுத்து உரைக்க முடியாமல், பச்சை உடம்பாக இருந்தாலும் ஒப்புக் கொள்ள வேண்டும் என்று உடன்படுவார்கள். அதுவும் இயற்கை நியதியே. ஏன் என்றால், தனக்கு உரியவனை வேறு இடங்களுக்கு மனம் நாட்டம் கொள்ளச் செய்யக் கூடாதே என்பதற்காக ஒப்புதல் செய்தலும், உடன் படுவதும் பழியும் அல்ல, தவறுமில்லை. நியாயமானதுங்கூட. அப்படி இணங்கிய பின் குழந்தை பாலுக்காக அழுதால், தாய் பால் கொடுக்க வேண்டும். கொடுக்கவேண்டிய கட்டாயம் இருக்கும். இப்படிக் கலந்து கொண்ட உடனே குழந்தைக்குப் பால் கொடுத்தால், கலந்து கொண்டதால் ஏற்பட்ட உணர்வு நீர் சுரந்து தேங்கியிருக்கின்ற பாலோடு கலந்து விடும். அப்படிக் கலந்தால் அது நஞ்சாக ஆகிவிடும். இந்தப் பாலைக் குடித்தவுடன் அந்தக் குழந்தைக்கு அள்ளு மாந்தம் வந்துவிடும். அது வந்தால் குழந்தை உயிர் பிழைக்காது. இப்போது அந்தக் கருவியின் முக்கியத்துவம் என்ன என்று உங்களுக்குத் தெரிந்திருக்கும். இதைத் தெளிவிக்கவே இந்தக் கருத்தைச் சொன்னேன்.

**உணர்ச்சியின் தேக்கமாகத் திகழ்கின்ற ஒரு நிலையம் அது. எந்த உணர்வை நீங்கள் நினைக் கின்றீர்களோ அந்த உணர்வை அங்கே கொண்டு வந்து தேக்கலாம். எவ்வளவு சிறிய உணர்வாக இருந்தாலும் சரி, எவ்வளவு பெரிய உணர்வாக இருந்தாலும் சரி. அவற்றை எளிமையாகத் தேக்கி வைத்துப் பிறர்க்குக் கொடுக்கின்ற ஆற்றல் படைத்த கருவிகள் அவை.** இந்த அள்ளு மாந்தத்திற்கு அலோபதி மருத்துவத்தில் மருந்து இருக்கின்றதா என்று எனக்குத் தெரியவில்லை. ஆனால் பழைய மருத்துவத்தில், மண்டை ஓட்டிலே ஒரு பஸ்மம் செய்து வைத்திருப்பார்கள். அதைத் தேனிலே கல்ந்து கொடுத்தால் ஒரிரு வேளை உண்ட பிறகு குழந்தைக்குச் சரியாகிவிடும். அதையும் உடனடியாகச் செய்ய வேண்டும். அதனாலே அந்தக் கருவிகள் எவ்வளவு

பெரிய உணர்ச்சி மயமானது என்று தெரிந்து கொள்ள வேண்டும். இப்போது நோயின் காரணத்தையும், நோய்க்குரிய மருந்தையும் சொல்லிவிட்டேன். இதன் மூலம் நீங்கள் தெரிந்து கொள்ள வேண்டிய செய்தி என்ன வென்றால், குழந்தை பால் குடித்துக் கொண்டிருக்கும் காலங்களில் கலந்து கொள்ளக் கூடாது என்பதும், அப்படியே கலந்து கொண்டாலும், கலந்து கொண்ட சிறிது நேரத்தில் குழந்தைக்குப் பால் கொடுக்கக் கூடாது என்பதும், அந்தக் கருவிகள் எத்தகு உணர்ச்சி மயமானவை என்பதையும் நாம் உணர்ந்து கொள்ளவேண்டும்.

உயர்ந்த அருள் நிலையிலே தன் சிந்தையை வைத்து வாழ்கின்றவர்களாக இருந்தால், தனக்கு உரியவனை அணைக்கின்ற போது, தான் என்ன நினைக் கின்றார்களோ அந்த உணர்வை அவன் மார்பகத்தின் மூலம் அவனுக்குச் செலுத்துகின்றார்கள். அது தானாகப் பாய்ந்துவிடும். பாய்ச்ச வேண்டிய அவசியமில்லை. அப்படிப் பாயுமா? என்று ஐயம் எழக்கூடும். மேலே சொன்ன கருத்தை மனத்தில் இருத்திக் கொள்ள வேண்டும். அப்படியானால் அது பால் கொடுத்ததால்தானே அப்படி ஆனது என்றால் அது பருப்பொருள். இது அந்தப் பருப் பொருளிலே நுண் பொருளாக இருப்பது. நுண்பொருள் பருப்பொருளில் தானாகப் பாயும் தன்மையது. அதனாலே எப்போதும் பெண்கள் தியானத்துக்குரியவர்களாக, வழிபாட்டுக்குரியவர்களாக வழிபடும் தன்மை உடையவர் களாக, உயர்ந்த சிந்தனை உடையவர்களாகவே அமைதல் வேண்டும்.

நாம் அப்படி இருக்க முடியாதா? இருக்கலாம். ஆனால் அவர்கள் நம்மிலும் மேலான நிலையில் உள்ளவர்கள். இதைக் குறிக்கவே (தியானம் உடையவர்களாக, தவம் உடையவர்களாக இருக்கிறார்கள் என்பதைக் குறிக்கவே) அவர்கள் சடை போட்டுக் கொண்டிருக்கின்றார்கள்.

அந்தச் சடையில் மூன்று கால்கள் எடுத்துப் பின்னிச் சடை போட்டுக் கொள்வார்கள். இது எதைக் குறிக்கிறது என்றால் வலநாடி, இடநாடி, நடுநாடி என்பதைக் குறிக்கும். இந்த மூன்று நாடிகளும் அவர்களுக்குச் சுத்தமாகச் செல்லும். ஆண்களில், இந்த மூன்று நாடிகளும் சுத்தமானவுர்கள், அதற்கு அடையாளமாக பூநூல் அணிந்திருப்பார்கள். அதனால் பூநூல் அணிந்தவர்கள் எல்லாம் ஐயரல்ல, ஐயங்காரல்ல. நான்கூடப் போட்டுக் கொள்ளலாம். வேண்டாம் என்றா சொல்ல முடியும்?

"நூல் யோகமாகும், நுண் சிகை ஞானமாகும்" என்று திருமூலர் தெரிவிக்கின்றார். முதலில் வலநாடி, இட நாடி, நடு நாடியை காயத்திரி மந்திரம் மூலமாக மேலே ஏற்றிய பிறகு பூநூல் போட்டுக் கொள்ள வேண்டும். வெறுமனே பூநூலைப் போட்டு அழுக்கைத் தேய்த்துக் கொண்டிருக்கக் கூடாது. ஆக, இந்த நிலைகள் உயர்வதற்கு உரியதுதான் பூநூல். இதை ஏதோ வேடிக்கை செய்வதற்காகச் சொல்லவில்லை. நீங்கள் உணர வேண்டும் என்பதற்காகச் சொல்லுகின்றேன்.

"நுண் சிகை" என்பது குடுமி வைத்துக் கொள்வது மட்டுமல்ல. அப்படி வைத்துக் கொண்டிருப்பவர்கள், அதைக் கோலமாகத்தான் பூண்டிருக்கின்றார்கள். அதன் பொருள் வேறு. நுண் சிகை என்பது ஞான நிலை, ஆசாரிய அபிஷேகம் பெற்ற நிலை. ஆசாரிய அபிஷேகம் பெற்றவர்கள், அப்படி நுண் சிகை வைத்துக் கொண்டு வழிபாடு செய்தல் வேண்டும். யோக நிலையிலே இருப்பவர்கள் இப்படிச் செய்யக் கூடாது. அந்த உயர்ந்த கொள்கைகளை விளக்கவே இந்த இரண்டு நிலைகள் வைக்கப்பட்டிருக்கின்றன. இந்த இரண்டு நிலையினால் பெறுகின்ற அனுபவத்தைவிட, எதிரிலே கண்ட குருநாதனுடைய அணைப்பினாலே, பரிசத்தினாலே பெற்றுக் கொள்ளலாம்.

அதை இன்னொரு வகையாகவும் உங்களுக்குச் சொல்லலாம் என்று எண்ணுகின்றேன். திருஞான சம்பந்தப் பெருமான் அழுதார். தோணிபுரத்து அம்மையும் அப்பனும் எழுந்தருளினார்கள். அம்மை இரண்டு மார்பகங்களினின்றும் ஒரு பொற்கிண்ணத்திலே பாலைக் கறந்து எடுத்தாள். அப்பனும் சேர்ந்து, ஆணையிட்டதனால் ஊட்டினார்கள். அந்த நிலையிலே அவருக்கு என்ன கிடைத்தது? 'உவமையிலாக் கலை ஞானம்', 'உணர்வறிய மெய்ஞ்ஞானம்' இந்த இரண்டு ஞானங்களும் அந்த நிலையிலே அவருக்குக் கிடைத்தன.

பரஞானம், அபரஞானம் என்று இதனைச் சொல்லுவர். இந்த இரண்டு வகையான ஞானங்களையும் தரவல்ல ஆற்றலுடைய கருவிகள் அவை. அத்தகு கருவிகள் கொண்ட அந்த உருவம் தெரிகின்றது. அதனால் இத்தனை வகைப் பயன்கள் இருக்கின்றன. அதைப் பெற்று உய்ய வேண்டிய நீ, ஒன்றுமில்லை என்று சொல்லுகின்றாயே, எதைப் பார்த்து ஒன்றுமில்லை என்கிறாய்? இகஞானம் – இந்த உலகியல் வாழ்க்கையில் நலம் சேர்ப்பது; பரஞானம் – இறைவன் திருவடியில் கொண்டு சேர்ப்பது.

"இகநிலைப் பொருளாய் பரநிலைப் பொருளாய்
அகமறப் பொருந்திய அருட்பெருஞ்சோதி"

என்பார் வள்ளல் பெருமான். இருநிலையும் கடந்து செல்லுகின்ற ஆற்றலைத் தருகின்ற ஒரு வடிவம் இருக்கின்றது. அது உனக்குத் தெரியவில்லையா என்று அங்கே சுட்டிக் காட்டுகின்றார்.

திரிபுரங்களை எரித்த செய்திகளைச் சொல்லுகின்றார். எப்போதும் ஆண்களுக்கு இந்த மும்மல வாதனைகள் இருந்து கொண்டே இருக்கும். மாணவனுக்கும் இவை இருக்கும். அவனுக்கு ஆசாரியனாக இருப்பவன் இந்த மும்மல வாதனைகளிலிருந்து விடுபட்டு இருக்க வேண்டும். இறைவனுக்கு மலங்களே இல்லை.

மலமற்ற அவன்தான் மலங்களை அகற்ற முடியும். படித்த ஒருவன்தான் படிப்பிக்க முடியும். படியாத ஒருவன் உன்னைப் படிப்பிக்கின்றேன் என்று சொன்னால், அது "குருடும் குருடும் குருட்டாட்டம் ஆடி, குருடுங் குருடுங் குழிவிழுமாறே" என்பதாகவே முடியும். ஆக, கற்ற ஒருவன் கல்லாதானைக் கற்பிக்க முடியும். அப்படியே மலமற்ற ஒருவனே, மலத்தை அகற்ற முடியும். இதைச் சுட்டிக் காட்டவே திரிபுர தகனம் என்று வைத்தார்கள். இந்தத் திரிபுர தகனம் என்பது வெளிப்படையாகத் தெரியாத ஒன்று. உணர்வினாலே நிகழ்வது.

அப்பணி செஞ்சடை ஆதி புராதனன்
முப்புரம் செற்றனன் என்பர்கள் மூடர்கள்
மூப்புரமாவது மும்மல காரியம்
அப்புரம் எய்தமை யாரறி வாரே! (329)

பெருமான் முப்புரம் எரித்தான் என்று சொல்லுவார்கள் மூடர்கள். கோபமே வந்துவிடுகின்றது அவருக்கு. இந்த முப்புரம் என்பது உன் உள்ளே இருப்பது. அதை அழித்ததை யாரால் பார்த்திருக்க முடியும்? நாமறியாமல் நம்முள்ளே இருக்கும் மும்மலங்களை அழிக்கும் தன்மை உடையது. அதனால்தான் பெரியவர்கள் சொல்லுவார்கள், "இந்தப் பையன் என்னமோ துள்ளிக் கொண்டிருக்கின்றான்; இவனுக்கு ஒரு கால் கட்டுப் போடுங்கள்; துள்ளல் எல்லாம் அடங்கிவிடும்" என்று. ஒரு பெண்ணைத் திருமணம் செய்து வைத்துவிடுங்கள் அடங்கிவிடுவான் என்றார்கள்.

துள்ளுதலாகிய தன்மை ஆணவத்தாலும், கன்மத்தாலும், மயக்கத்தாலும் நிகழ்வது. இவனுடன் அங்கே ஒன்றை இணைத்தவுடனே இவனுடைய துள்ளல் தானாகக் குன்றிவிடுகின்றது; மேலான நலம் தானாக விளையும் காலம் வந்து விடுகின்றது; தனக்கு மேலான ஒரு பொருளைத் தானாக எண்ணுகின்ற காலம் வந்துவிடுகின்றது. இந்தப் பெண் இருக்கின்றாளே இவள்

மூல மலமாகிய ஆணவத்தையும், விளைவு மலங்களையும் அகற்றுகின்ற தன்மை உடையவள். அவள் திரிபுரம் எரித்த பெருமானுக்கு வேறுபட்டவள் அல்ல; சமமானவள் அந்தத் திரிபுரம் எரிப்பதற்கு மேருமலையை எடுத்தான். மேருமலை என்பது புருவ மத்தி. புருவ மத்தியாகிய உச்சிக்கும், மூலாதாரம் என்ற அடிவாரத்திற்கும் ஒரு நாணை ஏற்றிவிட்டால், அங்கிருந்து ஞானம் என்ற அம்பு புறப்பட்டு ஆன்மாவில் இருக்கின்ற மும்மலங்களை அழித்துவிடும். அது ஒரு தியான நிலை. இதனைச் சொல்ல வந்தார். மேரு மலை, மேருமலை என்றால் ஏதோ என்று எண்ணிக் கொள்ள வேண்டாம். புருவமத்திக்குத்தான் மேரு மலை என்று பெயர். அடிவாரம் தான் மூலாதாரம். இந்த இரண்டு இடங்களுக்கும் இடையில் செலுத்தப்படும் உணர்வே, நாண் அல்லது கயிறு. அதிலிருந்து புறப்படும் ஞானமே அம்பு. இந்த நாண் ஏற்றப்பட்டாலே, ஞான அம்பு தானே புறப்பட்டு மும்மலங்களையும் அகற்றிவிடும்.

மும்மலமும் அழிந்த பிறகும், வாசனா மலம் என்பது உயிர்களிடத்தில் உண்டு. அது எவ்வளவு பெரிய ஞானியாக இருந்தாலும் சரி, அவர்களுக்கும் அது உண்டு. பழகிப் பழகி வருவதால், பழக்க வாசனை என்று ஒன்று உண்டு அல்லவா? ஒரு உதாரணம். நம்முடைய வள்ளல் பெருமான் மிகப்பெரிய ஞானி. இவர் இந்த உலகத்தோடு பழகவேண்டிய அவசியம் அமைகிறது. அவர் பழகிய இடம் ஏழுகிணறு பகுதி. இந்த மாயை அவரைப் பல வகையிலும் தொல்லை கொடுத்துக் கொண்டிருக்கின்றது. அதைக் குறிப்பிடுவதற்கு ஒரு சொல்லைப் போடுகின்றார்.

'மாயையெனும் படு சிறுக்கி" என்று குறிப்பிடுவார். அங்கு வாழ்ந்த மீனவப் பெண்கள் "சிறுக்கி" என்ற வார்த்தையை அடிக்கடி பயன்படுத்துவார்கள் - "சிறுக்கி வந்துட்டா, மாப்பளக்கி சமச்சிப் போட வந்துட் டா" அப்பமன்னு சொல்லுவார்கள். இந்த மாயை யையும் அது கொடுக்கும் தொல்லையையும் அவரால் தாங்க

முடியவில்லை. உடனே அவருக்கு அந்த வார்த்தை நினைவுக்கு வருகின்றது. அதைப் பயன்படுத்தி விடுகின்றார். எவ்வளவு பெரியவர்களாக இருந்தாலும் சரி, ஞானிகளாக இருந்தாலும் சரி, வாசனா மலம் தாக்கும். "என்னங்க வள்ளலாரை இப்படித் தாக்குகின்றீர்களே! நியாயமா?" என்று கேட்கத் தோன்றும் இதில் தவறு ஒன்றுமில்லை.

இஸ்லாமியக் குடும்பத்தில் பிறந்த ஒருவர் நெறியினாலே நின்று உயர்ந்து விட்டார். அப்படி உயர்ந்தவர் பெரிய ஞானியாகிவிட்டார். அவர் பிறந்த குடும்ப மரபிலே வந்த வாசனை அவரை விடவில்லை. "ரோஷம் கெடுவீர் என் மயிர்காண்" இப்படி மயிர், மயிர் என்றே சொல்லிக் கொண்டே போகிறார். அதுமட்டும் இல்லை. அது எங்கெங்கே இருக்கின்றது என்றும் சொல்லிக் கொண்டேபோகிறார். அப்படி ஞானி -களானாலும் வாசனா மலம் தாக்கும். குணங்குடி மஸ்தான் பாடல்களைப் படித்துப் பாருங்கள். உயர்ந்த பாடல்கள்தான். அதிலும் அவர் உபயோகிக்கும் வார்த்தைகளில் இந்த வாசனா மலத்தின் தாக்குதல் இருக்கும்.

இந்த வாசனா மலத்தினாலே உலகியலிலே இச்சை அதிகமாகப் போய்க் கொண்டே இருக்கும். அப்போது கன்னத்தில் இரண்டு போட்டு அடக்குவதுதான், அன்பினாலே அடக்குவதுதான் "பழனம்".

என்னுடைய வாழ்க்கையில் நடந்த நிகழ்ச்சி ஒன்றைச் சொல்லுகிறேன். "தன்னையே எடுத்து ஓதுதலும் தகுதி" என்று இலக்கணம் சொல்லுகின்றது. வெகு நாள்களுக்கு முன்னமே வெல்லம் சாப்பிடுவதில்லை என்று முடிவு செய்துவிட்டேன். அந்த விரதம் முடிந்த பின்னும், பல ஆண்டுகள் அந்தப் பண்டத்தையே சாப்பிடுவதில்லையென்று விட்டுவிட்டேன். வெல்லம் என்றால் மிகவும் பிடிக்கும். ஒரு நாள் மளிகைக் கடைக்குப்

போனேன். அங்கே வெல்லத்தைப் பார்த்த பின்பு அதைக் கேட்டுவாங்கிச் சாப்பிடவேண்டும் என்று அவா மிகுந்து விட்டது. மற்றதெல்லாம் சாப்பிடக் கூடாது என்று மனத்தை அடக்கிவிட்ட நேரம் அது. இப்போது என்ன செய்வது? மனம் தவறு செய்யத் தூண்டுகின்றது. பளார் என்று நானே என் கன்னத்தில் அடித்துக் கொண்டேன்.

ஒரு நெறியிலிருந்து தவறுவாரைப் பளார் என்று கன்னத்தில் அடிப்பது வழக்கம். அது அன்பினாலே நிகழ்வது. மலங்கள் அகன்றாருக்கும், வாசனா மலங்கள் செயல்படுகின்ற போது, இறைவன் அன்பின் வடிவமாக அந்த இடத்தில் நின்று அதைத் தகர்க்கின்றான். அப்படித் தகர்த்த இடந்தான் "பழனம்". சீவனுடைய தன்மையைத் தகர்த்த இடம் "பழனம்".

இந்தக் கருத்துகளை இங்கே வலியுறுத்துவான் வேண்டி, "நெஞ்சே!" என்று விளிக்கின்றார். பரஞானத்தையும், அபர ஞானத்தையும் பெற்று, அதனாலே பெறுகின்ற யோக அனுபவங்களை நீ பெறுவதற்கு இருக்கின்றாய். யோகம் என்பது நுண்ணிய அறிவின் விரிவு. அதனாலே இறைவனை அடைந்துவிட முடியாது. யோகத்தால் இறைவனை அடைவதை விட, இறைவனது அருமை பெருமைகளை அறிந்து கொள்ளலாம். அறிவு நுட்பமாகும். அதன் அருமை பெருமைகள் விரிந்து கொண்டே போகுமே தவிர, அவனுடைய எல்லையைப் பார்க்க முடியாது. அத்தனையும் விட்டு பர, அபர ஞானங்களுக்கு வந்துவிட்டால் அங்கே இறைவன் எளிவந்த பிரானாக வந்து நிற்கின்றான். **அப்படி எளிவந்த பிரானாக எழுந்தருளி அருள் செய்கின்ற இடம் கொங்கைகள்.** இது உனக்குப் புரியாவிட்டால் அறிவியல் விரிவுக்குக் காரணமாகிய யோகமாகிய இடைப் பகுதியும் இருக்கின்றது. அவற்றைக் காண் என்று சொல்லுகின்றார்.

இனி "பழனம்" என்பது பற்றிப் பார்க்கலாம். பழனம் என்பது பல பொருள்களை உடையது. பழனத்திற்கு ஒப்பானவள் என் முன்னே நிற்கின்ற தலைவி. குறைகளைக் களைந்து, குணங்களைஅளிப்பவள் அவள். குறைகளை அகற்றி, குணங்களை அளிப்பதற்குப் பழனம் என்று பெயர். யாரால் இந்தக் குறைகளை அகற்ற முடியும்? பரிபக்குவம் எய்திய ஆன்மாக்களாலன்றி குறைகளை உதிருமாறு செய்ய முடியாது. அவர்களன்றி குறைகள் அகலாது. இதற்கு ஒரு சின்ன கதையை உதாரணமாகச் சொன்னால் உங்களுக்குப் புரிந்து விடும்.

ஔவைப் பாட்டி – பாட்டிலே வல்லவள்; உறழ்ந்த கல்வி உள்ளவள்; தனக்கு நிகர் இல்லையென்ற முனைப்பு உடையவள். நல்ல வெயில் நேரம். பசியோடு வருகிறாள். களைப்பினால் அங்கேயிருந்த ஒரு நாவல் மரத்தடியில் அமருகிறாள். மேலே நிமிர்ந்து பார்த்தால், நாவற்பழம் கொத்துக்கொத்தாகப் பழுத்துத் தொங்குகிறது. தன்னால் எட்டிப் பறிக்க முடியாத நிலை. சுற்றிப் பார்க்கிறாள். அங்கே ஒரு சிறுவன். மாடு மேய்த்துக் கொண்டிருக் கின்றான். அவனை அழைத்துப் பழம் பறித்துத் தரச் சொல்லுகிறாள். அவன் மரத்தின் மீது ஏறி நின்று கொண்டு."பாட்டி, உனக்குச் சுட்ட பழம் வேண்டுமா? சுடாத பழம் வேண்டுமா?" என்று கேட்கிறான். அந்தப் பையன் கேட்டது இவளுக்கு விளங்க வில்லை. அது கல்வியின் குணம். சிந்திக்காது. முனைப்புதான் அதிகம் இருக்கும்.

பழத்தில் என்ன சுட்டபழம், சுடாத பழம் என்று எண்ணுகிறாள். அச்சிறுவனிடம் கேட்க மனமில்லை. "சுடாத பழம் போடுப்பா" என்கிறாள். அவன் மரத்தை உலுக்கினான். பழங்கள் கீழே மணலில் விழுந்தன. பழத்தை ஆவலோடு எடுத்தவள், அதில் மணல் ஒட்டிக் கொண்டிருப்பதை அகற்ற ஊதினாள். அந்தப் பையன் கேட்டான் "பாட்டி, பழம் சுடுகின்றதா?" என்று. இந்தக் கேள்வி அவளுடைய குறைகளை உதிர்த்தது. ஞானம்

பிறந்தது. அந்தக் குறைகள் கருமையானது. குறைகள் தன்னைத் தாழ்விப்பது.

நாவற் பழம் சாப்பிட்டால் தொண்டை கெட்டுவிடும். அது ஆணவ சம்பந்தமானது. ஆன்மா என்ற மரத்தில் பழுத்துக் கிடந்த, நாவலாகிய குறைகளை உலுக்க வேண்டிய நேரம் வந்த போது உலுக்கியது ஞானம். அதை உணர்ந்தது உயிர். உலுக்கியது ஞானம் என்ற முருகன். உணர்ந்தது ஔவை என்ற சீவன். உதிர்ந்தது குறைகளாகிய நாவல். அந்த இடம்தான் பழனம். அவள் பரிபக்குவம் எய்திய ஆன்மாவில் இருக்கின்ற குறைகளையெல்லாம் அகற்றுகின்ற ஒரு பெருவடிவமாக வந்து அமர்ந்திருக்கின்றாள்.

இந்தப் பழனம் என்பது சோழ நாட்டில் இருக்கிறது என்று குறிப்பிட்டு இருக்கின்றார்கள். சோழ நாடு சோறுடைத்து. சோறு என்பதற்கு 'ஞானம்' என்று பொருள். இந்தப் பழனம் ஞானத்தை வழங்க வல்லது. அந்த ஞானத்தை வழங்கும் தகுதி உடையவள் இவள். திருவையாற்றை ஒட்டி உள்ள ஏழு தலங்களில் பழனமும் ஒன்று. திருவையாறு மையமாக இருக்கின்றது. சப்த தலங்களும் அதைச் சுற்றி இருக்கின்றன. மூலப்பதியிலிருக் கின்ற தில்லையம்பதியில் இருக்கின்ற பெருமானுடைய ஒளியினாலே சிறந்து விளங்குகின்ற இடம் பழனம். இங்கே விளங்குகின்ற பெருமான் மூலப்பொருளின் ஒளியைத் தன்னகத்தே கொண்டு நிற்பவன். இவள் அவன் ஒளியைப் பெற்றவள்; உன் அறியாமையை நீக்குகின்ற தகுதியைப் பெற்றவள். அதனால் "பழனம் அன்ன பல்வளைக்கே" என்று சொல்லுகின்றார். ஒரு திருக்கோயிலாக விளங்குகின்றாள் அந்தப் பெண். ஞானத்தை ஊட்டியது. பிரணவத்தைப் போதித்தது "பழனம் அன்ன பல்வளை". பழனம் என்பது பிரணவத்தைப் போதித்த இடம். அந்தத் தலத்தில் தல விருட்சமாகத் திகழ்வது கதலி. அது போல

இவள் கோது அகற்றி, குழைக்கும் தன்மை உடையவள்; உன் குற்றங் களையெல்லாம் அகற்றி உன்னைக் குழைக்கும் தன்மை உடையவள். ஞானத்தை வழங்கக் கூடியவள் என்பதை உணர்த்தியது. அதனால் பழனம் அன்ன பல்வளை. "இப்படியெல்லாம் வழங்கக்கூடிய அவளைப் பார்த்து ஒன்றுமில்லையென்று சொல்லுகின் றாயே" என்கிறார்.

பழனம் என்ற திருப்பதியில் சந்திரன் வந்து வணங்கியதாகக் கதையாகச் சொன்னார்கள். அதன் உட்கருத்து ஒரு சீவன் வணங்கித் தன்குறைகளைப் போக்கி நிறைவு பெறுகின்ற இடம், இதோ இந்த ஆசாரியனை அல்லது இந்தப் பெண்ணை அல்லது இந்த உலகத்தை, இதில் எதை வேண்டுமானாலும் வைத்துக் கொள்ளுங்கள். இதை நீங்கள் அணுக அணுக, பொறுமை, தண்மை, தூய்மை, ஊக்கம், பரந்த நிலை வரும். இந்த உலகத்தை முன்னீடாக வைத்து வணங்கினால் இத்தனை நிலைகளும் வரும். இதே போல அவனை முன்னீடாக வைத்து வணங்கினால், நீ வளரும் நிலையில் இருப்பாய். உன்னுடைய தேய்ந்து கொண்டிருக்கின்ற அறிவை வளர்க்கின்ற தன்மை உடையவள் இவள். "பழனம் அன்ன பல்வளை"வளர்க்கும் தன்மை உடையவள். நீ எப்போதும் தேய்ந்து கொண்டிருக்கும் தன்மை உடையவன். அறிவால், உணர்வால், தேய்ந்து கொண்டிருக்கும் தன்மை உடைய சீவனை வளர்க்கும் தன்மை உடையவள் அந்தப் பழனம் என்னும் பல்வளை.

இந்தப் பழனம் என்னும் திருப்பதி திருஞான சம்பந்தராலும், அப்பர் பெருமானாலும் பாடப்பெற்றது.

"பாதம் தொழுவார் பாவம் தீர்ப்பார் பழன நகராரே"

இது பாவம் தீர்க்கக் கூடிய தலம். இப்பிறவியிலும், முற்பிறவியிலும் செய்த பாவம் இருக்கின்றதே, அவை இந்த

**ஆசாரியனைக் கண்டவுடனே தீர்ந்துவிடும். உலகியலிலே செய்து கொண்டிருந்த பாவங்களை யெல்லாம் தீர்த்துக் கொள்வதற்கு உறுதுணையாக இருக்கின்றாள் இந்தப் பெண்.** அதனாலே, பழனம் அன்ன பல்வளைக்கே என்றார். இத்தனைக்கும் காரணம் அவள் ஊன் அகன்று நிற்பவள்.

அவள் ஊன் அகன்று நிற்கின்றாள் என்பதை எப்படிச் சொல்லுகிறீர்கள் என்றால், ஒரு பெண் எப்படிப் பட்டவளாக இருக்க வேண்டும் என்பதைப் பார்ப்போம். இறைவனுக்கும், சீவனுக்கும் உள்ள தொடர்பு – இறைவனைப் பெண்ணாக்கி இந்தச் சீவனை ஆணாக்கிவிட்டால் இரண்டும் பொருந்திவிடும்.

> **"இணையார் திருவடி என் தலைமேல் வைத்தலுமே**
> **துணையான சுற்றங்கள் அத்தனையும் துறந்தொழிந்தேன்**
> **அணையாப் புனல்தில்லை அம்பலத்தே ஆடுகின்ற**
> **புணையாளன் சீர்பாடிப் பூவல்லிக் கொய்யாமோ.**
>
> **(திருவாசகம் – திருப்பூவல்லி – 1)**

**பூவல்லிக் கொய்தல் என்பது வினையை அகழ்ந்தெடுத்தல், கொய்தெடுத்தல் எனப்படும்.** அவன் திருவடி என் தலைமேல் வந்துவிட்டது. அதனால் எல்லாவற்றையும் துறந்துவிட்டு, உன்னையே ஆதாரமாகக் கொள்ளுகிறேன். ஆசாரிய அபிஷேகம் பெற்றவன் மலரைக் கிள்ளி காதிலே வைத்து, தலையிலே வைத்து வழிபாடு செய்ய வேண்டும். இப்படிச் செய்வதால் தன்னையே வணங்கிக் கொள்ளுகின்றான் என்று அர்த்தமல்ல. அந்த மலர்கள் இரண்டும் திருவடியாகக் கொள்ள வேண்டும். "இணையார் திருவடி என் தலைமேல் வைத்தலுமே" என்றால் இந்த மாணவனை ஆட்கொள்ளுவான் வேண்டித் தன் திருவடியை அவன் தலைமேல் வைத்தலாகும்.

அப்படியே ஒரு பெண் எல்லாவற்றையும் துறந்து, **இவனுக்கு ஆட்பட வருகின்றபோது, இவனை ஈடேற்றவே**

**வந்திருக்கின்றாள். இதற்கு அடையாளமாகவே அவர்கள் தலையில் மலர் சூடிக் கொள்ளுவது. அது இறைவன் திருவடியைச் சூடியதற்கு அடையாளம்.** மலரைச் சூடிக் கொள்ளுவதற்கு முன் அவர்களுக்கு என்ன நினைவு வரவேண்டும் தெரியுமா? "இறைவா! இந்த மலரை நான் சூடிக் கொள்ளுவது, மணத்துக்காகவோ, அழகுக்காகவோ அல்ல. இறைவா! உன் திருவடி என்னுடைய சிரசில் ஏறியிருக்கின்றது; உன்னுடைய திருவடியாகிய ஞானம் என்னுடைய சிந்தனையிலே எழுந்து, என்னை மணந்து கொண்ட மணவாளனும், என்னைச் சூழ்ந்து நிற்கின்ற அத்தனைபேரும் இந்த ஞான ஒளியால் சிறக்க வேண்டும்" என்று சிந்தித்து மலரை வைத்துக் கொள்ள வேண்டும்.

மலர் வைப்பது அலங்காரத்துக்கோ, ஆடம்பரத் துக்கோ அல்ல. இந்த நுட்பமான கருத்தை விளக்கும் புற அடையாளமாக அதை அணிய வேண்டும். **ஆண்கள் காதிலே பூ வைக்க உரியவர்கள். பெண்கள் சிரசிலே பூ வைக்க உரியவர்கள். ஏன்? இவன் உபதேசத்திற்கு உரியவன். அவர்கள் ஞானத்திற்கு உரியவர்கள். ஆண்கள் முதிராதவர்கள். பெண்கள் நிறைவானவர்கள். நிறைந்த ஒருவர் நிறையாத ஒருவரை நிறைவு செய்ய வேண்டும். அப்படி நிறைவு செய்வதனால் அவர்களைப் பழனம் அன்ன பல்வளைக்கே என்றார்.**

இப்படிப்பட்ட பழனம் அன்ன பல் வளைக்கு அல்குல் உண்டு, கொங்கை உண்டு, இடை உண்டு. இத்தனையும் வைத்து, போகத்தையும், யோகத்தையும், ஞானத்தையும், ஞானானந்தத்தையும் பெற வேண்டிய நீ அவமே புகல்கின்றாய் என்று சீவனின் நிலையைத் தெரிவித்து, தெளிவித்து, இந்தச் சீவனை, அந்த அருள் நிலையில் கலந்து கொள்ளுமாறு செய்கின்றார். இது அருளில் கலத்தல் என்ற நிலையாகும் என்று முடிவு செய்கிறேன்.

# 5. மகிழ்வில் கலத்தல்

முதல் நாள் காட்சி என்ற தலைப்பை எடுத்துக் கொண்டு பார்த்தோம். காட்சி என்றால் அறிவு பூர்வமாக ஒன்றைக் காணுவது. அப்படிக் காணுகின்ற பொருளிடத் -திலே ஐயுறல் இயல்பு. இதை ஐயம் என்ற தலைப்பிலே பார்த்தோம். ஐயம் வந்த பிறகு தெளிவு வரவேண்டும். இந்தத் தெளிவையும் பார்த்தோம். தெளிந்த பொருளை விரும்புதல் வேண்டும். நயத்தல் என்ற தலைப்பிலே அதனைப் பார்த்தோம். நயந்த பிறகு அதனை நாம் உட்கொள்ளுதல் வேண்டும். விரும்பிய பொருளை உண்ணாமல் இருக்கக் கூடாது. உண்ணுதல் வேண்டும். அப்படி உண்ணுகின்ற வகையில் மகிழ்ச்சியைத் தரும். ஆக இன்றைய தலைப்பு "மகிழ்வில் கலத்தல்".

இதன் உட் தலைப்பு உட்கோள். **உட்கோள் என்றால் உள்ளத்தால் கொள்ளுதல் அல்லது உணர்வில் உறைதல் எனலாம். நம்முடைய உணர்விலே எது உறைந்துவிடு கின்றதோ அதுதான் நினைக்குந்தோறும் மகிழ்ச்சியைத் தர வல்லது.** இதைக் கலந்து மகிழ்தல் என்ற தலைப்பிணைலே நாம் சிந்திக்க இருக்கின்றோம்.

அப்படிக் கலந்து மகிழ்தற்கு நாம் மட்டும் போதாது. நம்மோடு இன்னொரு பொருளும் கலக்க வேண்டும். அதைச் சுருக்கமாகச் சொன்னால், மனத்தால் கலத்தல், எண்ணத்தால் கலத்தல், உடலால் கலத்தல் என்று மூன்றாகக் கொள்ளலாம். இது சுருக்கமான கலப்பு. பெருக்கினால் விரியும். நாமெல்லாம் கலந்து பழகும்போது, கலந்து பழகுதற்குரிய ஏதேனும் ஒரு நலம் இருக்க வேண்டும், ஒரு குணம் இருக்க வேண்டும். நீங்கள் ஏதேனும் எனக்கு நன்மை செய்தால், அந்த நன்மையின் மூலமாகக் கலந்து பழக வேண்டும். "நீங்க எப்படிப் பழகுறீங்க

அவருகிட்ட" என்று கேட்டார்கள். வேறு எதில் ஒத்து வரவில்லையென்றாலும், காப்பி சாப்பிடுவதில் ஒத்து வருகின்றதுங்க என்பார். ஆக அந்த வகையிலே கலந்து பழக வேண்டும். "ஒன்று நன்று உள்ளக் கெடும்" என்பார் திருவள்ளுவர். ஒரு நலத்தைக் கொண்டு கலந்து பழகலாம்.

மணிவாசகப் பெருமான் காணுகின்ற தலைவி, அவர் எதிரிலே வந்து நின்றாள். அவளைத்தான் அவர் விரும்பினார். அப்படி விரும்பிய பெண்ணை உள்ளத்திற்குள் நிறைவு செய்து கொள்ளுகின்றார். அப்படி நிறைவு செய்து கொண்டு எண்ணி மகிழ்தல், சொல்லி மகிழ்தல், தொட்டு மகிழ்தல் என்று வைத்துக் கொள்ளலாம். இப்படியெல்லாம் மகிழ முடியுமா? நமக்கு எத்தனை புலன்கள் இருக்கின்றனவோ அத்தனை புலன்களாலும் அனுபவித்து மகிழலாம். நமக்கு ஐந்து புலன்கள் இருந்தால், அந்த ஐந்து புலன்களாலும் அனுபவித்து மகிழலாம். அதற்கு மேலும் கலந்து பழகலாம். இந்தப் புலன் சம்பந்தமில்லாமலேயே அறிவினால் கலந்து மகிழலாம். அன்பினால் கலந்து மகிழலாம். அருளினால் கலந்து மகிழலாம். சேவையால் கலந்து மகிழலாம். காணாமலேயே கலந்து மகிழலாம். காணாமலேயே கண்டு மகிழ்வது என்பது பெரிய மகிழ்ச்சி. திருவள்ளுவ நாயனார் சொல்ல வருகின்றபோது,

> "புணர்ச்சிப் பழகுதல் வேண்டா உணர்ச்சிதான்
> நட்பாம் கிழமை தரும்" (785)

உடல் கலந்து பழக வேண்டியதில்லை. உணர்ச்சி -யாலேயே கலந்து பழகினால் அது உயர்ந்த நட்பாகிவிடும் என்பார்.

மேடம் கியூரி அம்மையாரும், அவருடைய காதலரும் ஒருவரையொருவர், ஆயுட்காலம் வரையில் பார்த்துக் கொண்டதேயில்லை. ஆனால் ஒருவரைப் பற்றி மற்றவர் அறிந்து கொண்டிருந்தார்கள். இருவரும் ஒரே துறையில்

ஆய்வு செய்து கொண்டிருந்தார்கள். உணர்வு சம்பந்தமாகவே கலந்து, உனக்கு நான், எனக்கு நீ, என்று பழகியவர்கள். கடைசியாகக் கண்டு மகிழ்ந்தார்கள். இதிலிருந்து உடலால் நேருக்கு நேர் கண்டுதான் மகிழ வேண்டும் என்ற அவசியமில்லை.

ஆனால் மணிவாசகர் காணுகின்ற தலைவியோ, நேரில் வந்து நிற்கின்றாள். தூரத்தில் இருப்பதை விரும்புவதை விட, அதை மனதிலே உட்கொள்ளுவதை விட, எதிரிலே இருக்கின்ற பொருளைப் பார்த்து விரும்புவதும், அதை ஏற்று மகிழ்வதும் மிக எளிதான காரியம். அருமையாக இருக்கக் கூடிய செய்திகளை விடுத்த இறைவன், சராசரியாக இருக்கக் கூடிய நமக்கெல்லாம் மகிழ்வு தரவேண்டும் என்று எண்ணி, நம் முன்னே ஒரு வடிவத்தை நிறுத்திக் காட்டினான். ஒவ்வொருவருக்கும் தனித்தனியே ஒரு வடிவம் அப்படி நிற்கின்றது. அந்த வடிவம் ஆசாரியனாக இருக்கலாம், தாயாக இருக்கலாம், தந்தையாக இருக்கலாம். எல்லாவற்றிற்கும் மேலாக இருக்கின்ற ஒரு வடிவம் தாரம் என்ற வடிவம்தான். அதன் இன்றியமையாமை நமக்குத் தெரிதல் வேண்டும். உட்கொள்ளுதல், கலந்து மகிழ்தல், உணர்வில் உறைதல் ஆகியவை அதற்குரிய விளக்கங்கள்.

ஒரு குழந்தை பிறந்துவிட்டது. அது ஆணாகவும் இருக்கலாம், பெண்ணாகவும் இருக்கலாம். அந்தக் குழந்தை வளர்ந்துவருகின்ற போது அது என்ன கேட்டாலும் வாங்கித் தருகின்றனர் அதன் பெற்றோர்கள். வானத்து நிலவைக் கேட்டாலும் கொண்டு வந்து தருகின்ற தகுதிப்பாடுடையவர்கள். இப்படி அக்குழந்தையின் எல்லா ஆசைகளையும் நிறைவேற்றி வைக்கின்றவர்களால்.

ஒரு காலகட்டம் வருகின்றபோது, அந்தக் குழந்தைக்கு ஒன்றைச் செய்து வைக்க நேரிடும் போது முடியவில் லையே என்று வருந்துகின்றார்கள். அது என்ன?

எத்தனையோ பண்டங்களை வாங்கிக் கொடுத்து மகிழ்ச்சியைக் கொடுத்த தாய்தந்தையரால் ஒரு மகிழ்ச்சியை மட்டும் கொடுக்கவே முடியாது. அந்த மகிழ்ச்சி திருமண மகிழ்ச்சி. மண முடித்தாலன்றி அந்தக் குழந்தைக்கும் மகிழ்ச்சி ஏற்படு வதில்லை. பெற்றோர்க்கும் மகிழ்ச்சி ஏற்படுவதில்லை. அப்படியே இறைவனது நேர்நிலை சந்திப்பில்லாமல், இந்த ஆன்மாவுக்கு ஒரு மகிழ்ச்சி ஏற்படுவதில்லை. அதுதான் பெரிய மகிழ்ச்சி. அதிலே கலந்து கொள்ளுவது தான் பெரிய மகிழ்ச்சி. இறைவனது திருவடிக் காட்சிதான் இந்த உயிருக்குப் பெரிய மகிழ்ச்சி.

வள்ளல்பெருமான் அவர்கள் திருமணத்தைப் பற்றிச் சொல்லவரும் போது "மெய் அத்துவிதத் திருமணம் பரவும்" என்று மிகவும் அழகாகச் சொல்லுவார். அத்துவிதம் என்பதற்கு உங்களுக்கு எல்லாம் பொருள் தெரியும். **நீ வேறு, நான் வேறு என்று சொல்லாமல் இரண்டும் ஒன்று என்று திகழ்வதற்கு அத்துவிதம் என்று பெயர்.**

அந்த அத்துவிதம் மூவகைப்படும். ஒன்றாய் இருத்தல், உடனாய் இருத்தல், வேறாய் இருத்தல் என்று பகுப்பார்கள். அந்த அத்துவிதத்தைச் சைவப் பெருமக்கள் பேசுவார்கள். அப்படி இரண்டறக் கலந்து, மூன்று வகையினாலே பழகும் ஒரு பழக்கத்தை இறைவனிடமின்றி வேறு எங்கும் பார்க்க முடியாது. அதற்கு அடுத்தது, நம் முன்னே நிற்கும் ஒரு பெண்ணிடத்தில்தான் அப்படிப் பழக முடியும். அப்படிப் பழக நினைக்கின்ற போது, நமக்கு மட்டும் அப்படிப் பழகும் எண்ணம் இருந்தால் போதாது. அந்தப் பெண்ணுக்கும் நம்மேல் இரக்கம் இருக்க வேண்டும். அவளுக்கு நம்மேல் இரக்கம் இருந்தால்தான் அதை உட்கொள்ளுதலும் முடியும்.

நான் பேசுவதைக் கேட்க வேண்டுமென்ற விருப்பமே உங்களுக்கு இல்லாத போது நான் பாட்டிற்குப் பேசிக் கொண்டேபோனால் பயன் இருக்குமா? அது

உட்கொள்ளுதலும் ஆகாது. நீங்களெல்லாம் மகிழ்ந்து கேட்கும்போது நானும் மகிழ்ந்து சொல்லலாம். அது உட்கொள்ளுதலாகும். "தன்னிடத்தில் கருணை உண்டென்று அறிந்தது" என்பது பேரின்ப உரை. இந்தப் பெண்ணுக்கு என்மேல் கருணை இருக்கின்தென்று தலைவன் நினைக்கின்றான். இறைவனுக்கு என்மேல் இரக்கம் இருக்கிறதென்று சீவன் நினைக்கின்றான். ஆசாரியனுக்கு என்மேல் இரக்கம் இருக்கிறதென்று மாணவன் நினைக்கின்றான். அப்போது குருநாதனிடத்தில் பிரிவில்லாமல் பழகுதல் வேண்டும். யாரிடத்தில் பழகினாலும் இந்த மூன்று வகையான பழக்கங்களும் நமக்குத் தேவையாக இருக்கின்றன. **உடம்பால், உள்ளத்தால், உணர்வால் பழக வேண்டும், தூய்மையாகப் பழகுதல் வேண்டும். அது இந்த சீவனுக்குப் பெரும் நலத்தையும், பெரும் மகிழ்ச்சியையும் தரவல்லது.**

மகிழ்ச்சி என்பதினாலே பெருந்தலைப்பாகத் திகழ்வது "இயற்கைப் புணர்ச்சி" என்பது. இருவர் கலந்து பழகுவது எப்படி என்பதைத் திருவள்ளுவர் மிக அழகாக எடுத்துக் கூறுகிறார். இன்னும் தெளிவாகத் தெரிய வேண்டுமென்றால், இராமலிங்க அடிகளார் கூறுவதைப் பார்க்க வேண்டும். அவர் தனக்கு முன்னே ஒரு பெரியவரைப் பார்க்கின்றார். எத்தனையோ பெரியவரைப் பார்க்கிறார். அதில் மணிவாசகரைப் பற்றிப் பாடும் போது "வான்கலந்த மாணிக்க வாசக" என்று ஆசாரியருடைய தகுதியை நினைத்துப் பார்க்கின்றார். அவர் மற்ற பூதங்களில் கலந்து கொள்ளாமல் வான் பூதத்தில் கலந்து தூய்மையே வடிவமாக இருப்பதைப் பார்க்கின்றார். அதைச் சுட்டிக்காட்டுகிறார்.

**வான்கலந்த மாணிக்க வாசகநின் வாசகத்தை**
**நான்கலந்து பாடுங்கால் நற்கருப்பஞ் சாற்றினிலே**
**தேன்கலந்து பால்கலந்து செழுங்கனித்தீஞ் சுவைகலந்தென்**
**ஊன்கலந்து உயிர்கலந்து உவட்டாமல் இனிப்பதுவே**

அப்போது அந்தக் குருநாதனின் மொழியைக் கேட்ட அளவிலே எப்படியெல்லாம் உள்ளே கலந்துவிடுகின்றது என்று சொல்லுகிறார். கலப்பு பலவகைப்படும் என்று தெரிந்து கொள்ள வேண்டும். அப்படிக் கலந்து மகிழ்வதையே இங்கே தலைப்பாக எடுத்துக் கொள்ள வேண்டும். ஒரு ஆசிரியரிடத்தில் இலக்கியத்தைப் படித்தால் ஓரளவுக்குத் தெரியும். அந்த இலக்கியத்திற்கு அரண் செய்கின்ற இலக்கணம் தர்க்கம் முதலான அனைத்தும் அதனோடு பயிலுதல் வேண்டும். அனைத்தையும் பயிற்றுவிக்காமல் ஒன்றை மட்டும் பயிற்றுவிப்பாரேயானால் அவருக்கு வகுப்பாசிரியர் என்று பெயர். எல்லாப் பாடங்களையும் ஒருவர் சொல்லிக் கொடுத்தால் அவருக்குப் பேராசிரியர் என்று பெயர். பேருக்கு ஆசிரியர் அல்ல. பேராசிரியர். அப்படி எல்லா வகையிலும் பயிற்றுவிக்கின்ற ஆசிரியனை இங்கே மணிவாசகப் பெருமான் தன் முன்னால் காணுகின்றார்.

புணர்ச்சிப்பத்து என்ற திருவாசகத் தலைப்பிலே, கண்டு கலந்து மகிழ்கின்றார், கேட்டுக் கலந்து மகிழ் -கின்றார், உண்டுகலந்து மகிழ்கின்றார், உயிர்த்துக் கலந்து மகிழ்கின்றார். இப்படி ஐந்து புலன்களாலும் கலந்து மகிழ்கின்றார் மணிவாசகப் பெருமான். இதனைத் திருவள்ளுவ நாயனார்,

> **கண்டுகேட்டு உண்டுஉயிர்த்து உற்றறியும் ஐம்புலனும்**
> **ஒண்டொடி கண்ணே யுள.** *(1101)*

கலப்பிலே வேறு வேறு கலப்பு உள்ளது. வித்தியாசம் உள்ளது. இப்படி விளக்கம் சொல்லுவது பின்னாலே இந்தப் பாடலுக்குத் தெளிவு படுத்துவதற்காக. ஒரே வகையாகக் கலந்து கொள்ளுவதினாலே பயன் இருக்காது. ஒரு உணவு சுவை படவேண்டுமானால், ஒரே சுவையை மட்டும் உண்டால் சுவையாக இருக்காது. அறுசுவையும் இருக்க வேண்டும். அப்படியே புலன் களாலே

அளவாகக் கலந்து கொள்ள வேண்டும். அந்தக் கலத்தல் எப்படி இருக்க வேண்டும்? ஒன்றை விரும்பிக் கேட்கும்போது, அது அந்தச் சுகத்தைத் தருவதாக இருக்கவேண்டும். ஆசாரியனை நினைத்து வணங்கி, எனக்கு இந்தச் செய்தி தெளிவு வரவில்லையே என்று நினைத்தால் தெளிவு வரவேண்டும். அது இலக்கணமாக இருந்தாலும் சரி, இலக்கியமாக இருந்தாலும் சரி, தர்க்கமாக இருந்தாலும் சரி, உலகியலாக இருந்தாலும் சரி, வேறு எந்த இயலாக இருந்தாலும் சரி, என் ஆசாரியனை நினைத்த அளவிலே என் உள்ளத்தில் என்னென்ன தெளிவு ஏற்பட வேண்டும் என்று எண்ணினேனோ அந்தந்தத்தெளிவு வர வேண்டும். அப்படி வந்தால்தான் நாம் கலந்து மகிழ்தலுக்கு ஏற்ற பொருளாக அது உள்ளது என்று பொருள்.

**"வேட்ட பொழுதின் அவை அவை போலுமே" (1105)**

நீங்கள் என்ன சுகம் வேண்டினீர்களோ, அந்தச் சுகம் அங்கே கிடைக்கும். விரும்பிய நலம் அங்கே அமைகின்றது. மனோரஞ்சிதம் போல் நினைத்தவண்ணமெல்லாம் நலம் கிடைக்கும். நினைக்கின்ற எண்ணங்களையெல்லாம் புதிது புதிதாகத் தரும். அதனால்தான் கலந்து கொண்டால், அனைத்து நலங்களும் உண்டு என்று எண்ணி மகிழ்கிறான்.

இப்படி இருவரும் இருப்பதால் இருவரில் யாருக்கு மகிழ்ச்சி? அந்த ஆணுக்கா, பெண்ணுக்கா? இருவருக்குமே மகிழ்ச்சியாகத்தான் இருக்கும். சரி, ஒரு ஆசாரியனும் மாணவனும் கலந்து பழகுகின்றார்கள். அந்தப் பழக்கத்தால் ஆசாரியனுக்கு நலமா, மாணவனுக்கு நலமா? இவனை மாணவனாக ஏற்றுக் கொள்ள வேண்டும் என்று ஆசாரியன் நினைக்கின்றான். இவர்தான் தக்க ஆசிரியன் இவரை நாம் உட்கொள்ள வேண்டும் என்று மாணவன் நினைக்கின்றான். இருவரும் விரும்பினால் யாருக்கு நலம்? இருவருக்குமே நலம். மாணவர்களே இல்லையென்றால்,

ஆசாரியன் இருந்தும் பயனில்லை. ஆசாரியனே இல்லை -யென்றால், மாணவர்கள் இருந்தும் பயனில்லை.

மாணவன் மாட்சிமையைத் தேடிக் கொள்ள உள்ளவன். ஆசாரியன் அறியாமையைப் போக்கி, அறிவை ஊட்ட வல்லவன். இருவருமே கொடுக்கக் கொள்பவர்கள்தான். ஆசாரியன் அறிவைக் கொடுக்கின்றான். மாணவன் அதனை ஏற்றுக் கொள்ளுகின்றபோது, மகிழ்ச்சியை ஆசாரியன் பெற்றுக் கொள்ளுகின்றான். கொள்ளுதலும் கொடுத்தலும் இரண்டுபக்கத்திலும் ஒரே வகையாகத்தான் நிகழும். **இந்த உலகத்தில் கொள்ளுதலும் கொடுத்தலும் இல்லையென்றால் இந்த உலகமே சூன்யமாகத்தான் இருக்கும். அதனால் தான் திருவள்ளுவர்**

**"மேலுலகம் இல்லெனினும் ஈதலே நன்று"** **(222)**

என்றும்,

**"ஈத்துவக்கும் இன்பம் அறியார்கொல்"** **(228)**

என்றும் சொல்லுகிறார்.

**"தம்மில் இருந்து தமதுபாத்து உண்டற்றால் அம்மா!.."**
**(1107)**

அந்த ஈகையாகிய தன்மை இரண்டு பக்கமும் நிகழ்கின்றது. உயர்ந்தார் இடத்திருந்து, கீழே இருப் -போருக்கும் கிடைக்கின்றது. கீழேயிருப்போரிடத்திருந்து மேலே இருப்போருக்கும் கிடைக்கின்றது.

**"வீழும் இருவர்க்கு இனிதே வளியிடை**
**போழப் படாஅ முயக்கு"** **(1108)**

இருவர் இனிதே கலந்து பழகுகின்றபோது, இருவர்க்கும் இடையில் காற்றுக் கூடப் போகக் கூடாது என்பது பொதுவான கருத்து. இருவர் எண்ணத்திற்கும் நடுவே அதாவது, நினைப்பிற்கும் நினைப்பிற்கும் இடையே காற்றுக் கூடபோகக் கூடாது. இப்படிக் காற்றும்

இடை போகக் கூடாது என்பதை மிகவும் நுட்பமாகச் சொல்லுகிறார். சிறு அசைவுகூட இருக்கக்கூடாது. அப்படிக் கலந்து பழகினால் அவன்தான் ஆசாரியன்; இவன் தான் மாணவன்.

காற்று சலனத்திற்கு இடமாகச் சொல்லப்படுவது. அதனால்தான் காற்று இடைபோகக் கூடாது என்று குறிப்பிடுவார் திருவள்ளுவர். நம்மை விட விஞ்சி விடுவானோ மாணவன் என்று ஆசாரியன் சலனப் படக்கூடாது. நான் ஆசாரியனைவிட மேலானவன் என்ற அகங்காரம் மாணவனுக்கு வரக்கூடாது. அவனருளாலே நமது சிந்தனைகள் வெளியாகும்.

உதாரணத்திற்காக இதைச் சொல்லுகிறேன். பெருமிதமாகவும் சொல்லுகின்றேன். என்னுடைய ஆசிரியரிடத்தில் பல மாணவர்கள் படித்ததுண்டு. அவர் சுட்டிக்காட்டிய ஒரே மாணவன் நான்தான். பிணக்குப் பட்டதும் என்னிடத்தில்தான். கடைசியாகச் சுட்டிக் காட்டியதும் என்னைத்தான், பெரிதாக எண்ணியதும் என்னைத்தான். "என்னுடைய சிந்தனைகளையோ, என்னுடைய கோட்பாடுகளையோ, அல்லது என்னுடைய வழியிலேயோ இந்தச் சமுதாயத்திற்குப் பணிகள் செய்யத் தேமொழியாரைத் தவிர வேறு மாணவர் இல்லை" என்று சொன்னார். மற்றவர்கள் எல்லாம் ஏதேதோ தொழில் செய்து தங்கள் வாழ்க்கையை உயர்த்திக் கொண்டார்கள். எனக்கு இதுதான் தொழிலாகப் போய்விட்டது.

ஆயிரம்பேர் மாணவராக இருந்தாலும், எல்லோரும் சிறந்த மாணவராக ஆகிவிட முடியாது. இராம கிருஷ்ணருக்கு எத்தனையோ மாணவர்கள் இருந்தார்கள். ஆனால் ஒரு விவேகானந்தராக ஆக முடியவில்லை. அப்படித்தான் எத்தனையோ பேர் பேசலாம், பழகலாம், அத்தனைபேர் இருந்தாலும், தன்னை மணந்து கொண்ட மனைவிக்கு ஈடாக, ஒப்பாக வேறு ஒருவர் இருக்க முடியாது.

தனக்கு உரியவர்தான் உரியவர். மற்றவர்கள் எல்லாம் அப்படி உரிமை கொள்ள முடியாது. எத்தனையோ அதிதெய்வங்கள் இருந்து நலம் புரியலாம். அவர் தேவர், இவர் தேவர் என்று இருக்கலாம். ஆனால், எல்லாம் வல்ல பரம்பொருளுக்கு ஈடாக ஆக முடியாது. அப்படி எல்லாவற்றிற்கும் ஒரே பரம்பொருள்தான் உண்டு என்று நயத்தல் – அதை உட்கொள்ளுதல்.

விவேகானந்தர் அமெரிக்காவில் பல இடங்களில் பேசினார். அப்படிப் பேசுகின்றபோது எந்த இடத்திலும் இராமகிருஷ்ணரைக் குறிப்பிட்டுச் சொல்லவேயில்லை. இதைக் குறிப்பிட்டு இராமகிருஷ்ணரின் மாணவர்கள் குருநாதனிடம் தெரிவிக்கின்றார்கள். அப்போது இராம கிருஷ்ணர் சொல்லுவார். "அவன் எங்கே பேசினான், நானல்லவோ அங்கெல்லாம் பேசுகிறேன்" என்று. எந்த அளவுக்கு உயர்ந்திருக்கிறார். இதுதான் வளியிடை போழப்படா முயக்கு என்பது. அவர் அங்கே குருநாதனை எண்ணித்தான் பேசிக் கொண்டிருக்கிறார். அதைச் சொல்லித்தான் ஆக வேண்டும் என்ற அவசியம் இல்லை. இருவரும் இடைவெளியே இல்லாமல் கலந்து நிற்கின்றார்கள். அந்த நிலையிலே என்னத்தைச் சொல்லுவது! சொன்னால் மறந்தார் என்று அர்த்தம். மறந்தால்தானே சொல்லுவதற்கு! இப்படியெல்லாம் உட்கொண்டு பழகுதல் வேண்டும்.

இந்தப் பெண்ணை ஆசாரிய மூர்த்தமாகக் காணுகின்றார் மணிவாசகர். உலகியலாகப் பழகும் போது அந்தப் பெண்ணிடமிருந்து ஒரு இன்பம் கிடைக்கின்றது. அந்த இன்பம் ஒரு முறை அறிந்தாலும் மீண்டும் மீண்டும் அறியத்தக்கதாக அமைகின்றது. இதனை "அறிதோறும் அறியாமை" என்று திருவள்ளுவர் சொல்லுவார். ஒரு நூலைப் படிக்கின்றான் ஒரு மாணவன். ஒரு கருத்துத் தெளிவாகின்றது. மீண்டும் படிக்கின்றான். அப்போது

ஒருகருத்து விளக்கமாகின்றது. மீண்டும் படிக்க மற்றொரு நயம் தெரிகின்றது. இதை

**"நவில்தொறும் நூல் நயம்போல்"** *(783)*

என்பார்.

ஒரு நூலைப் படிக்கும் போதெல்லாம், அதில் ஒரு நயம் வெளிப்பட்டுத் தோன்றுவதுபோல, பெண்ணும் இருக்கின்றாள் என்று சொல்லுகின்றார். பழகுந்தொறும் பழகுந்தொறும், இனி அறிய வேண்டிய நலங்கள் எத்தனையோ இருக்கின்றன, அறிந்து கொள்ள வேண்டிய புதினம் எத்தனையோ இருக்கின்றது. அப்படி ஆசாரியனும் இருத்தல் வேண்டும். நேற்று படிப்பித்தான். இன்றும் படிப்பித்தான். அப்படிப் படிப்பிக்கும் போது நேற்று சொன்னதையே சொல்லிக் கொண்டிருக்கக் கூடாது. இரண்டொரு கருத்துக்களேனும் புதிதாகச் சொல்ல வேண்டும். அப்போதுதான் அது புதிது எனப்படும். அறிதோறும் அறிவாக இருக்க முடியும். இதை நேற்று நான் அறியாமல் போனோமே என்று மாணவன் எண்ணுமாறு போதனை இருக்க வேண்டும். **மாணவனுக்கு ஆசிரியனிடம் ஈடுபாடு இருந்தாலே போதும். அந்த அருமைப்பாடு ஆசிரியனிடமிருந்து வெளிப்படும்.**

நமக்கு எத்தனையோ துன்பங்கள் இருக்கின்றன வாழ்நாளிலே. அந்தத் துன்பங்களுக்கெல்லாம் மருந்தாகவும் அவன் அமைகின்றான். துன்பத்தைச் செய்து கொண்டிருக்கின்ற துன்பம் இருக்கின்றது. அந்தத் துன்பத்தைக் களைபவனாகவும் இருக்கின்றான். அந்தத் துன்பம் நீங்கிய பின்பு, ஆறுதல் தருபவனாகவும் இருக்கின்றான். நம் உடம்புக்கு நோய் வந்துவிட்டால் எங்கேனும் மருந்தை வாங்கி உண்டுவிடலாம். ஆனால் சில நோய்க்கு மருந்து இருக்காது. அதுவே மருந்தாக அமையும்.

**"பிணிக்கு மருந்து பிறமன் அணியிழை**
**தன்நோய்க்குத் தானே மருந்து".** *(1102)*

எதிரிலே நின்ற பெண்ணானவள் முதலிலே பெரும் துன்பத்தை ஏற்படுத்திவிட்டாள். இந்த பெண்ணிடத்து நலங்களைப் பெற்ற பிறகு வேறு பெண்களைப் பார்க்கவே மனமில்லை. இனி எந்த நலங்களையும் இவளிடத்திலே தான் பெற வேண்டும். எனக்கு எழுகின்ற வேட்கைகள், உணர்வுகள் அத்தனைக்கும் அவள்தான் மருந்தாக வேண்டும். உடல் சம்பந்தமான நோய்களுக்கு மருந்துகள் வேறு இருக்கின்றன. **இது உயிர் சம்பந்தமான நோய். அதற்கு அவள்தான் மருந்து.** ஆசாரியனும் அப்படித்தான். அவன், இது ஆணவம், இது கன்மம், இது மாயை என்று சுட்டிக் காட்டுகின்றான். நுட்பமாகப் பார்வையாலும், மொழியாலும், தோற்றத்தாலும் சுட்டிக் காட்டுகின்றான். அறிந்த மாணவன் துன்பப்படுகின்றான். அப்படி ஆசாரியன் **தந்த நோய்க்கு அவ்வாசிரியனே மருந்தாகித் தீர்க்க வேண்டும். உண்மையைச் சொன்னாலே யாருக்கும் துன்பமாகத்தான் இருக்கும்.**

**அவளிடத்தில் கருணை இருக்கின்றது. அதை எப்படி நாம் பயன்படுத்திக் கொள்ளுவது என்ற எண்ணமே உட்கொள்ளுதல் ஆகும்.** சிவமாகிய பரம்பொருளுக்கு என்னிடத்திலே கருணை உண்டு என்ற எண்ணத்தினால் இத்தனை சிந்தனையும் வந்தது. இதற்கு அவரே ஒரு பாடலைச் சொல்லுகின்றார். அதையும் பார்ப்போம்.

## உட்கோள்

**அணியும் அமிழ்தும்என் ஆவியும் ஆயவன் தில்லைச்சிந்தா**
**மணியும்ப ராரறி யாமறை யோனடி வாழ்த்தலரிற்**
**பிணியும் அதற்கு மருந்தும் பிறழப் பிறழமின்னும்**
**பணியும் புரைமருங் குற்பெருந் தோளி படைக்கண்களே**

இப்போது உட்கொண்டது கண்களினாலேதான். ஒவ்வொரு நேரமும் ஒவ்வொரு காரணத்தை முன்வைத்து அதைச் சொல்லுவார்கள். "இல்லை, இதனைப்

பாட்டுக்காக வைத்திருக்கிறார்" என்று சொல்லக் கூடாது. அது நம் அறியாமையைக் குறிக்கும்.

திருவள்ளுவர் இன்பத்துப் பாலில் சொல்லிக் கொண்டு வருகின்ற போது, "கண்டு கேட்டு." என்றே ஆரம்பிக்கிறார் ஒரு திருக்குறளை. கண்டு என்பது கண்ணுக்குத்தான் ஆதாரம். கண் என்பது காட்சிக்குரியது. இது இல்லறத்தாற்குரிய, வாழ்வியலார்க்குரிய முதல் காட்சி. அது நெருப்பை ஆதாரமாகக் கொண்டு உருவங்களைப் பார்க்கின்றது. நெருப்பு தூய்மை.

நீ காண்பதெல்லாம் தூய்மையாகக் காண வேண்டும். நாம் பார்க்க ஆரம்பிக்கும் போதே தூய்மையானதையே பார்க்க வேண்டும். அதனால்தான் பார்வையைக் கண்ணிலே வைத்தார். ஆனால் நீத்தார் பெருமையைச் சொல்லிக் கொண்டு வரும் போது, "சுவை, ஒளி..." என்று ஆரம்பிக்கிறார். அவருக்கு என்ன இலக்கணமா தெரியாது? ஏன் அப்படி ஆரம்பிக்கிறார். எல்லாம் துறந்தவர்களுக்கு, சுவை அடக்கம் (நாவடக்கம்) இன்றியமையாதது. அது சுவையானாலும் சரி, பேச்சானாலும் சரி அடக்கம் வேண்டும். முதலில் சுவையை அடக்க வேண்டும். **கண்டதைச் சாப்பிடாதே. அப்படிச் சாப்பிட்டால் சாப்பிட்ட பொருளுக்கு ஏற்றவாறு சொற்கள் வெளிப்படும்.** மது அருந்திய ஒருவனால் நாவைக் கட்டுப்படுத்த முடிகின்றதா? முடியாது. அதனால் தான் துறவிகளுக்கு நாவடக்கத்தைச் சொன்னார். அவர்களுக்கு அது தான் மிகவும் முக்கியம். நம்மை உயர்த்துவதும், தாழ்த்துவதும் வாக்கு.

**"ஆக்கமும் கேடும் அதனால் வருதலால்**
**காத்தோம்பல் சொல்லின்கண் சோர்வு" (642)**

**ஆக்கம் என்பது வீடுபேறு. கேடு என்பது பிறப்பு. பிறப்பும் பிறவாமையும் சொல்லினாலே அமைகின்றது.** நான் இப்படித்தான் சொல்லுவேன் என்று சிலருக்கு

எண்ணம் வரும். வள்ளல் பெருமான் ஆக்கத்தை வீடுபேறு என்றே சொல்லுகிறார். ஞான நூல்களுக்கு ஞான நூல்களிலிருந்தே விடையும், அதைக் கொண்டே உரையும் சொல்லவேண்டும் என்பது என் எண்ணம். ஞானிகளுடைய நூல்களுக்கு நாம் உரை சொல்லுவதை விட, ஞானிக்கு ஞானி என்ன பேசிக் கொள்ளுகிறார்கள் என்று பார்க்க வேண்டும்.

***"தூக்கமும் துயரும் அச்சமும் இடரும்***
***தொலைந்தன தொலைந்தன எனைவிட்டு***
***ஏக்கமும் வினையும் மாயையும் இருளும்***
***இரிந்தன ஒழிந்தன முழுதும்***
***ஆக்கமும் அருளும் அறிவும் மெய்யன்பும்***
***அழிவுறா உடம்பும் மெய் இன்ப***
***ஊக்கமும் எனையே உற்றன உலகீர்***
***உண்மை இவ்வாசகம் உணர்மின்"*** ***(5455)***

ஆக்கம் என்னை வந்தடைந்தது என்றே சொல்லுகிறார். வீடுபேறு என்ற பொருளில் குறிப்பிடு கின்றார். இனி திருவள்ளுவரே "ஆக்கம் அதர்வினாய் செல்லும்" (594) என்ற குறளில், வீடுபேறு தருவதற்காக இறைவன் வழிகேட்டுக் கொண்டு வருகிறான் என்கிறார். உலகத்திலே மிகப் பெரிய கேடு மரணம்தான். இப்படிப் பல நிலைகளில் பார்க்கலாம்.

கண் என்பது ஒரு இன்றியமையாத கருவியாக இருக்கின்றது. ஆக ஆசாரியனுக்குப் பார்வைதான் மிகவும் முக்கியம். அவன், பார்வையினாலே மாணவனைத் தூய்மை செய்வான். பெண்களுக்குப் படை கண்கள்.

"படைக்கலமாக உன் நாமத்து எழுத்து அஞ்சு என் நாவில் கொண்டேன்" என்று நம் பெரியவர்கள் சொல்லு வார்கள். அப்படி இருந்தால்தான் ஆசாரியனாக இருக்க முடியும். ஐந்தெழுத்து என்ற படையை நாவிலே தாங்கி,

அதனால் எத்துன்பத்தையும் ஓட்ட வல்லார் யாரோ அவர்தான் குருநாதனாக இருக்க முடியும். அவரை நீங்கள் பார்க்கவே வேண்டாம். அவர் பெயரைச் சொன்னாலே, நீங்கள் வீடுபேறு அடைந்துவிடலாம். அப்படிச்சொல்லிப் பதம் பெற்றவர் ஒருவர் இருக்கின்றாரே அவர்தான் அப்பூதியடிகள். குருநாதன் என்றால் சாதாரணம் அல்ல. அதனால் அவன் கண்கள் படைக் கண்கள் என்று சொல்லுகின்றார். இந்தக் குருநாதர்கள் எல்லாம் கொஞ்சம் எட்ட எட்டப் போகின்றவர்கள். ஆனால், எப்போதும் துணை வருகின்ற குருநாதன் மனைவிதான். அவளைப் பெண் என்றும் சொல்லலாம். குருநாதன் என்றும் சொல்லலாம். இறைவன் என்றும் சொல்லலாம். இறைவன் - சீவன்; ஆசிரியன் - மாணவன்; தலைவன் - தலைவி என்று வந்துவிடும். இத்தனைக்கும் இடமாக இருக்கின்றது அது.

அத்தகு படைக்கண்கள் எனக்கு அணி செய்து கொண்டிருக்கின்றன. என் உடலுக்கு அணியாக இருக்கின்றது அவளது பார்வை. என்னுடைய உடல் மேல் இருக்கின்ற இழிந்த தன்மைகளை அகற்றி, மாயையாலான இந்த உடம்பில் ஏற்பட்டிருக்கும் இழிவை அகற்றித் தூய்மை செய்தது. அதனால் அவளது படைக் கண்கள் எனக்கு அணியாக இருக்கின்றது. என்னுடைய உயிருக்கும், உயிர் தழைக்கும் பண்பை மேம்படுத்தி, காமாதி அறுபகைகளை அகற்றி, அன்பாதி நலங்களைப் புகட்டுவதினாலே அவை படைக் கண்கள். அவளே அமிழ்தமாக இருக்கின்றாள். என் உயிருக்குள்ளே உணர்ச்சியாக இருந்து, ஐயுணர்வும் தவிர்த்து, மெய்யுணர்வாக இருந்து விளங்குவதனாலே என் ஆவியும் படைக் கண்களே. இதை மூவகையாகப் பார்க்கலாம். அணியும் படைக் கண்களே! அமிழ்தமும் படைக் கண்களே! என் ஆவியும் படைக் கண்களே! அவளில்லாமல் நானில்லை. இந்த மூன்று வகையாலும்

**எனக்கு நன்மை செய்திருக்கின்றாள். அவள் தில்லை சிந்தாமணி.**

சிந்தாமணி என்பது கேட்டதைத் தரும் என்று சொல்லியிருக்கின்றார்கள். எனக்குச் சொன்னவர்களும் எனக்குக் காட்டவில்லை. நானும் அதைப் பார்த்தது இல்லை. மணி - ஒளி. **சிந்தாத ஒளியைத் தன்னகத்தே கொண்டது தில்லை. எல்லா ஒளியும் சிந்திவிடும். போய்விடும். அந்த ஒளி சிந்தாது. எவ்வளவு ஒளி இருந்தாலும் அப்படியே இருக்கும்.**

தில்லையில் இருக்கின்ற பெருமானை வாழ்த்தாத -வர்கள் படுகின்ற துன்பம் போல அவளுடைய கண்கள் இப்படியும், அப்படியுமாகப் பிறழ்ந்து பிறழ்ந்து பார்த்துக் கொண்டிருக்கின்றன. இது மிகவும் அதிசயமான செய்தி. உண்மையைச் சொல்ல வருகின்றார். அதைக் கண்களை வைத்தே பேசுகின்றார். இது கடவுள் நம்பிக்கை உடையார்க்கு மட்டும் சொல்லுவது அல்ல. சிந்தனை உடைய அனைவர்க்கும் சொல்லப்பட்டது.

தில்லை - தூய வெளி. அதில் அடிப்படையான அனைத்தும் அங்கே இருக்கின்றது. எல்லா நலங்களையும் வழங்கும் அடிப்படை அங்கே இருக்கின்றது. அதனால்தான் அங்கே அடி இருக்கிறது. வான் என்ற தில்லையிலே எல்லாவற்றிற்கும், எல்லா நிலைக்கும், எந்த அண்டத்துக்கும் ஆதாரமாய், அவற்றிற்கு எல்லாம் வழங்கும் அடிப்படை அங்கே இருப்பதனாலே அதற்கு அடி என்று பெயர். அடி, அடு, அடுத்தாரை அடிப்பது. **அடி என்றால் பக்குவப்படுத்துவது.** தில்லை சிந்தாமணியை உம்பராலும் அறியமுடியாது. மறையோன் என்றால் மறைக்கு முதல்வன் என்றும், மறைவாக இருப்பவன் என்றும் சொல்லலாம். அவனுடைய அடியை அவர்களால் அறிய முடியாது.

பிறழப் பிறழ மின்னும் படைக் கண்களே – பிறழ என்பதை இரண்டு முறை சொல்லியிருக்கிறார். **தில்லையைத் தொழாதார்க்குத் தூய்மை இல்லை. உயிர்த்தூய்மையும், உடல் தூய்மையும் வாராது. தில்லை என்பது நான் முன்னமே சொன்னதுபோல ஒரு இடமல்ல. தில்லை என்பது ஞானம். தில்லையைத் தொழுவது என்றால் ஞானத்தைத் தொழுவது என்று பொருள்.** தூய வெளியிலே தூய்மையே வடிவாக இருக்கின்ற இறைவனது ஞானத்தைத் தொழுது, ஞானத்தைப் பெற வேண்டும்.

**"ஞானத்தால் தொழுவார் சில ஞானிகள்**
**ஞானத்தால் தொழுவேன் உனை நானலேன்**
**ஞானத்தால் தொழுவார்கள் தொழக் கண்டு**
**ஞானத்தாய் உனை நானும் தொழுவேனே"**

ஞான வெளியாக இருக்கின்ற அதை, யார் பணிகின்றார்களோ, அவர்கள் உள்ளத்தில் தூய்மை நிலவுகிறது; அமைதி நிலவுகின்றது; அழுக்கற்று நிற்கின்றார்கள். அதனாலே சினம் எழாது; காமம் தோன்றாது; பிற பிற எண்ணங்கள் வராது. அப்படி வராமையினாலே உடற் பிணியுமில்லை; உயிர்ப் பிணியுமில்லை. அது எப்படி என்று வினவுவார்க்கு, அப்படி அவர்கள் ஞானவெளியிலே நின்று அமைதியுற்ற பிறகு அவர்களுக்கு ஆத்திரம் வராது.

அமைதி இருக்கின்ற இடத்திலே உணர்ச்சி வராது. அமைதியில் ஒரு பேருணர்ச்சி இருக்கும். அது அருளுணர்ச்சி. அமைதி அற்ற இடத்திலே உணர்ச்சி இருக்கும். அதனால் ஏக்கம் பிறக்கும். அது உடற்பிணியை உண்டாக்கி விடும். உடற் பிணியையும், உயிர்ப் பிணியையும் அறுக்கின்ற இடம் எதுவோ அந்த இடந்தான் தில்லைச் சிந்தாமணி. அது தில்லையில் விளங்குகின்ற திருவடி. அந்தப் படைக் கண்கள் என்னைப் பார்க்கும் போது முன்னே தெரிவித்த மூன்று வகையினாலே

மட்டுமல்ல, இந்தப் பிறவியாகிய உடலையும் நீக்கி, இனிப் பிறவா நெறியாகிய உயிர்த் துன்பத்தையும் நீக்க வல்லது. அதனால் பிறழப் பிறழ மின்னும் என்று சொன்னார்.

இறைவனுடைய படைப்பிலே இத்தனையும் இருக்கின்றது. நமக்கு இந்தப் படைப்பின் அருமையும் தெரிவதில்லை. அதனாலே, இதைப் பயன்கொள்ளவும் முடிவுதில்லை. படைப்பின் அருமைகளைத் தெரிந்து கொண்டு, பயன் கொள்ள வேண்டும். ஏதாகிலும் ஒரு பொருளை எடுத்துப் பாருங்கள். அப்போது அதன் அருமையும், பயன் இன்னது என்றும் தெரிய வரும்.

சாதாரணமாக ஒரு முருங்கை மரத்தை எடுத்துக் கொள்ளுங்கள். அதன் பட்டையை வெட்டி, வெற்றிலையிலே வைத்து மடித்துக் கொடுத்தால் ஐந்து மணித் துளிகளிலே தேள் கொட்டிய நஞ்சு இறங்கிவிடும். இறைவனுடைய படைப்பில் உள்ள அற்புதங்களைச் சொல்லுகிறேன். நம்முடைய உடம்பிலே உள்ள ஒவ்வொரு கருவியும் அற்புத ஆற்றல் மிக்கது என்பதைத் தெரிவிக்கவே இதைச் சொல்ல வருகிறேன். முருங்கைக் கீரையைப் புரட்டித் தாய் மார்களுக்குக் கொடுத்தால் பால் நன்றாகச் சுரக்கும். பட்டையை உண்டால் பால் கிடைக்காது. கீரையை உருவிய பின் ஈர்க்கு இருக்கின்றதே, அதை இடித்து, இரவு அடுப்பிலே போட்டு வேக வைத்து, மறுநாள் பூண்டு, மிளகு சேர்த்து ரசம் வைத்துச் சாப்பிட்டால் தமர் வாய்வு கலைந்து விடும். முருங்கைப் பிஞ்சை வேகவைத்துப் பால் ஊற்றிக் கடைந்து அந்தச் சாற்றைச் சாப்பிட்டால் இளமை நிலைபெறும். முதிர்ந்த முருங்கைக் காயைச் சாப்பிட்டால் தமர் வாய்வு வரும். இப்படி ஒவ்வொரு பொருளிலும் ஒரு பயன் இருக்கின்றது. ஆக இப்படி ஒவ்வொரு பாகமும் ஒவ்வொரு பயனைத் தருவதால், அதனை எப்படிப் பயன் கொள்ளுவது என்பதைத் தெரிந்து கொள்ளவேண்டும்.

இறைவன் படைப்பு லேசானது அல்ல. ஆகையால் நம் முன்னே வந்து நிற்கின்ற எந்த ஒரு மக்களும் சாதாரணமானவர்கள் என்று எண்ணிவிடக் கூடாது. அவர்கள் இடத்தில் எத்தன்னையோ நலங்கள் இருக்கின்றன. அந்த நலங்களைப் பயன் கொள்ளத் தெரியாமல் விட்டுவிடுகின்றோம். அதிலே நமக்கு அணுக்கமாக வந்து, இந்த உயிருக்குப் பயன்படக் கூடிய வகையிலே ஒரு பொருளை வைத்து இருக்கின்றான். ஆகையாலே இந்தப் படைக் கண்கள், அமிழ்தமாகவும் அணியாகவும், ஆவியாகவும் இருக்கின்றது என்றும், உடற்பிணியும், உயிர்ப்பிணியும் போக்கும் உயர் ஒளியாக இருக்கின்றது என்றும் இந்தப் பாடல் நமக்குப் பொதுவகையாக விளக்கியிருக்கிறது.

பிணி - கண்டவுடன் பிணித்தல். பிணியை உண்டாக்குவது.

இதற்கு முன்னே எனக்கு எல்லாம் தெரியும் என்று இருந்தேன். யாராவது உணர்த்திய பின்பு எனக்குத்துன்பம் வந்துவிடும். என்னுடைய அனுபவத்தை இங்கே சொல்லுகிறேன். இளமையிலேயே எனக்கு இயற்கையாக எழுதும் ஆற்றல் இருந்தது. எதையேனும் கண்டுவிட்டால் உடனே உட்கார்ந்து எழுதுவேன். பத்து ஆண்டுகளுக் -குள்ளேயே க்விதை எழுதும் ஆற்றல் இருந்தது. அப்படி நிறைய எழுதி வைத்திருந்தேன். பரலி சு. நல்லியப்பர் அதை எடுத்துக்கொண்டு வெளியிட வேண்டும் என்று முனைந்தார். அதற்கு ஒரு முன்னுரை வாங்க வேண்டும் என்று சொல்லிக் கொண்டிருந்தார். அதற்காகத் தான் என் ஆசிரியரைப் பார்க்க வேண்டி வந்தது. கொண்டு வாருங்கள், பார்த்துப் படித்துத், திருத்தி, முன்னுரை எழுதித் தருகிறேன் என்று சொன்னார்கள். "என்னது! என்

பாட்டை இவர் திருத்துவதா?" என்று முனைப்பினால் அப்படி எண்ணினேன்.

ஏன் அந்த எண்ணம் வந்தது என்று உங்களுக்கெல்லாம் சொல்லுகிறேன். எனக்கு ஊக்கமாகப் படிக்க மிகவும் உபகாரமாக இருந்தவர் புலவர் நன்னன். முறையாக இலக்கணம், இலக்கியம் படிக்கும் முன்னமே என் சிந்தனையை வியந்து பாராட்டுவார். நான் எழுதுவதைப் பார்த்து ஆகா! ஓகோ! என்று பாராட்டுவார்கள். இப்படிப் பாராட்டினால், நான் எங்கே இருந்திருப்பேன்! தலைகால் புரியாமல் மகிழ்ச்சியின் உச்சியில் நின்று கொண்டிருந்தேன். எழுதுவதும், சரளமாக எழுதுவேன். இலக்கணம் படிப்பதற்கு முன்னமே எழுதியது. அதைச் சொல்லுகிறேன் பாருங்கள்.

**"பருத்திப் பட்டு இங்குண்டு**
**பண்டை நெசவுத் தொழிலுண்டு**
**இருந்தும் உடுக்க ஆடையில்லை**
**இரப்போர் நிலைதான் அழியாதே.**
**செருக்கு மிகுந்த வடக்காட்சி**
**செழித்து இங்கே வாழ்வதினால்"**

இப்படி எழுதியுள்ளதால் என்னுடைய உணர்ச்சி அப்போது எப்படி இருந்திருக்கும் என்று எண்ணிப் பாருங்கள்.

**சாதிநலம் பேசுகின்ற சழக்கர்தாமும்**
**சாக்கடையில் நெளிகின்ற புழுவைப்போல**
**நாதியற்று நடைப்பிணமாக நாட்டில் நிற்க**
**நல்லதொரு சட்டம் ஒன்றே செய்தல் வேண்டும்.**

1952 இல் இதை எழுதினேன். அதற்குப் பிறகுதான் சட்டமே வந்தது.

***பாதி மதி அணிந்தபிரானும்***
***பேதமற இச்செயல் தான் முந்தவேண்டும்***
***வேதியரின் முன் விழைவு இஃதேயாகும்***
***வெட்கமதை விட்டிடின் செம்மை சாரும்.***

இவையெல்லாம் பத்திரிகையில் வந்த செய்திகள். அவைதான் கொஞ்சம் நினைவில் நிற்கின்றன.

***ஏர்பிடித்த வேந்தர்முன் எவரும் நில்லார்***
***இவ்வுலகம் அவரிடத்தில் ஏந்தி நிற்கும்***
***பார்பிடித்து ஆளுகின்ற பண்பின் வேந்தர்***
***பாங்குடனே இதை அறிந்து நடத்தல் வேண்டும்***
***சீர்பிடித்த செந்தமிழால் செப்புகின்றேன்***
***பாட்டாளி போர் தொடுப்பான் சூளுரைத்தேன்.***

இப்படியெல்லாம் எழுதுகின்ற காலமது. இதை -யெல்லாம் சொன்னது எதற்கு? அப்படி ஒரு உச்சாணிக் கொம்பில் நின்ற நேரமது. மறுநாள் என் ஆசிரியர் யாப்பிலக்கணத்தைக் கொடுத்துப் படிக்கச் சொன்னார். தத்துபித்தென்று படித்தேன். அன்றுதான் என் அறியாமை உணரப்பட்டு, எனக்கு எந்தவிதமான அறிவுமில்லை, ஏதோ ஒரு உணர்வு என்னுள் இருந்து என்னை எழுதச் செய்கின்றது; அதைத் தவிர என்னிடத்தில் போதுமான அறிவில்லை என்று உணர்ந்து கொண்டேன். அப்போது என்னிடத்தில் அடக்கம் வந்தது, பயம் வந்தது, எல்லாம் வந்து விட்டது. பிறகு என்னிடத்தில் என் ஆசிரியர் ஒரு வார்த்தை சொன்னார். "தேமொழி! நீங்கள் பாடல் எழுதவேண்டாம். உங்களுக்கு அது கைவந்த கலையாக இருக்கின்றது" என்று அண்ணாமலைப் பல்கலைக் கழகத்திலிருந்து அஞ்சல் எழுதினார். அப்போது எனக்கு எரிச்சலாக இருந்தது. "நம்மேல் இவருக்குப் பொறாமை. அதனால்தான் இப்படிஎழுதியிருக்கின்றார்" என்று எண்ணினேன். அப்போதும் எனக்குத் திமிர்தான். அதற்குப் பிறகு அவர்கள் நேரிலே என்னைப் பார்த்துச்

சொன்னார்கள். "முதலிலார்க்கு ஊதியமில்லை. மதலையாம் சார்புஇலார்க்கு இல்லை நிலை" (449) நிரம்பப் படித்தாலன்றி உங்களது எழுத்துகள் வன்மை பெற்றவையாக அமையா. ஆகையால், முதலில் முதலைத் தேடிக் கொள்ளுங்கள்" என்று சொன்னார். அப்போது தான் என்னுடைய அறியாமை, என்னுடைய நிலைமை ஆகியவை நன்றாகத் தெரிந்தன. இங்கே சொன்னதெல்லாம் என்னுடைய சிறப்புக்களைச் சொல்வதற்காக அல்ல. ஒரு ஆசிரியனுடைய முன்னிலையிலே, ஒரு மாணவன் எந்த அளவுக்கு உணருகிறான் என்பதைத் தெரிந்து கொள்வதற்காகவே சொன்னேன்.

**அறியாமையை உணர்ந்தால்தான் அறிவை உட்கொள்ள முடியும். அறிய வேண்டியதை அறிய முடியும். அறிந்ததை எண்ணி மகிழ முடியும்.** அதற்குப் பிறகு அவரிடம் முன்னுரையே கேட்கவில்லை. அவர்கள் சொல்லுரையையே கேட்டுக் கொண்டு இருந்தேன். அவர்கள் என்ன சொன்னார்களோ அதையெல்லாம் கேட்டுக்கொண்டு இருந்தேன். இப்போது எழுதுவதற்கே மனதில்லை. ஏன்? பெரியவர்கள் எல்லாம் எழுதிவிட்டார்கள்; நாமென்ன எழுதப் போகிறோம்! என்ற எண்ணந்தான். நம்முடைய எழுத்து ஒரு எழுத்தாகாது என்ற எண்ணமும் வந்துவிட்டது.

திருவடியை வாழ்த்தாதவர்கள் எப்படித் துன்பப்படுவார்களோ அப்படி, இந்தக் கண்கள் இப்படியும், அப்படியும் நோக்குகின்றன என்று சொல்லுகிறார். அதில் ஒரு நுட்பம் இருக்கின்றது. குருநாதனிடத்தில் கருணை இருக்கின்றது. அந்தக் கருணையினாலே இந்த மாணவனை எப்படி ஈடேற்றலாம் என்று பார்க்கிறான். ஒன்றிரண்டு தப்பிருந்தால் மன்னித்துவிடலாம். எல்லாமே தப்பாக இருந்தால் எப்படி மன்னிப்பது! மிகவும் சிரமம்.

பழைய வீட்டை இடித்துக் கட்டுவதை விட, மனையை வாங்கிப் புதிதாக வீட்டைக் கட்டிவிடலாம். ஏனெனில் அது இரட்டிப்புச் செலவு. **குற்றமே உருவான உயிரை ஆட்கொள்ளுவது என்பது மிகவும் கடினமான ஒன்று.** அந்தக் குற்றம் குறைகளையெல்லாம் களைந்து ஆட்கொள்ள வேண்டும். **குறைகளே வடிவானது இந்த சீவன்.** இதை எப்படி ஆட்கொள்ளுவது? இந்தச் சீவனிடத்தில் ஏதேனும் நன்மையிருக்கின்றதா? என்று பார்த்து, அந்த நன்மையைக் கொண்டு அவனைத் தன்வயப்படுத்தி, அதன் மூலம் நன்மை பயக்கலாம் என்று எண்ணுவான்.

தனக்கு முன் வந்து நின்ற பெண், எத்தனைக் குணக்குறை உடையவனாகத் தலைவன் இருந்தாலும், அவனிடத்திலே ஏதேனும் ஒரு நற்குணம், தன்னை நாடுகின்ற குணமிருந்தாலும், அந்தக் குணத்தை வைத்தே அவனைத் தன்வயப்படுத்தி உயர்த்தி விடுவாள். அதுதான் ஒரு பெண்ணின் இயல்பு. தலைவனிடத்திருக் கின்ற குறைகளையெல்லாம், அவன் தன்னிடத்திலே காட்டுகின்ற அன்பை வைத்துக் கொண்டே சரிப்படுத்தி விடுவாள். இதற்கெல்லாம் எத்தனையோ சான்றுகள் சொல்லலாம். அதையெல்லாம் சொன்னால் நேரமிருக்காது. **குணங்களைக் கொண்டு, குறைகளை** அகற்றி நிறைவு செய்தல் வேண்டும்.

**அதனால்தான்** பாராட்டுதல் **என்பது மிகவும் முக்கியமான ஒன்று. எல்லோரிடமும்** பாராட்டுக்குரிய **அத்தனை குணங்களும் இருக்காது.** நூறுகுணங்கள் தப்பாக இருக்கும். ஒன்றிரண்டு நன்றாக இருக்கும். அந்தக் குணங்களைப் பாராட்டவேண்டும்.

> **"குணம்நாடிக் குற்றமும் நாடி அவற்றுள்**
> **மிகைநாடி மிக்க கொளல்." (504)**

என்று திருவள்ளுவர் சொல்லுவார். "மிகை" என்றால் எது அதிகமாக இருக்கின்றதோ அது என்று எடுத்துக் கொள்ளக்கூடாது. மிகை என்றால் நல்லன. இது உங்களுக்கு விளங்கவேண்டுமென்றால், எங்கள் ஐயா சொன்ன கருத்தை உங்களுக்குச் சொல்லிவிட்டால் விளங்கிவிடும். நாங்கள், "மிகை என்று சொல்லு கின்றாரே, குறைகள் அதிகமாக இருந்தால் அவற்றைத் தூற்றிப் பேசலாமா?" என்று கேட்டோம். அப்படிச் சொல்லக் கூடாது என்று சொல்லிவிட்டார். "தேமொழி, இந்தப் பலாப்பழத்தைச் சாப்பிடுங்கள் என்றால் என்ன செய்வீர்கள்" என்று கேட்டார். "சக்கையையெல்லாம் எடுத்துவிட்டுச் சுளையைச் சாப்பிட்டுவிடுவேன்" என்று சொன்னேன். "சுளை அதிகமாக இருக்குமா, சக்கை அதிகமாக இருக்குமா?" என்று கேட்டார்கள். சக்கைதான் அதிகமாக இருக்கும் என்றேன். "ஏன் அதைச் சாப்பிடக்கூடாது" என்று கேட்டார்கள். "அதேபோலக் குறைகள் அதிகமாக இருந்தாலும், அவற்றைக் கொள்ளு வதில்லை. நிறைகளை மட்டுந்தான் கொள்ள வேண்டும்" என்று அறிவுறுத்தினார். ஆகையால் "மிகை" என்பது நல்லன என்று சொன்னார்கள். அவர்கள் மிகப் பெரியவர்கள். கல்வியால் மட்டுமல்ல. சான்றாண்மை -யிலும் சிறந்தவர்கள். அவர்கள் சொல்லுவதைத்தான் நாங்கள் எல்லாம் சான்றாக எடுத்துக்கொள்ளுவோம். அப்படித் தலைவனிடத்தில் என்ன நல்ல குணங்கள் இருக்கின்றன என்று அந்தக் கண்கள் பிறழப் பிறழ விழிக்கும்.

மின்னும் பணியும் புரை மருங்குல் என்று பின்னே உள்ள 'மின்னும்' என்ற சொல்லை முன்னே கொண்டு வரவேண்டும். புரை - போல உருபு. பணி என்றால் பாம்பு. ஒளிவிடுகின்ற பாம்பைப்போல் அந்த இடை இருக்கின்றது. மருங்கு என்றால் பக்கம். உல் என்றால் இடை அந்த இடை பாம்புபோல் இருக்கின்றது. இடை வடிவத்தால், பாம்பு படம் எடுத்ததுபோல் இருக்கும். அதற்கு மட்டும் இதைச் சொல்லவில்லை.

பெருந்தோளிப் படைக் கண்களே – தோள் என்பது தோளி என்று வந்தது. என்னைத் தொளைக்கக் கூடியவள். "தோளா மூத்தச் சுடரே போற்றி" என்று வரும். தொடுவதின் மூலமாகப் பலவேறு நலங்களையும் நல் உணர்ச்சிகளையும் ஊட்டுவதால் அவளுக்குப் பெருந்தோளி என்று பெயர். கண்கள் என்று சொல்லாமல் படைக் கண்கள் என்று சொன்னதாலே சீவனுக்குள்ள அனைத்து கெடுதிகளையும் அகற்றும் பார்வை அது என்று உணரவேண்டும். பார்வை அவ்வளவு ஆற்றல் உடையது. அதன் ஆற்றல் என்னென்ன என்று மீண்டும் உங்களுக்கு நினைவுபடுத்துகின்றேன். வீட்டிற்குச் சென்று "கண்ணோட்டம்" என்ற அதிகாரத்தை எடுத்துப் பார்க்க வேண்டும். அதில் கண்களைப் பற்றியே பேசப்பட்டிருக்கின்றது.

**"கண்ணோட்டம் என்னும் கழிபெருங் காரிகை**
**உண்மையான் உண்டிவ் வுலகு" (571)**

காரிகை என்று சொல்லியிருக்கலாம். பெருங் காரிகை என்று சொன்னாலும் போதும். கழிபெருங் காரிகை என்று சொல்லியிருக்கின்றார். அவளுடைய இன்றியமையாமை தோன்ற, ஒரு பொருட் பன்மொழியால் சொல்லுகின்றார். அதேபோலத்தான் சில சொற்கள் இங்கே பயன்படுத்தப்பட்டிருக்கின்றன.

ஒரு பெண்ணாக இருந்தாலும் அல்லது ஒரு ஆசாரியனாக இருந்தாலும், அல்லது இறைவனாக இருந்தாலும், இந்த மூன்றையும் ஒப்பிட்டு வைத்துக் கொள்ளுங்கள். அவன் மூன்று நிலைகளிலும் இருந்து, இந்த ஆன்மாவை ஈடேற்றுகின்றான். அதை நாம் உட்கொள்ள வேண்டும். அதை எண்ணி மகிழ்தல்வேண்டும். மகிழ்ந்து மகிழ்ந்து மேலும் கலந்து கொள்ளவேண்டும்.

சைவ சமயத்திலே இறைவன் ஒன்றாய், உடனாய், வேறாய் நின்று நலம் செய்கிறான் என்று சொல்லுவது வழக்கு. இறைவனுக்கு மட்டும் அப்படிச் சொல்லி விட்டு விட்டால், நமக்கும் அதற்கும் சம்மந்தம் இல்லை என்று விட்டுவிடலாம்.

இங்கே இரண்டுபேர் இருப்பதனாலே, இரண்டு பேரிடத்தும் இரண்டு விதமான குணங்கள் இருக்க வேண்டும். ஒருவரிடத்திலே அன்பு இருக்கவேண்டும். மற்றவரிடத்திலே கருணை இருக்கவேண்டும். அல்லது அருள் இருக்கவேண்டும். அதனாலேதான் பெருமான் அன்பைக் கொடுக்கின்றான். அந்த அன்பைக் கொடுத்து, அந்த அன்பினாலே அருளை முகக்க வைக்கின்றான். அவனே இரண்டு நலங்களையும் நமக்கு வழங்குகின்றான்.

இறைவன் அப்படித்தான் செய்வான். ஆகையினாலே எனக்கு அன்பை ஊட்டுபவளும் அவளே. அந்த அன்பிலே அவள் நலத்தைப் பெற வைப்பளும் அவளே. எனக்குத் தன்பால் அன்பை ஏற்படுத்துபவனும் ஆசாரியனே. அந்த அன்பினாலே ஆசாரியனுடைய அறிவு நலத்தைப் பெறச் செய்பவனும் அவனே. ஏன் என்றால், எனக்கென்று (சீவனுக்கு) எந்தத் தகுதியும் கிடையாது. கொடுத்தால் பெறுகின்ற தகுதிதான் உண்டு. தானே எடுக்கும் தகுதிகூட கிடையாது. அதனால், "அறிவித்தால் அறியும் தன்மை -யுடையது ஆன்மா" என்று சொல்லியிருக்கிறார்கள்.இந்த இரண்டு கருத்தையும் மனதிலே வைத்துக் கொண்டுதான் சிந்திக்கவேண்டும்.

இதை மறந்துவிட்டு சிலபேர் "நமக்கு ஒன்றுமேயில்லையா? நமக்கு ஒன்றுமே இல்லையா?" என்று கேட்பார்கள். அதுதான் வீட்டிலேயே சொல்லி விடுகின்றார்களே, உனக்கு ஒண்ணும் இல்லைய்யா என்று. இதற்குப் பிறகு யாரிடத்தில் போய்ச் சொல்லுவது. நம்மைப்பற்றி அவர்களுக்குத் தெரிகிறது. சீவனுக்கென்று எதுவுமே யில்லை. அது எங்கோ பெறுகின்ற இரவல்தான். அத்தனையும் இரவல்தான். ஏன் தொழவேண்டும் என்றால், நலம்பெறவேண்டும். தொழுது தொழுது தான் நலம் பெறவேண்டும்.

தொழுதல் என்று சொன்னவுடன் காலையில் எழுந்தவுடன் ஒரு கும்பிடு, படுக்கும்போது ஒரு கும்பிடு என்று போடுவதில்லை. நிலைபெறுதல் என்று அர்த்தம்.

அலைதல் இல்லாமல் மனத்தை ஒரு நிலையில் நிலைபெறச் செய்வதற்குத் தொழுதல் என்று பெயர். இதற்கு விளக்கம் வேண்டுமல்லவா? மாட்டுத் தொழுவம் என்று ஒன்று இருக்கின்றது. மாட்டை அவிழ்த்துவிட்டால் எங்கே பார்த்தாலும் சுற்றிவிட்டு வந்து சேரும் இடம் எது? தொழுவம்தானே!

அப்படி மாடு வந்து நிலையான இடத்தில் சேருவதுபோல, நீங்கள் உங்கள் எதிர்ப்பட்ட இடத்திலேயே நில்லுங்கள். அந்த இடத்திலேயே ஆட்பட்டிருங்கள். அதை மையமாக வைத்துக் கொண்டு சுற்றிவாருங்கள், எங்குவேண்டுமானாலும். மாட்டை மேய்ப்பதற்காக ஒரு கூசு அடித்து, அதில் ஒரு நீளமான கயிறு போட்டுக் கட்டிவிட்டால், அந்தக் கயிற்றின் நீளம் இருக்கும் வரையில் சென்று வட்டமாக மேய்ந்து கொண்டிருக்கும். அதுபோல நீங்களும் உங்களுக்கு எதிர்ப்பட்டவர்களை மையமாக வைத்துத் தொழுதிருங்கள். கூசு போன்றவன் ஆசாரியன். அவன் போட்ட வட்டத்திற்குள்தான் நாம் நிற்கவேண்டும். அந்தக் கயிறு அறுந்துபோனாலோ, இந்தக் கூசு பயன்படாமல் போய் விட்டாலோ, மாடு ஒரு இடத்தில் நிற்காது. அதன் விருப்பத்திற்குப் போய்க்கொண்டிருக்கும். நிலைபேறு இல்லாமல்போய்விடுவோம்கண்டபடி சுற்றினால்.

அப்படி நிலைபேறில்லாது வாழ்கின்ற சீவனுக்கு நிலை பேறான ஒரு வாழ்க்கையை அமைத்துக் கொடுக்க கூசாக வந்திருக்கின்றான் ஆச்சாரியன் அதுதான் திருவாசகத்திலே "கூசு மலர்ப்பாதம்" என்றுவரும். பார்த்தால் கண் கூசுகின்றது என்ற அர்த்தத்தில் அது இல்லை. அந்த மலர்பாதம் தான் கூசு. நீங்கள் அதை நிலையாகப் பற்றிக் கொண்டு, நிலை பெறவேண்டிய இடம் அது. அதைக் கொடுத்துவிட்டு மகிழ்ச்சியடை கின்றான். அதனாலே அந்தத் திருவடியை வணங்குதல் வேண்டும். வணங்கி என்ன செய்ய வேண்டும்?

அணியைக் கொடுத்தான். அமிழ்தைச் சுரக்கச் செய்தான். ஆவியோடு ஆவியாக இருந்தான். அப்படி நின்ற

அந்தக் குருநாதனை எப்படி வழிபடவேண்டும் என்று சொன்னால்,

**"அன்றே என்றன் ஆவியும் உடலும் உடைமையும் எல்லாமும்
குன்றே அனையாய் என்னை ஆட்கொண்ட போதே
கொண்டிலையோ"**

அப்படி வந்து நின்றவுடனே அத்தனையும் சொல்லு கின்றார். அவன் வந்து நின்ற பிறகுதான், நான் இதுவரையிலும் எதை அமிழ்து என்றேனோ, உடைமையாக எண்ணினேனோ, ஆவியென்று எண்ணி னேனோ அத்தனையும் அவனுக்கு உடைமையாக்கிய பிறகு அவன் அணிபெறச் செய்தான். அமிழ்தை வழங்கி னான். ஆருயிராய் நின்றான். நலங்களைத் தேடித் தீமை அகற்றினான். அனைத்து அருளையும் வழங்கினான் குருநாதன் அந்தப் படைக் கண்களினாலே; அதை உட்கொள்ளுமாறும் செய்தான்.

மெய்யன்பர்களே!

தலைப்புக்கும் நூலுக்கும் போவதற்கு முன்னமே சில செய்திகளைத் தெளிவு செய்து கொள்ளலாம் என்று நினைக்கின்றேன். ஞானசம்பந்தப் பெருமான் இறை -வனுடைய நிலையைப் பேச வருகின்றபோது மேற்கோள் காட்டி இறைவனது நிலை இன்னது என்று சொல்ல முடியாது என்று சொல்லுகின்றார்.

**"ஏதுக்களாலும் எடுத்த மொழியாலும் மிக்குச்
சோதிக்க வேண்டா சுடர்விட்டுளன் எங்கள் சோதி"**

என்று சொல்லுகின்றார்.

சோதி என்பதைப் பற்றி விளக்குவதற்காகத்தான் இதை எடுத்துக் கொண்டேன். எந்தப் பொருளையும் சோதித்துக் கொண்டே போனால் கடைசியாக இருப்பது சோதி என்ற பொருள்தான். ஆகையால் சோதி என்று சொன்னது எல்லாவற்றிற்கும் மேலாகத் திரண்ட ஒரு பொருளாகத் திகழ்கின்ற பரம். அதற்கு எந்த மதப்

பாகுபாடும் கிடையாது. அந்தச் சோதி இறங்கி வருகின்றபோது, யார் யார் எந்த மன நிலையோடு பாவிக்கின்றார்களோ, அப்படிப் பாவிக்கின்ற நிலையிலே இறங்கி வருகின்றது. அப்படி இறங்கி வருகின்றபோது, சைவர்களாக இருந்தால் அதற்கு ஏற்ற தோற்றம், வைணவர்களாக இருந்தால் அதற்கேற்ற தோற்றம், கௌமாரர்களாக இருந்தால் முருகன் என்ற தோற்றம், காணாபத்தியம் என்றால் விநாயகர் என்ற தோற்றம் தாங்கிவரும்.

**"யாதொரு தெய்வம் கொண்டீர் அத்தெய்வமாகி ஆங்கே மாதொரு பாகனார்தாம் வருவர்."**

ஆகையால் நீங்கள் எந்த ஒரு தெய்வமாகப் பாவித்தாலும், ஆதியும் அந்தமும் இல்லாத அருட்பெருஞ் சோதிதான் காட்சி தருகின்றது. அருட்பெருஞ்சோதி என்பது முடிந்த முடிவான நிலை. அதற்குமேல் ஒன்றில்லை. அதற்குக் கீழேதான் மற்றதெல்லாம் வரும். முன்னமே சொல்லுகின்றபோது அருட்பெருஞ்சோதியைப் பற்றிச் சொன்னேன். திருக்கோவையாரை நாம் படிக்கின்ற போதும், கேட்க வருகின்றபோதும், பொதுவாகவே சில செய்திகளைத் தெளிவுபடுத்திக் கொண்டு படித்தால் நமக்கு நல்லது.

மேலே சோதி என்று ஒன்று இருக்கின்றது. அந்தச் சோதியிலிருந்து இந்த உலகத்திற்கு நலம் செய்வதற்காக ஒரு சின்ன ஆற்றல் வெளிப்பட்டு வருகின்றது. அதற்குப் பரம் என்று பெயர். அதிலிருந்து இன்னொரு ஆற்றல் வெளிப்படுகின்றது. அதற்குப் பரை என்று பெயர். அந்தப் பரையிலிருந்து ஒரு ஆற்றல் வெளிப்படுகின்றது. அந்த ஆற்றலுக்குச் சிவம் என்று பெயர். இந்தப் பரமும் பரையும் இணைந்த இடத்திற்குக் கைலை என்று பெயர். சோதி இருக்கின்ற இடத்திற்குத் தில்லை என்று பெயர். இதைத் தெளிவாக மனதிலே வைத்துக் கொள்ளவேண்டும்.

கைலையின் அடிவாரத்திலே வெளிப்படுவதுதான் சிவம். அது ஞானத்தின் வடிவம். நம்மை ஆட்கொண்டு

விடுவது அந்த ஞானந்தான். சிவம் என்று சொன்னவுடனே அது தாழ்ந்தது என்று எண்ணிவிடக் கூடாது. நம்மை ஆட்கொள்ள வந்த ஒரு வடிவம். சோதி அப்படியே வந்து பயன்படாது. பயன்பட வருகின்றபோது அவனது எளிவந்த தன்மையில் வருகின்றது.

சோதி இருப்பது தில்லையிலே. பரமும் பரையும் இணைந்திருப்பது கைலையிலே. சிவம் வந்து ஆட்கொள்ளுவது கைலை மலையின் அடிவாரத்திலே. அதற்குத் திணைப்புனம் என்று பெயர். திணை என்றாலே ஞானம். அந்த ஞானத்தை நமக்கு வழங்கவேண்டுமென்று வந்த தோற்றம்தான் சிவம். அது சைவத்திற்கு உரியது. சோதி யாருக்கும் உரியது அல்ல. அது பொது நிலை. யார் வேண்டுமானாலும் சோதி, சோதி என்று சொல்லலாம். யாரும் சொல்லலாம்.

பல சோதிகளைச் சொல்லி, இந்த சோதிகள் எல்லாம் எங்கிருந்து வந்தன என்று வினா எழுப்பி, விடை சொல்லுவது போலக் கடைசியாக, "ஏக சோதி, ஏக சோதி, ஏக சோதி, ஏக சோதி" என்று சொல்லுவார் வள்ளல் பெருமான். இவற்றையெல்லாம் வெறும் நூலறிவை மட்டும் வைத்துக் கொண்டு ஆராய்ந்துக் கொண்டிருக்கக் கூடாது. பெரியவர்களின் அனுபவ அறிவையும் வைத்துக் கொண்டுப் பார்க்கவேண்டும். அதனாலே சிவம் என்பது தோற்றத்தில் வந்து, மக்களை ஆட்கொள்வது. நானே வைணவனாகிவிட்டால், அதே சிவம் திருமாலாகிவிடும். அதனாலே திருமால் பெரிதா, சின்னதா என்ற கேள்வியே கிடையாது. நீங்கள் விரும்பிய விருப்பத்தின்படி அது இறங்கி, எளிமையாக வந்து நம்மை உயர்த்தியது. அவ்வளவுதான்.

உங்கள் பரம்பரை என்ன என்று கேட்டால், உடனே ஒரு மடாதிபதி சொல்லுவார், நாங்கள் கைலாயப் பரம்பரை என்பார். இப்ப தெரிஞ்சுக்குங்க. கைலையில் பரம், பரை இரண்டும் இருக்கின்றன. அதில் ஞானம் பெற்றவர்கள் நாங்கள், அங்கிருந்து வருகிறோம் என்று அர்த்தம். இது

அவர்களுக்குத் தெரியுமோ தெரியாதோ, ஆனால் தெரிந்து கொள்ளவேண்டிய செய்தி.

சோதியிலிருந்து வந்ததாகச் சொல்லமாட்டார். பரம்பரை என்ற சொல்லே, பரம், பரை என்ற இரண்டின் கூட்டுத்தான். ஆகையால் இந்த அடிப்படையைப் புரிந்து கொண்டால், சோதி என்பது பொது நிலை;அதை நீங்கள் எந்தப் பெயர் வைத்து வேண்டுமானாலும் அழைக்கலாம்; அதற்கே சிவம் என்று பெயர் சொன்னாலும் சொல்லலாம்;தவறு கிடையாது. அது ஆகுபெயராக அமையும். சிவம் என்பது கடவுளுக்குப் பெயரில்லை என்று பலகால் சொல்லியிருக்கிறேன். கடவுளுக்கு எத்தனையோ பெயர். அதில் இதுவும் ஒன்று அவ்வளவுதான்.

**"செம்மையே ஆய சிவபதம் அளித்த**
**செல்வமே சிவபெருமானே"**

செம்மை என்பது ஒரு பதம்;ஒரு பக்குவம். அது ஒரு நிலை. அதை எனக்குக் கொடுத்ததால், அவருக்கு அந்தப் பெயரை நான் கொடுத்தேன். அவர் பெயர் என்ன என்று எனக்குச் சொல்லத் தெரியவில்லை. என்னமோ கொடுத்து விட்டுப் போனார்; ஆனால் அவர் பெயர் தெரியவில்லை. அதனால் எனக்குத் தெரிந்த பெயரை வைத்துக் கூப்பிட்டேன். தயிர் கொடுத்துவிட்டுப் போனார் ஒருவர்; அவரைத் தயிர்க்காரர் என்று சொன்னேன். அவ்வளவு தான். அவர் பெயர் தெரியாததால். சிவபதம் அளித்த ஒரு பரம்பொருளைச் சிவமே என்று அழைத்தோமே தவிர, வேறொன்றுமில்லை. அப்படியென்றால் அதைத் 'தானியாகுபெயர்' என்று இலக்கணம் பேசும். எவர் நமக்கு எதை வழங்கினாரோ அதைக் கொண்டே அவர் பெயரைச் சொல்லுவது. ஆகவே சிவம் என்று சொல்லிவிட்டதாலே தாழ்ந்ததும் அல்ல. சோதி என்று சொல்லிவிட்டதாலே உயர்ந்ததும் அல்ல. அதிலிருந்து எல்லாமே பிரிந்தும் விரிந்தும் வருவதுதானே! அதனாலே எந்த இடர்ப்பாடும் இல்லை. இந்தக் கருத்தை முதலில் தெளிவாக்கிக் கொள்ளவேண்டும்.

# 6. கலந்து கலத்தல்

மணிவாசகப் பெருமான் திருவாய் மலர்ந்தருளிய இரண்டு நூல்களிலே திருக்கோவையார் ஒரு ஞானக் களஞ்சியமாக அமைந்திருப்பதை நீங்கள் எல்லாம் அறிவீர்கள்.

எனக்கு என்ன வாய்ப்பு என்றால், மதுரையிலே அமெரிக்கன் கல்லூரியில் ஒரு பேராசிரியர் இருக்கின்றார். அவர் சிகாகோ பல்கலைக்கழக டாக்டரேட் வாங்கியவர். சிகாகோ பல்கலைக் கழகத்திலே மணிவாசகர் எழுதிய திருக்கோவையார்' என்ற நூல் என்ன சொல்லுகின்றது என்று கேட்டார்கள். அதில் ஒன்றும் சொல்லவில்லை; வெறும் தண்டம்; என்றும் சொல்லிவிட்டார்.

அவர் அதில் ஒன்றும் இல்லை என்று சொல்லிவிட்டதால் தான் எனக்கு இந்த வாய்ப்பு. இல்லாவிட்டால் அமெரிக்காவுக்குப் போய் இந்த நூலைப் பற்றிச் சொல்ல எனக்கு வாய்ப்புக் கிட்டியிராது. அவர் சொன்ன பாடங்களைக் கேட்டுக் கொண்டிருந்த அமெரிக்கர், சிகாகோ பல்கலைக் கழகத்தில் தமிழ் படித்துக் கொண்டிருந்தார். அவர்கள் இங்கே வந்தார்கள் ஆய்வுக் கட்டுரை எழுத. அப்போது நான் திருக்கோவையார் சைதாப்பேட்டையில் நடத்திக் கொண்டிருந்தேன்.

தொடர்ந்து வந்து அந்தப் பாடத்தைக் கேட்டும், ஒலி நாடாவில் பதிவு செய்தும் எடுத்துக் கொண்டார்கள். அப்போது அவர் சொன்னார். இந்த நூலில் ஒன்றுமேயில்லையென்று சொன்னார்களே என்று ஐயம் எழுப்பினார். ஒவ்வொரு பாடலுக்கும் இவ்வளவு செய்திகள் இருக்கின்றதே என்று வியந்து போனார்கள்.

அந்த நூல்தான் அமெரிக்கப் பல்கலைக் கழகம் மூலம் என்னை அழைக்க வைத்தது. அவரையே அழைத்து அந்த நூலைச் சொல்லச் சொல்லுங்கள் என்று கேட்டுக் கொண்டார்கள். அப்படியே அவர்களும் அழைத்தனர்.

நானும் சென்று பாடம் நடத்திவிட்டு வந்தேன். அவர் அப்படி, அன்று சொல்லவில்லையென்றால் எனக்கு இந்த வாய்ப்பு கிடைத்திருக்காது இல்லையா? அதனால் தான் திருவருள் நமக்கு ஒரு வாய்ப்பு கொடுக்கின்றபோது எப்படியோ கொடுக்கும். எப்படிக் கொடுக்கும் என்று சொல்லமுடியாது. மணிவாசகர், "என்னால் அறியாப் பதம் தந்தாய்" என்று சொல்லுவார். ஆகையால் இந்த நூலையெல்லாம் அவ்வளவு எளிதாகப் படிப்பது என்பதும், புரிந்து கொள்வது என்பதும் மிகவும் கடினம் என்று புலவர்களே சொல்லுகின்ற காலம். ஏதோ அரைகுறையாக இந்த நூலைச் சிந்திக்க வைத்ததற்குத் திருவருள்தான் காரணம்.

கலந்து கலத்தல் என்றால் என்ன? இரண்டு கலத்தல் இதில் வருகிறதே ஏன்? பணியில் கலத்தல், பதியில் கலத்தல். அதுதான் கலந்து கலத்தல். பணியில் கலந்தால் தான் பதியில் கலக்கமுடியும். பணியில் கலக்காதவர்கள் பதியில் கலக்கமுடியாது. யார் தொண்டு செய்ய வில்லையோ, தொண்டராகவில்லையோ, அவர் பின்னே இறைவன் வரமாட்டான். தொண்டு செய்வார்க்கு இறைவன் தொண்டனாகி வருவான். "தொண்டர்க்குத் தொண்டன் இறை" என்பது பெரியோர் வாக்கு. அந்தத் தொண்டுதான் நம்மிடத்திலே இறைவனைக் கொண்டு வந்து சேர்ப்பதற்கு உரிய வழி. அதனால்தான் பணிந்து, பணி செய்து, பதியோடு கலக்கவேண்டும். அப்படிப் பணிந்து, பணிசெய்து, பதியோடு கலத்தல் என்றால் என்ன? பணி என்பது என்ன?

பணி என்றால் ஒருவரோடு கலந்து கொள்ளுவதற் கேற்ற பக்குவ நிலையில் தன்னை ஆக்கிக் கொள்ளுதல். பண் – எதையாவது பண்ணுங்க; இப்படிப் பண்ணணும் என்று சொல்லக் கேட்டதுண்டு. பண் என்றால் இசை, புகழ் என்று பொருளுண்டு. இதைப் பண்ணுவாயாக என்றால் அதற்குரியவர்களாகத் தன்னை ஆக்கிக் கொள்ளுவது.

பதியோடு கலந்து கொள்ள, அதற்குரிய பக்குவமாகத் தன்னை ஆக்கிக் கொள்ளு -வதற்குப் பணி என்று பெயர். ஒரு தலைவியோடு தலைவன் கலந்து கொள்ள வேண்டுமென்றால், அதற்குரிய பண்போடு பழகினால் தான் கலக்கமுடியும். அதற்கு ஏற்றவனாகத் தன்னை ஆக்கிக் கொள்ளவேண்டும். அவளும் இந்தத் தலைவனோடு கலந்து. கொள்ளும் பண்பை வளர்த்துக் கொள்ள வேண்டும்.

பண்பு என்பது ஒருவர் இறங்கி வருவது; இன்னொருவர் நெருங்கிச் செல்வது. அதனாலே இந்தப் **பணி என்பது முனைப்பில்லாமல் செயல்படுவது.** நினைவுக்காக மீண்டும் சொல்லுகிறேன். நல்வினை, தீவினை என்று வினைகளைச் சொல்லிவிட்டார்கள். நல்வினை, தீவினைக்கு முனைப்பு வேண்டும். ஆனால் பணிக்கு முனைப்பு கூடாது. அதனால்தான்

**"அன்பர் பணிக்கு என்னை ஆளாக்கிவிட்டு விட்டால்**
**இன்பநிலை தானே வந்து எய்தும்"**

என்பார் தாயுமானார். இன்பம் என்பது சிவம்; இன்பம் என்பது குரு;இன்பம் என்பது ஒளி. அது தானே நம்மை வந்து அடைவதற்கு என்ன வேண்டும். பணி. அதற்கு யாருக்குப் பணி செய்யவேண்டும். அன்பருக்குப் பணி செய்யவேண்டும். அப்படிப் பணிசெய்து பதியில் கலத்தல் வேண்டும்.

இன்னொரு கருத்தையும் பணி என்பதற்குச் சொல்லவேண்டும். அன்பு இருந்தால்தானே அன்பருக்குப் பணி செய்யமுடியும். ஆணவம் முழுதும் அகன்று போய்விட்டது அல்லது அகன்று போய்விட வேண்டும் என்றால் அன்பு இருக்கவேண்டும். நம்மிடத்திலே இருக்கின்ற அன்பெல்லாம் அன்பில்லை. இருக்கிறது என்று நினைத்தால் அது தப்பு.இதற்கு நடைமுறைச் சிரிப்பு ஒன்றைச் சொல்லிவிட்டு மேலே போகிறேன்.

ஒரு கோழியின் காலை உடைத்துவிட்டான் ஒருவன். அதன் சொந்தக்காரன், காலை ஒடித்தவனைத் திட்டிவிட்டு,

அதைக் கால்நடை மருத்துவரிடம் எடுத்துச் சென்று சிகிச்சை செய்து பராமரித்தான். பிறகு ஒருநாள் இவன் வெளியூருக்குச் செல்ல நேர்ந்தது. அப்போது மனைவியிடம் சொல்லிவிட்டுப் போனான். இதற்குத் தீனி போடுங்கள், தண்ணி காட்டுங்கள் என்று. அவர்கள் மறந்து விட்டார்கள். வந்தவுடன் செய்தி தெரிந்து மனைவியை இரண்டு அறைவிட்டான். நீங்கள் நன்றாகச் சாப்பிடுகிறீர்கள், ஆனால் இந்த வாயில்லாச் சீவனைப் பட்டினி போட்டுவிட்டீர்களே என்று திட்டினான். எவ்வளவு சீவகாருண்ய ஒழுக்கம் பார்த்தீர்களா? அந்தக் கோழியிடத்திலே அவனுக்கு அவ்வளவு அன்பு. அதன் உடல்நிலை ஓரளவு தேறியிருந்தது.

ஓரிரு மாதங்கள் கழித்து தீபாவளி வந்தது. அவனே கத்தியை எடுத்துக்கொண்டு போகிறான் அதை அறுப்பதற்கு. அதோ போலத்தான் நம்முடைய அன்பு. என் பையன் 100/100 மார்க் வாங்கவில்லையென்றால் அவன்மேல் கோபப்படுகின்றேன். நான் நினைத்த மாதிரி இல்லை என்றாலோ என் மனைவி என் சொல்லுக்கெல்லாம் கட்டுப்பட வில்லையென்றாலோ அவளை அடிக்கிறேன், கடிந்து கொள்ளுகிறேன். அதற்கு அன்பு என்றா பெயர்! அந்தக் கோழியை அறுப்பவனுக்கும் எனக்கும் வித்தியாசம் சிறிதும் இல்லை. இதை அன்பு என்று யாரும் சொல்லியிருக்க மாட்டார்கள்.

**"அன்பும் சிவமும் இரண்டென்பர் அறிவிலார்**
**அன்பே சிவமாவ தாரும் அறிகிலார்**
**அன்பே சிவமாவ தாரும் அறிந்தபின்**
**அன்பே சிவமாய் அமர்ந்திருந் தாரே (திருமந்திரம் 270)**

இந்தப் பாட்டுக்கும் மேலே பார்த்த செய்திக்கும் பொருத்தமில்லையென்று நான் நினைக்கின்றேன். **அன்பு என்பது பயன் கருதாத தொண்டு. சிறிதும் முனைப்பு இல்லாமல் நடந்து கொள்ளுவது.** அன்னம் என்பதற்கு ஒரு

அன்பர் பொருள் சொன்னார். அன்னம் என்பது எப்படி மென்மையாக நடை பயிலுமோ அப்படி நடை பயிலுபவள் பெண் என்று சொன்னார்கள். அது சரிதான். அது முழுமையான, சரியான விளக்கமாகாது. **அன்னம் என்பதற்கு ஞானம் என்று பொருள்.** ஞானம் எப்படி மென்மையாக உள் பயிலுமோ, அப்படி மென்மையான நடை உடையவளாக இந்தப் பெண் இருக்கின்றாள். **ஞான நடையினள் என்று** பொருள். அறிவார்ந்த நடை, அமைதி -யான நடை, அன்பான நடை, இத்தனைக்கும் அங்கே அன்ன மென் நடை என்று சொல்லப்பட்டது. அன நடை, அம்ச நடை, அசபா வெளி என்றும் சொல்லுவார்கள். அசபா வெளியிலே நடக்கின்ற நடை ஞான நடை.

ஒருமுறை வையாபுரிப் பிள்ளை அவர்கள் எங்கள் வீட்டிற்கு வந்திருந்தார். அப்போது அவருடைய மாணவர் ஒருவர் ஒரு பாட்டை எழுதிக் கொண்டு வந்து அவரிடம் காட்டினார். அப்போது எனக்கு எட்டு அல்லது பத்து வயதிருக்கும். அந்தப் பாட்டைப் பார்த்தவுடன் அந்தப் பாட்டை மறுத்து ஒரு பாட்டு எழுதிவிடவேண்டும் என்ற எண்ணம் வந்தது. அது பெண்களை இழிவுபடுத்துவது போல் இருந்தது. அந்த வயதில் எனக்கு என்ன தெரியும்?

**"குறுகிய விழியும், குஞ்சரத்தின் நடையும்**
**நாறும் உடல் படைத்த மாதர் அளிக்கும்**
**இன்பம் மாநிலமே இனிக்கும்"**

என்று எழுதி அவரிடம் கொடுத்தேன். அவர் மிகவும் மகிழ்ந்து போனார். என்னைத் தோளில் தூக்கி வைத்துக் கொண்டு ஆடினார். பின்னாலே இவன் அப்படி வருவான், இப்படி வருவான் என்று எல்லாம் சொன்னார். ஒருவேளை அப்படி அவர் வாழ்த்தியதால்தான் இப்படி வந்திருக் கின்றேனோ என்னவோ?

இதை எல்லாம் சொல்லிவிட்டு, குஞ்சரம் என்றால் என்ன அர்த்தம் தெரியுமா தம்பி என்று என்னைக் கேட்டார். தெரியாது என்று சொன்னேன். குஞ்சரம் என்றால் யானை என்று சொன்னார். அது எப்படி நடக்கும்

தெரியுமா? என்று கேட்டார். தெரியாது என்று சொன்னேன். அது காற்றைவிட வேகமாக நடக்கும். பெண் அப்படியா நடக்கிறாள் என்று கேட்டார். பொருள் தெரியாவிட்டாலும் உனக்குக் கவி எழுதுகின்ற திறமை இருக்கிறது என்று சொன்னார். பாராட்டினார். ஆக, நாம் சில நேரங்களில் ஒன்றை ஒன்றாகச் சொல்லுகிறோம் என்பதற்காகச் சொன்னேன்.

பொதுவகையினால் பார்க்கின்றபோது இப்படித் தான். சிறப்பு வகையினால் பார்க்கின்றபோது வேறு வகையாக இருக்கும். தொண்டிற்கு அன்பு தேவை. அன்புக்கு ஆணவமின்மை தேவை. "**அன்பு நடந்தேற ஆணவப் புல் தேய்ந்தொழியும், தொண்டு ஆறு தூய்மைபெறும்**" தொண்டு என்ற நெறியினால்தான் தூய்மை பெற முடியும். அந்தத் தொண்டினால்தான் இறைவனை அடைய முடியும். அதுதான் கலந்து கலத்தல். இங்கே "தெய்வத்தை மகிழ்தல்" என்று தலைப்புச் சொல்லியிருக்கின்றார்கள்.

தெய்வத்தை ஏன் மகிழ வேண்டும். தெய்வம் என்றால் பெரிய தெய்வமா? சின்ன தெய்வமா? தெய்வங்கள் பல. எந்தத் தெய்வம்? என்ற எண்ணம் வரும். இங்கே தெய்வம் என்றது தெய்வ நலம். தன்னைத்தானே மகிழ்ந்து கொள்ளலாம். தவறு இல்லை. நான் எப்படி இவரைச் சந்திக்க முடிந்தது? என்னுடைய இந்தக் குணங்களினாலே சந்திக்கமுடிந்தது. **நல்ல குணங்களே தெய்வத் தன்மை வாய்ந்தது.** எது பொல்லாத குணங்களோ அவையெல்லாம் அரக்கத் தன்மை உடையவை. **சீவனுக்கு இயல்பாக இருப்பவை பொல்லாக் குணங்களே.** நல்ல குணங்களாக இருப்பவை தெய்வ குணங்களே. அந்த நல்ல குணங்களை, தெய்வ நலன்களை மகிழ்தல் வேண்டும். சாதாரணமாக மகிழ்ந்துவிட முடியாது. உதாரணத்திற்கு ஒன்று சொல்லுகிறேன்.

கந்தர் கலிவெண்பாவைப் பாட்டாகப் படித்துக் கொண்டிருந்தேன். அந்த நூல் பெரியது; படிக்கவேண்டும்

என்பதற்காகப் படிக்கவில்லை. சாதாரணமாகப் படித்துக் கொண்டிருந்தேன். முழுதும் பாடமாகிவிட்டது. ஒரு நான்கு ஆண்டுகளுக்குப் பிறகு கந்தர் கலிவெண்பாவைப் பற்றிய விளக்கம் சொல்லச் சொன்னார்கள். விளையாட்டாகப் படித்தோமே அது இன்று பயன் படுகின்றதே! என்று எண்ணி மிகவும் மகிழ்ச்சியாகப் போய்விட்டது. நிறையக் காசும் கொடுத்து ஏறக்குறைய ஆயிரம் ரூபாய் கொடுத்தார்கள். இந்த நூல் நாம் பயின்றதால் அல்லவா இப்போது பயன்பட்டது என்று எண்ணி, பயின்றதை மகிழ்ந்தேன். அந்த நிகழ்ச்சியை மகிழ்ந்தேன். நாம் ஒன்றைப் பெறுவதற்கு முன்னே நாம் செய்கின்ற செயல் இருக்கின்றதே அதற்குத் தவம் என்று பெயர். எதுவாக இருந்தாலும் சரி. ஒரு பாடலைப் பலகாலும் சொல்லிச் சொல்லி மனனம் செய்கின்றோமே அந்தப் பயிற்சியைத் தவம் என்று சொல்லலாம்.

**"தவமும் தவமுடையார்க்கு ஆகும்" (262)**

என்றார்கள். முன்னே செய்த தவத்தின் பயனல்லவா இது என்று, தவத்வைத் தெய்வ நலமாகக் கருதி அந்தத் தெய்வத்தை மகிழ்ந்தது இந்தச் சீவன். ஏன்? இந்த நல்ல குணங்கள் சிறுகச் சிறுகச் சேர்த்தேன். அனைத்து நல்ல குணங்களையுந்தரக்கூடிய ஒரு பரம்பொருளல்லவா என் முன் வந்து நிற்கின்றது! இந்தப் பெரிய பொருளைப் பெறுவதற்கு இந்தப் பகுதி நேர உழைப்பான தவநிலையல்லவா பயன்பட்டிருக்கின்றது என்று தவ நிலையைத் தெய்வமாக மதிக்கவேண்டும்.

அதற்கு என்ன செய்திருப்பார்கள்? தர்மம் செய்திருப்பார்கள். தர்மத்தை எப்படிச் செய்யவேண்டும்? ஞான உணர்ச்சியோடு செய்யவேண்டும். எப்படி ஞான உணர்ச்சியோடு செய்வது? தர்மத்தின் பயன் எவ்வளவு வரும் என்று எண்ணிச் செய்யக்கூடாது. நான் செய்கின்ற இந்த தர்மத்தினாலே இந்த உலகமே ஈடேறவேண்டும் என்ற எண்ணம் வரவேண்டும். அதற்குச் சிவதர்மம் என்று

ஏன் சொல்லவேண்டும்? வேறு ஏதாவது பெயர் சொல்லக்கூடாதா?

சிவதர்மம் என்றால் செம்மையான தர்மம் என்று பெயர். சிவம், சிவப்பு, இது ஏதோ வேறு மொழி என்று சொல்லிக் கொண்டிருப்பார்கள். "ஒரு அறை கொடுத்தேனா கன்னத்திலே, கன்னம் செவ செவ என்று ஆகிவிட்டது பார்" என்பார்கள். அதுவே சிவ சிவ என வந்தது. சிவந்தது, செம்மையானது என்று பொருள். இது சமஸ்கிருத மொழி என்று சொல்லிக் கொண்டிருப்பார்கள். இவர்களும் ஆமாம் ஆமாம் என்று சொல்லித் தலையாட்டிக் கொண்டிருப்பார்கள். நம்சொற்களை யெல்லாம் அங்கே கொண்டுபோய் வைத்துவிட்டுத் திண்டாடிக் கொண்டிருப்பார்கள். அந்தச் செம்மை -யென்ற உணர்வோடு உலகம் செழிக்க வேண்டுமென்று செய்கின்ற செயல்களுக்குச் சிவ தர்மம் என்று பெயர்.

**"நல்ல சிவதர்மத்தால்"** (பாடல் 15)

என்று திருக்களிற்றுப்படியார் சொல்லும்.

நல்ல என்றால் ஞான உணர்ச்சி. நல்ல என்ற சொல்லுக்கே ஞானம் என்று பெயர்.

**"நல்லார் ஒருவர் உளரேல் அவர்பொருட்டு**
**எல்லார்க்கும் பெய்யும் மழை" (மூதுரை 10)**

அப்போது ஞானியர் யாரேனும் ஒருவர் இருந்தால் அவர் பொருட்டு எல்லார்க்கும் மழை பெய்யும். கற்புடையவர் இருந்தாலும் மழை பெய்யுங்களா? பெய்யும். கற்பு என்றாலும், ஞானம் என்றாலும் ஒன்றுதான். கற்பு, ஞானம், திண்மை, சால்புடைமை இவை ஒரு பொருளைக் குறிக்கும் சொற்கள். பெண்மைக்கு வருகின்றபோது கற்பு. சராசரி மக்களுக்கு வருகின்றபோது திண்மை. ஒரு சான்றோரிடத்தில் நிலைபெறுகின்றபோது சால்பு. எங்கெங்கே நிலைபெறுகின்றதோ அதற்கேற்றவாறு பெயர் சூட்டப்பட்டிருக்கிறது. அந்தச் சால்பை நாம் எண்ணிப் பார்ப்போமானால் எல்லா இடத்திலும்

இருக்கும். என் இடத்தில் இருந்தால் அதற்குப் பெயர் வேறு. உங்களிடத்தில் இருந்தால் அதற்கு வேறு பெயர்.

ஒரு ஞானி அருள்வாரேயானால் அதற்கு அருள் மொழி என்று பெயர். தெருவில் யாரேனும் பேசினால் அது தெருமொழி. இரண்டுமே தமிழ்மொழிதான். சொல்லுவோருடைய வாக்குக்கு ஏற்ப மொழி பெருமை பெறுகின்றது. அதேபோலத்தான் நல்ல சிவ தர்மம் என்று சொன்னார்கள்.

இங்கே ஒரு சின்ன விளக்கம். தர்மம் வேறு. அறம் வேறு. தர்மம் என்பது தான் உழைத்து ஈட்டிய பொருளைத் தருவது. அல்லது அதை வேறு யாராகிலும் கூட எடுத்துக் கொடுத்துவிடலாம். அதற்கும் தர்மம் என்றுதான் பெயர். கர்ணன் கொடுத்தானே! ஏராளமாகக் கொடுத்தான். அது பாராட்டப்படவேண்டிய ஒன்றுதான். தருதல் தர்மம். அறுதல் அறம். அறத்திற்கும் தர்மத்திற்கும் ஒரே பொருளைச் சொல்லக்கூடாது. "அறஞ்செய விரும்பு" என்றால் தர்மம் செய்ய ஆசைப்படு என்று சொல்லக் கூடாது. மனதில் இருக்கின்ற அழுக்காறு, அவா, வெகுளி, இன்னாச்சொல் நான்கும் அற்றுப்போனால் அந்த இடத்தில் அறம் நிலவுகின்றது. அழுக்கற்ற இடம் அறம் எனப்படும். அறம் இருக்கும் இடத்திலே இறைவன் இருக்கிறான்.

**"அறவையேன் மனமே கோயிலாக் கொண்டாண்டு**
**அளவிலா ஆனந்த மருளி"**

என்று மாணிக்கவாசகப் பெருமான் சொல்லுவார். அதனாலே இந்த அற உணர்ச்சியை மேற்கொண்ட -வர்கள் தரும் உணர்ச்சிகளை மேற்கொண்டவர்கள், முனைப்பில்லாமல் செயல்படுவார்கள். இது எனக்கு ஒரு வாய்ப்பு. கொடுப்பதற்கு எனக்கு இன்று ஒரு வாய்ப்புக் கிடைத்திருக்கிறது; என்னைத் தூய்மைப்படுத்திக் கொள்ள எனக்கு ஒரு வாய்ப்புக் கிடைத்தது என்று நினைக் -கின்றார்களே அதற்குத்தான் சிவ புண்ணியம் என்று

பெயர். ஏதோ இறைவன் எனக்கு இந்த வாய்ப்பைக் கொடுத்தானே என்று நினைக்கின்றார்களே அதுதான் சிவபுண்ணியம். ஏதோ செய்துவிட்டோம். இனி அவன் செயல் என்று நிறுத்திக் கொள்வார்கள். தன்னால் செய்யப்பட்டது என்ற எண்ணம் அற்று விளங்குவார்கள்.

ஒரு உதாரணம் சொல்லுகிறேன். ஒரு அன்பர் பொருளைக் கொடுத்து ஒரு செயலைச் செய்யுங்கள் என்று சொன்னார். சொல்லிவிட்டு நான் செய்கின்றேனா, இல்லையா என்று பார்த்துக் கொண்டேயிருந்தால் அதற்கு "நான்" என்று பெயர். அல்லது முனைப்பு என்று பெயர். கொடுத்துவிட்டோம். இனி எதையானும் செய்து கொள்ளட்டும். நல்லதைச் செய்யச் சொல்லுங்கள் என்று சொல்லி விட்டு விடவேண்டும்.

ஒருவர் நல்லதையே செய்து கொண்டிருக்கிறார். அப்புறம் யாரையேனும் பார்க்கும்போதும் நல்ல உயர்ந்த நோக்கத்தோடேயே பார்க்கின்றார். ஞான உணர்ச்சி யோடு, பரந்த எண்ணத்தோடு தன்னல மேயில்லாமல், நான் கொடுக்கிறேன் என்ற எண்ணம் இல்லாமல், நான் செய்கிறேன் என்ற எண்ணம் இல்லாமல், என்னால்தான் நடக்கிறது என்ற எண்ணம் இல்லாமல், இது தெய்வத்தின் கருணையினால் நடக்கின்றது என்று எண்ணினால் அது தான் நல்ல சிவ தர்மம்.

இதற்கு மணிமேகலையில் ஒரு சான்று சொல்லுகிறார். மணிமேகலை கையிலே ஒரு அருள்ஓடு ஏந்தி ஆதிரை என்ற பெண்ணின் வீட்டிற்கு முன்னே போய், பிச்சை என்று நிற்கிறாள். ஒரு பிடி கையில் எடுத்துக்கொண்டு வந்த ஆதிரை நல்லாள், அப்படியே அந்த ஓட்டில் போடவில்லை. மணிமேகலையை மூன்று முறை வலமாக வந்து,

"பாரமண்டலம் பசிப்பிணி அறுகென
ஆதிரை நல்லாள் அன்னமிட்டாள்"

அந்த அன்னத்தை இந்தப் பார மண்டலம் முழுதும் பசிப் பிணி தீரவேண்டும் என்று வேண்டி

அன்னமிட்டாள். எவ்வளவு பெரிய உள்ளம்! எப்படியும் இந்த உலகமெல்லாம் பசிப்பிணி அறவேண்டும் என்று எண்ணி இட்டனள். அவர்கள்தான் அறம் சுரந்த உள்ளம் உடையவர்கள். அப்படி நடைமுறையில் உள்ளவர்களைத் தான் நல்ல சிவயோகம் பயின்றவர்கள் என்பார்கள். நல்ல சிவதர்மத்தால், நல்ல சிவயோகத்தால், நல்ல சிவ ஞானத்தால் இந்த மூன்று நிலைகளையும் கைக்கொண் டால் 'நான்' என்பது அழியும்.

யோகம் என்றால் வேறு ஏதோ என்று நினைக்க வேண்டாம். எதையாவது நீங்கள் எண்ணினாலே யோகம்தான். ஒரு பொருளை ஆழமாகச் சிந்தித்தாலே, பக்கத்திலே யார் வருகிறார்கள் என்றுகூடத் தெரியாமல் சிந்தித்தாலே யோகம்தான். இல்லிங்க, அட்டாங்க யோகம் என்று எல்லாம் இருக்கிறதே என்று வினவுவார்க்கு, இந்த யோகத்தையே செய்யமுடியாதவர்கள் அந்த யோகத்திற்கு எங்கே போவது? பிறருக்குத் தீங்கு செய்யவே சிலர் யோகம் செய்வார்கள். அது யோகமாகாது. அந்தச் சிந்தனை நல்ல சிவ யோகமாகாது.

நல்ல எண்ணத்தால் சிந்தித்தல், நல்ல எண்ணத்தால் ஈதல், நல்ல எண்ணத்தால் தெளிதல் (தெளிவு – ஞானம்) இவை அனைத்துக்கும் அடிப்படை "நான்" என்ற எண்ணத்தை விடுவதே. அப்படி விடுத்தால் உங்களுக்குப் பின்னால் பெரும் நலங்கள் காத்திருக்கின்றன. அப்படி என்ன கிடைக்கும்?

"ஆரேனும் காணா அரன் அங்கே தலைப்படும் காண்"

இப்படி யாரேனும் அன்பு செய்ய, உலக நலம் கருதி எண்ணுதல், ஈதல், தெளிதல் முதலிய செயல்களை மேற்கொள்கின்றவர்கள் யாரேனும் ஒருவர் இருந்து, அவரும் அன்பு செய்தல் வேண்டும். அறம் இருக்கும். அன்பு இருக்காது. அன்பு இருக்கும் அறிவு இருக்காது அறிவு இருக்கும் அன்பிருக்காது. அப்போது அன்பு செய்ய, யாராலும் காணமுடியாது என்று சொல்லு கின்றார்களே அந்த அரன் வெளிப்படும். பரம்பொருள் தானாக

வெளிப்படும்: பரம்பொருள் என்று சொல்லுகின்ற போது, எனக்குக் காட்டுகின்ற தெய்வத்தை நான் கண்டு மகிழவேண்டும். இதற்கு ஆதாரமாக இருப்பது முதலில் பணியில் கலந்து' பிறகு பதியில் கலக்கவேண்டும், என்று இந்தத் தலைப்பை விளக்கினேன்.

கலந்து கலத்தல் என்பதற்குப் பேரின்ப உரையாசிரியர் பொருள் சொல்லும்போது, "தன் தவத்தினை வியந்தது" என்று சொல்லுவார். 'என்ன புண்ணியம் செய்தனை நெஞ்சமே இருங்கடல் வையத்து' என்று ஞானசம்பந்தப் பெருமானே மகிழுகின்றார். இந்தப் புண்ணியம் என்பது பதி புண்ணியம். இறைவனை எண்ணியே செய்வது. இரண்டு வாழைப்பழம், கொஞ்சம் கற்பூரம், ஒரு தேங்காயை எடுத்துக் கொண்டு போய் அர்ச்சனை செய்யச் சொல்லும்போது, 'என் பேர் இதுங்க, என் நட்சத்திரம் இதுங்க' என்று சொல்லுகிறார்கள். ஏன் கடவுள் பெயருக்குச் செய்வதுதானே? சிவார்ப்பணம் என்று சொல்லி எந்தக் காரியத்தையும் செய்வதுதானே? இந்தப் பண்டங்கள் அனைத்தையும் கொடுத்தவன் அவன் தானே! அவன் கொடுத்த பொருட்களை அவன் முன்னே வைத்துவிட்டு இவன் நட்சத்திரத்தையும், பெயரையும் சொல்லிக் கொள்கிறானே! சிவார்ப்பணம் என்று எதையும் செய்தால் அதுவே சிவ புண்ணியம். வினை செய்யாமல் பணி செய்தால் அதுவும் சிவ புண்ணியம். வினையைச் செய்தால் பதியைச் சார முடியாது.

ஒரு பத்து நாள் சொற்பொழிவு செய்தார் ஒருவர். நிறைவு செய்கின்ற அன்று தட்டு நிறைய பழம். பூ, மாலை, எல்லாம் கொண்டு வந்து வைக்கின்றார்கள். மன நிறைவோடு கொடுக்கின்றார்கள். சொற்பொழிவு செய்த வரும் மகிழ்கின்றார். என்ன நினைத்து மகிழ்கின்றார் தெரியுமா? இந்த பத்துநாளும் இந்தப் பணியைச் செய்ததால்தானே இந்தப் பூ, மாலை, பழம் எல்லா வற்றையும் மனம் மகிழ்ந்து கொடுக்கின்றார்கள் என்று மகிழ்கின்றார். இந்தப் பத்துநாள் உழைப்பு அவருக்கு

இல்லையென்றால் இதெல்லாம் கிடைக்குமா? நல்லசிவ தர்மத்தால், நல்ல சிவ யோகத்தால், நல்ல சிவ ஞானத்தால் இவையெல்லாம் அவருக்குக் கிடைத்தன. சென்ற பத்து நாட்களில ஒரு வேளை அவர் மகிழாமல் கூட இருந்திருக்கலாம். ஆனால் இந்த மரியாதைகளைப் பார்த்தவுடன் மகிழ்கின்றார். பண்டத்தைப் பார்த்துப் பண்பில் மகிழ்கின்றார். இதுவே கலந்து கலத்தல்.

ஆகையால் நம் மனதிலே ஒரு உறுதியான எண்ணத்தைத் தெளிவு செய்து கொள்ளவேண்டும். ஒரு புண்ணியம் இல்லாமல் ஒருவரையொருவர் கலந்து மகிழ்வதில்லை. பரம்பொருளாகிய இறைவனும், சீவர்களாகிய நாமும் நீண்ட தூரத்தில் இருக்கின்றோம். நாம் கூட ஒரே இடத்தில் இருந்தா வந்திருக்கிறோம். நீண்ட இடைவெளியில் இருக்கிறோம். ஒருவரை ஒருவர் சந்திக்க வருகின்ற இடைவெளியில் பல சிரமங்களைச் சந்தித்திருக்-கலாம். அத்தனை இடர்ப்பாடுகளையும் ஏற்றுக் கொண்டு தான் வந்திருக்கிறோம். அது ஒரு தவம்.

நாம் மிகவும் கீழ் நிலையில் இருக்கின்றோம். நம்மைச் சந்திக்க இருக்கின்றாளே அந்தப் பெண், மிகவும் மேல் நிலையில் இருக்கின்றாள். இவர்கள் இரண்டு பேரும் சந்திக்க வேண்டும் என்றால் இடையில் எத்தனையோ நிகழ்ச்சிகள் நடந்தேற வேண்டும். குருநாதன் உயர்ந்த இடத்தில் இருக்கின்றான். மாணவன் கீழ் மட்டத்தில் இருக்கின்றான். இவன் மேலே செல்லுவதும் கடினம். அவன் அங்கிருந்து கீழே இறங்கி வருவதும் கடினம். இப்போது யார் முதலில் கிளம்புவது? இந்த மாணவனுக்கு மேலே ஏறிப் போகத் தெரியாது. அதனால் ஆசாரியன் தான் கீழே இறங்கி வந்து இவனை அழைத்துச் செல்ல வேண்டும். அவன் வந்து அழைத்தாலன்றி, இவனால் மேலே ஏறிப் போக முடியாது.

'நான், 'நான்' என்று சொல்லிக் கொண்டிருப்பானே தவிர மேலே போய் தானே இறைவனை அடைய மாட்டான். அதனால்தான் கிட்டே வந்திருந்து குரல்

கொடுத்துவிட்டு, இந்த சீவன் அவனைத் திரும்பிப் பார்த்தவுடன், இன்னும் கொஞ்ச தூரம் போய்விடுகின்றான். இப்படிக் குரல் கொடுத்துக் கொண்டே போகிறான் இறைவன். இவன் அவனுக்குப் பின்னால் போய்க் கொண்டேயிருக்கிறான். கடைசி இடம் வரையிலும் இறைவன் குரல் கொடுத்துக் கொண்டே போகிறான். இந்தச் சீவனை அழைத்துக் கொண்டே போகிறான்.

இப்படி நடத்தி அழைத்துச் செல்லுகின்ற சக்திக்கு திரோதானம் என்று பெயர். மறைப்பாற்றல் என்றும், நடப்பாற்றல் என்றும் பெரியவர்கள் சொல்லுவார்கள். இதைப் பேய்த்தேர் என்றும் கானல் நீர் என்றும் சாத்திரங்கள் சொல்லும். இவையெல்லாம் பரிபாஷைகள். கானல் நீர் எப்படி தூரத்தில் இருக்கும் போது நீர் இருப்பது போலத் தோன்றி கிட்டே போகும் போது மறைந்து இன்னும் கொஞ்சம் தள்ளித் தோன்று கின்றதோ, அப்படியே இறை உணர்வு வந்தவுடன் இந்தச் சீவனைச் கொஞ்சங் கொஞ்சமாக, காட்டிக் காட்டி அழைத்துக் கொண்டே போகிறான். "சுற்றுமின் சூழ்மின் தொடர்மின் விடேன்மின் பற்றுமின்" என்று சொன்ன மணிவாசகர், 'ஒளிக்கும் சோரனைக் கண்டனம்' என்பார். அதைப் பற்றப் பற்ற ஒளிந்து கொண்டே போய்க் கொண்டேயிருக்கின்றான். அவனே வந்து நம்மை அழைத்தாலன்றி நாமே போய் அவனைப் பற்ற முடியாது.

இப்படிச் சொன்னால் நீங்கள் சொல்லுகின்ற ஒரு நியாயம் தப்பாகுமே என்று கேட்பீர்கள். பூனைக்குட்டி முறைமை, குரங்குக்குட்டி முறைமை என்று சொல்லுவார் -களல்லவா? அப்படி குரங்குக் குட்டி முறைமையில் சீவன் தானே சென்று இறைவனைப் பற்றித் கொள்ளக் கூடாதா? இந்த இடத்தில் ஒரு சிறு பிழையை நாம் செய்கின்றோமோ என்று எனக்கு ஒரு ஐயம். முதலிலே அவன் பற்றி விடுவான். பிறகு நாம் அவனைப் பற்றிக் கொள்ளுவோம். "தொட்டுவிடத் தொட்டுவிடத் தொடரும்" என்று ஒரு

கவிஞன் பாடுவான். அவன் தொட்டு விட்டால் நாம் தொடருவோம். ஒருமுறை ஆசாரியன் தொட்டுவிட்டால், மாணவன் அவனைத் தொடருவான்.

சரி, சாதாரணமாக நாம் பார்க்கின்ற காட்சியையே எடுத்துக் கொள்வோம். ஒரு பெண் ஒரு முறை சிரித்துவிட்டால், அவள் பின்னாலேயே ஓடுகின்றானே! அதே போலத்தான், இறைவன் இலேசாக மின்னி மிளிர்வானேயானால், சீவன் அவனைப் பின் தொடர்ந்தே சென்று கொண்டிருப்பான். அவன்தான் நம்மை வந்து ஆட்கொள்ள வேண்டும். நாமாக அவனைச் சென்று அடையமுடிவதில்லை. ஆக இந்த இரண்டு முறைமைகளும் ஒன்றின்பால் நிகழ்வதே தவிர, இரண்டு முறைமைகள் இரண்டிடத்தில் நிகழ்வதில்லை சைவ சித்தாந்தத்திற்கு ஒவ்வாத ஒன்று இது. இரண்டு நிகழ்ச்சிகளும் ஒன்றின்பால் நிகழும். அதனால்தான் சைவமும், அசைவமும் ஒரு பொருள் என்று சொன்னார்கள். சைவம், அசைவம் இரண்டும் ஒரே பொருள்தான். இரண்டு பொருள் கிடையாது. மாடு தானாகப் பால் சுரந்தால் அது சைவம். அதை அறுத்து எடுத்தால் அசைவம்.

அந்தத் தெய்வம் தனக்கு எப்படி ஆதாரமாக இருந்தது என்பதையும் அந்த அந்தக் கால கட்டங்களில் உதவிய, அந்த உணர்ச்சியைத் தந்த "காலத்தையே தெய்வம் என்று எண்ணி மகிழ வேண்டும். ஆகையினாலே தன் தவத்தை வியந்த நிலை இது.

அந்தப் பெண், அல்லது குருநாதன் மேலே மிக உயர்ந்த இடத்தில் நம்மால் அளக்க முடியாத இடத்தில் இருக்கின்றான். "அளக்கலாகா அளவும் பொருளும் துளக்கலாகா நிலையும் தோற்றமும். வறப்பினும் வளர்ந்தரும் வண்மையும் மலைக்கே" என்ற வண்ணம் இருக்கின்றான். ஆசாரியன் மலைபோல இருக்கவேண்டும். மாணவன் ஆசாரியனை அளந்து பார்த்துவிட்டு, இவ்வளவுதான் எங்கள் ஆசிரியர் என்று சொல்லிவிடக்

கூடாது. அப்படி மலைத்திட விளங்கினாலும், அவன்தான் இறங்கி வரவேண்டும். சிலபேர் சொல்லுவார்கள், 'நாம அந்த அளவுக்கு இறங்கிடக் கூடாதுங்க'என்று. அது சிறப்பல்ற. தன் தகுதி கெடாமல் இறங்கவேண்டும்; இறங்கி வந்து எந்த நிலையிலும் ஆட்கொள்ள வேண்டும்.

இந்தச் சீவன் எங்கே இருந்தான் என்ற கருத்தைத் தெரிவிக்கின்றார். மாயையே நிறைந்திருக்கின்ற உலகிடையே வாழ்ந்து கொண்டிருக்கின்றான் சீவன். ஆனால் அந்த உலகமே தெளிவுதரும் உலகமாக இருக்கின்றது. இந்த உலகம் மாயையால் ஆனது. மாயை என்ற சொன்னவுடன் கன்மம், மாயை என்றெல்லாம் வந்துவிடும். இப்படிக் கன்மமே வடிவாக இருக்கின்ற உலகம், மாயையே வடிவாக இருக்கின்ற உலகம், இதிலே இந்த சீவன் வாழ்ந்து கொண்டிருக்கின்றான். ஆனால் அவனை ஆட்கொள்ள வந்த சிவமோ, மாயையே இல்லாத இடத்தில் இருக்கிறான். அதனால் இவன் கீழே இருக்கிறார்கள். அவன் மேலே இருக்கின்றான்.

இந்த நல்ல சிவ தர்மம், நல்ல சிவ யோகம், நல்ல சிவ ஞானம் என்று சொன்னோமே, அந்தப் பதி புண்ணியம் இவர்களை அலைத்து, அலைத்து இருவரையும் ஒன்றாகக் கொண்டு சேர்த்துவிடும். **நீங்கள் பணியாற்றுகின்ற போது, அவன் நினைவாகவே பணியாற்ற வேண்டும்.** அதுதான் ஒரு பக்கமாகக் காற்றடித்தல் என்பது. அந்தப் பொருளை அடையவேண்டும் என்று எண்ணிக் கொண்டே செயல்பட்டுக் கொண்டேயிருக்க வேண்டும். வேறு எங்கும் கவனம் திரும்பக் கூடாது.

இராமேஸ்வரம் செல்ல நினைக்கும் ஒருவர் பயணச்சீட்டு எங்குவேண்டு மானாலும் கொடுங்கள் என்று கேட்கலாமா? அல்லது எந்த வண்டியிலேனும் ஏறி உட்கார்ந்து பயணம் செய்யலாமா? எண்ணமும், செயலும் ஒருமிக்க இருக்கவேண்டும். அப்போதுதான் போய்ச் சேரவேண்டிய இடத்திற்குப் போய்ச் சேரமுடியும். எண்ணந்தான் நம்மைக் கொண்டு சேர்க்கிறது. செயல்,

செயல்படவைக்கின்றது. சிவ புண்ணியம் நம்மை அலைக்கழிக்க மேல் கடலில் இருந்தாரையும், கீழ்க் கடலில் இருந்தாரையும் ஒன்று சேர்க்கும்.

அப்படி ஒன்றாகச் சேர்ந்தவுடன், இதுவரையிலும் காணமுடியாத பொருளைக் கண்டவுடனே, நான் என்ன தவம் செய்தேன், என்ன தவம் செய்தேன் என்று எண்ணிக் கொள்ளும்.

## தெய்வத்தை மகிழ்தல்

***வளைபயில் கீழ்கட னின்றிட மேல்கடல் வான்நுகத்தின்***
***துளைவழி நேர்கழி கோத்தெனத் தில்லைத்தொல் லோன்கயிலைக்***
***கிளைவயின் நீக்கிஇக் கெண்டையங் கண்ணியைக்***
***கொண்டுதந்த***
***விளைவையல் லால்விய வேன்நய வேன்தெய்வ மிக்கனவே.***

கீழ்க்கடல்தான் மலமாயை நிறைந்த உலகம். பிறவிக்கு ஏதுவாகிய உலகம். பிறந்துத் துன்பப்படுகின்ற உலகம். அதனால்தான் வளை பயில் என்று சொன்னார். வளை என்றால் சங்கு. அவை உயிருடன் வாழுகின்ற வரையில் கூட்டமாகவே வாழும் என்று அந்த மரபுக் குரியவர்கள் சொல்லுவார்கள்.

நாமெல்லாம் ஏன் இவ்வளவு கூட்டமாக இருக்கின்றோம்? "விட முடியலிங்க, சொந்தம், பந்தம், இதையெல்லாம் பார்க்க வேண்டாமா? நீங்க விட்டுட்டு வந்துடறீங்க! நாங்க இதையெல்லாம் பார்க்க வேண்டாமா?" என்று கேட்பார்கள். இதற்கு. என்ன காரணம்? பற்று உடையவர்கள். ஆனால் எப்போது வேண்டுமானாலும் பற்றை விடுதற்கு உரியவர்கள். அதனால்தான் சங்கை உதாரணமாகச் சொன்னார்கள். சங்கானது அந்த ஊனை விடுத்து, தூய்மையாகிப் பிறருக்குப் பயன்படுவது. உள்ளே இருக்கின்ற தசை தீர்ந்தவுடன் கடலை விட்டுக் கரையை வந்து அடைந்து விடும்.

அப்படியே மனிதனும் எதுவரை மனதிலே மன மாயைகள் இருக்கின்றனவோ அதுவரையிலும் பொதுத் தொண்டுக்கே வரமாட்டான். மாயையிலேயே அகப் பட்டுக் கொண்டிருப்பான். படிக்க வரமாட்டான். எதற்கும் வரமாட்டான். ஏதாவது கேட்டால், "நேரமில்லீங்க, நேரம் எங்கெங்க இருக்குது" என்று சொல்லித் தட்டிக் கழித்துக் கொண்டிருப்பான். வீட்டிலே சும்மாவே உட்கார்ந் திருப்பார். பாடத்துக்கே வரமாட்டார். என்னங்க? என்று கேட்டால் நேரமில்லீங்க என்பார். அதற்கென்ன காரணம். இந்த உலகம், மல மாயைகளில் சிக்கிக் கொண்டிருப்பது தான்.

கீழ்க்கடலில் ஒரு கொம்பைப் போட்டார்கள். மேலைக் கடலில் ஒரு நுகத்தடியைப் போட்டார்கள். இந்த இரண்டும் யாருடைய முயற்சியும் இல்லாமல் காற்றின் அலைப்பினாலே, அந்த நுகத்தடியில் உள்ள துளையில் போய், இந்த நேர்க்கொம்பு கோத்துக்கொண்டதாம். இது எப்படிச் சாத்தியமானது? இதில் உள்ள சிரமத்தைப் புரிந்து கொண்டால்தான் இறைவனது உயர்வும், மனிதனது தாழ்வும் விளங்கும். எத்தனை ஊழிக்காலம் ஆகும்? எத்தனை யுகங்களாகும் இப்படி நடைபெறுவதற்கு!

**"எல்லாப் பிறப்பும் பிறந்திளைத்தேன் எம்பெருமான்"**

என்பார் மணிவாசகர். ஒவ்வொரு பிறப்புக்கும் எத்தனையோ ஊழிக்காலம் ஆகும். எடுத்தவுடனே "புல்லாகிப் பூடாய்..." என்று பாடிய இந்த பத்து வரிகளுக்குள் அடங்கிவிடவில்லை. புல் பிறவியை எடுத்துக் கொண்டால் அதில் எத்தனை வகைகளோ, அத்தனை வகைப் பிறவியும் எடுத்து இருக்கவேண்டும். இந்த ஓரறிவு உயிர்கள் எத்தனைக்கோடி வகைகளோ அத்தனை வகையிலும் பிறவி எடுத்திருக்க வேண்டும்; அனுபவங்களைப் பெற்றிருத்தல் வேண்டும். புல், பூண்டு, செடி, கொடி, மரம், என்று ஓரறிவு உயிர்கள் எத்தனை! அத்தனையிலும் எத்தனை வகைகள்! ஒவ்வொன்றிலும்

அனுபவம் பெற எத்தனைப் பிறவிகள் எடுத்திருப்போம்? எண்ணிப்பார்த்தால் மலைப்பாக இருக்கின்றது. அதனால் தான் என்பிறவி எண்ணில் அடங்காது, "எழுகடல் மணல் அளவிடின் அதிகம் எனதிடர் பிறவி" என்பார்கள்.

அப்படி எத்தனையோ ஊழிகளுக்குப் பிறகு அந்தக் கீழ்க்கடலில் இட்ட கழி, மேலைக் கடலுக்கு வந்து சேர்கின்றது. அப்படி வந்து சேர்வதற்குச் செய்த புண்ணியம் இருக்கின்றதே அதுதான் பெரிய புண்ணியம். ஏதோ இரண்டு தேங்காயை உடைத்துவிட்டால் புண்ணியம் கிடைத்துவிடும் என்று எண்ணிவிடாதீர்கள். அப்படி எண்ணினால், உங்களை நீங்களே ஏமாற்றிக் கொண்டீர்கள் என்று அர்த்தம்.

இந்தப் பாடலில் ஒரு கருத்து மிகவும் ஆழமாகச் சொல்லப்பட்டிருக்கின்றது. மேலைக் கடலுக்கும், கீழைக் கடலுக்கும் இடையில் உள்ள தூரம், அதைக் கடக்க இந்த சீவன் எடுக்கின்ற பிறவிகள் எண்ணில் அடங்காது. அதனால் நீங்கள் கோயிலுக்குப் போகக் கூடாது என்று நான் சொல்ல வரவில்லை. இப்போதாவது அந்த எண்ணம் வந்திருக்கின்றதே!

கோயிலுக்குச் சென்று இறைவன் முன்னே நிற்க வேண்டும், உள்ளம் உருகி நிற்க வேண்டும் என்ற எண்ணமாவது வந்திருக்கின்றதே! அதுவே சிறப்புதான். ஆனால் இறைவனுக்கு ஏதாவாது கொடுத்துப் புண்ணியத்தைச் சம்பாதித்து விடலாம் என்று மட்டும் எண்ணினால் நீங்கள் ஏமாந்து விடுவீர்கள். ஆனால் இக்காலத்தில் ஒன்றைப் பெற எதையாவது கொடுக்கவேண்டும் என்ற எண்ணம் வளர்ந்து விட்டது. டாக்டர் பட்டம் கூடக் கொடுத்துப் பெற்றுவிடலாம். அதற்குத்தான் டாக்ட "ரேட்" என்று சொல்லுகிறார்கள் போலிருக்கின்றது.

இறைவனுடைய கருணையை மட்டும் நம்முடைய புண்ணியத்தால்தான் வாங்கமுடியும். அந்தப் புண்ணியம் 'நான்' அழிந்த நிலையில் செய்யும் புண்ணியம். அதை எண்ணத்தால் செய்யலாம். உணர்வால் செய்யலாம். உரையால் செய்யலாம், உடலால் செய்யலாம். எப்படியும் செய்யலாம்.

தில்லைத் தொல்லோன் – பழமையாக இருக்கிறான் தில்லையிலே. அவன் நம்பொருட்டுக் கைலை வெளியிலே இறங்கி வந்திருக்கின்றான். அது ஞானவெளி அந்த ஞானவெளியிலே தன் உற்றார் உறவினரோடு அவன் இருக்கிறான். கிளைவயின் என்றால் சுற்றத்தார். கிளை என்பதற்கு ஒரு விளக்கம். 'செல்வர்க்கு அழகு செழுங்கிளை தாங்குதல்' என்று சொல்லியிருக்கிறார்கள். பட்டுப்போன கிளையைத் தாங்கக் கூடாது. நல்ல மனம், நல்ல குணம், நல்ல ஈகை உடையாரைச் செழுங்கிளை என்று சொல்லுவார்கள். நல்ல தொண்டுள்ளம் படைத்தவர் களையும் செழுங்கிளை என்று சொல்லுவார்கள். என்ன கொடுத்தாலும் திருப்தியில்லாமல் இருக்கின்றார்களே அவர்கள் பட்டுப்போன கிளை என்று அர்த்தம். அவர்களைத் தாங்கவே கூடாது. பெருமான் செழுங்கிளை -யோடு இருக்கிறார். அப்படி அவர் செழுங்கிளையுடன் இருக்கும் இடத்தைவிட்டு (கைலையில் இருந்து) நீங்கிவிட்டார். அவனுக்குக் கூட சுற்றம் இருக்கிறதா? ஏன் இருக்கக் கூடாதா?

> **"கொடுத்தலும் இன்செல்லும் ஆற்றின் அடுக்கிய**
> **சுற்றத்தால் சுற்றப் படும்".** **(525)**

இல்லையென்றால் அனைத்தும் சுற்றப்படும். கொடுத்தலும் இன்சொலும் ஆற்றின் இறைவன் கொடுக்கின்றான். இனிமையாகவும் இருக்கின்றான். அதனாலே அதை அனுசரித்த சுற்றம் அங்கே இருக்கும். அந்தக் கிளையிலிருந்து பிரித்து என் முன்னே கொண்டு

வந்து நிறுத்தும். கையிலிருந்த தன் சுற்றத்தாரிடம் இருந்து பிரித்து என்னோடு கொண்டு வந்து சேர்க்கும். எது தந்தது?

காலம் தந்தது. காலம் என்றால், காலத்தால் செய்த பதி புண்ணியம் என்னிடம் கொண்டு வந்து தந்தது. அதனால்தான் ஒரு பெரிய நம்பிக்கையோடு இருக்கிறான். **கடவுள் எல்லாவற்றையும் தருவான் என்று நம்பிக் கொண்டு இருக்கிறார்கள். கடவுள் ஒன்றையும் தரமாட்டான். என்னங்க இவ்வளவு மோசமாகச் சொல்லு கின்றீர்களே என்ற ஐயம் உங்களுக்கு வரும். நீங்கள் உழைத்தால் உழைப்புக்கு ஏற்றவாறு தருவான். உழைப்பின்றி எதையுமே தரமாட்டான்.** அதனால்தான் திருவள்ளுவர் –

**"பெருமைக்கும் ஏனைச்சிறுமைக்கும் தம் தம்**
**கருமமே கட்டளைக் கல்"** **(505)**

என்று சொன்னார். நீங்கள் என்ன விரும்பு கின்றீர்களோ, அதற்கேற்ற உழைப்பை எடுத்துக் கொள்ள வேண்டும். உழைப்பில்லாமல், "கடவுள் எனக்குத் தரவில்லை. இது என் விதி" என்று சொல்லாதீர்கள். அப்படிச் சொல்லச் சொல்லக் கோபமே வந்துவிட்டது திருவள்ளுவருக்கு –

**"பரந்து கெடுக உலகியற்றியான்"** **(1062)**

என்று சாபம் கொடுப்பதுபோல் சொல்லிவிட்டார். அதனாலே, இறைவன் நமக்குச் செய்வான் என்று எண்ணுவதைவிட்டு, இறைவன் கருணையைப் பெறுவதற்கு நாம் என்ன செய்ய வேண்டுமென்று சிந்தித்துச் செயலாற்ற வேண்டும். உழைப்பை நல்க வேண்டும். பணியை மேற்கொள்ள வேண்டும். பணி செய்வார்க்கு அன்றி இறைவன் எதையும் நிறைவாகச் செய்வதில்லை. அதற்காக அவர்களைச் சாக அடிப்பதில்லை. உங்களுக்கு என்ன செய்ய வேண்டுமோ அதை மட்டுமே செய்து கொண்டிருப்பான். உயர்வு

வேண்டுமானாலும், தாழ்வு வேண்டுமானாலும் அதற்கு நீங்கள் உழைத்தாக வேண்டும்.

இறைவனைக் கைலையிலிருந்து பிரித்துக் கொண்டு வரவேண்டுமென்றால், நல்ல பணி நீங்கள் செய்திருக்க வேண்டும். அதைத்தான் சிவபுண்ணியம் என்று சொல்லு -வார்கள். அப்படியில்லையென்றால் பிரிக்க முடியாது. பிரிக்க வேண்டும் என்றால் நாம் நல்ல பண்புகளை வளர்த்துக் கொள்ள வேண்டும்.

அந்தப் பண்பைப் பதி புண்ணியம் என்றார்கள். சின்னக் குழந்தையிலிருந்து பால் கொடுத்து, பருப்பும் நெய்யும் கலந்த சோறு கொடுத்து, மற்ற மற்ற பண்டங்களைக் கொடுத்து, இனிமையான மொழிகளைப் பேசி, பாராட்டிச் சீராட்டிப் பாட்டுப்பாடி உறங்க வைத்து வளர்த்த தாயை மறந்து, பேணிய தந்தையை மறந்து, மற்ற மற்ற சுற்றத்தாரை மறந்து, என்னைப் பார்த்தவுடனே சிரித்து, என் பின்னாலேயே வந்த அந்தப் பெண், நான்தான் அவளுக்கு உரியவன் என்று நினைக்கின்றதே அது எப்படி? அப்படி நினைக்குமாறு எனது அன்பும், என்னுடைய உணர்வும், என் நெகிழ்வும், அமைந்த காரணத்தாலே என்னையே எல்லாம் என்றும் நினைக்கின்றாள் அந்தப் பெண். அதுபோலப் பண்புகள் நிறைந்த சீவன இறைவனை ஈர்க்கின்றது. அவனைக் கைலையிலிருந்து பிரித்துக் கொண்டு வருகின்றது.

என்னுடைய உணர்வு எப்படி அந்தப் பெண்ணை அவளுடைய உறவினரிடமிருந்தும், அவளது சூழலி லிருந்தும் பிரித்ததோ, அப்படியே என்னுடைய உயர்ந்த உணர்வுகள் கைலையிலிருந்து இறைவனைப் பிரித்துக் கொண்டு வந்துவிடும். அவன் முடியாது என்றாலும் தானே இறங்கி வந்துவிடுவான். இந்தப் பதிபுண்ணியம் அப்படிப் பிரித்துக் கொண்டு வரும். இந்த நிலைக்கு உயர பதி புண்ணியமாகிய ஒன்றை நாம் செய்யப் பழக வேண்டும். இந்தக் கருத்தை வலியுறுத்த மேலும் சொல்லுவார்:

இக்கெண்டையம் கண்ணியை – இதைக் கெண்டை அம் கண்ணியை என்றும் சொல்லலாம். அம் என்றால் அழகு. கெண்டை என்பது ஒருவகை மீன். மீன் அப்படியும் இப்படியும் பிறண்டு பிறண்டு நீந்தும்போதும், பார்க்கும் போதும் அதன் கண்கள் மின்னும் என்றும் உரை சொல்லுவார்கள். அதற்காக இதைச் சொல்லவில்லை. கெண்டை மீன் இருக்கிறதே, அது எந்தக் குளத்தில் இருந்தாலும் அந்தக் குளம் மிகவும் சுத்தமாக இருக்கும். அழுக்கையெல்லாம் உண்டு நீரைச் சுத்தமாக வைத்துக் கொள்ளும். **ஆசாரியனாக நின்ற அந்தப் பெண், ஆன்மாவாகிய அந்தத் தடாகத்தில் இறங்கி, அவனுடைய அறியாமையாகிய அழுக்கையெல்லாம் உண்டு, அவனைத் தூய்மை செய்வாள் என்பதற்காகக் கெண்டையை உதாரணமாகச் சொன்னார்.** அப்படிப்பட்ட உயர்ந்த பெண் அவள்.

அவனுடைய அறியாமையாகிய மை (அறியாமை) யை அகற்றுகிறாள். இதை அடையாளமாக்கவே கண்ணிற்கு மையிட்டுக் காட்டினார்கள். கண்ணிலே எப்படி மை வைக்கவேண்டும் என்று தெரியுமோ? இரப்பையை நீக்கி உள்ளேதான் மையை வைக்க வேண்டும். வேஷம் போட்டது போல் வெளியில் எல்லாம் பூசிக் கொள்ளக் கூடாது. அதனால்தான் அதற்கு உண் கண் என்று பெயர். பெண்ணால் செய்து கொள்ளப்படும் ஒவ்வொரு அலங்காரத்திற்கும் ஒவ்வொரு பொருள் உண்டு. வெறும் அழகை எடுத்துக்காட்ட அல்ல.

நான் செய்த பதி புண்ணியம்தான் விளைவைத் தந்திருக்கின்றது. அந்த விளைவைத்தான் தெய்வம் என்று நான் வியப்பேன். இதைவிட வேறொரு தெய்வம் இருப்பதாக நான் எண்ண மாட்டேன்.

என் உழைப்பையன்றி வேறு தெய்வமில்லை. இந்த உழைப்புத் தான் எனக்கு உயர்ந்த ஒரு பொருளைத் தருவதும், உயர்ந்த வாழ்க்கையைத் தருவதும், அருள் நிலையில் என்னை உயர்த்துவதும், என் அறியாமையை நீக்குவதும், அனைத்தும் என் உழைப்புத்தான். உழைப்பைத் தவிர தெய்வம் வேறொன்றும் இல்லை. இதையே "உழைப்பின் வாரா உறுதிகள் உளவோ" என்பார். ஆக நமக்குத் தேவை உழைப்புத்தான் என்று இந்தப் பாடல் தெரிவிக்கிறது. தெளிவிக்கிறது.

மனிதன் சிந்தனைக்குரியவனாக வந்திருக்கிறான். மற்ற பிறவிகளைப் போல் இல்லை. அறிவினாலும் சிந்தனையாலும் உயர்ந்து போகின்ற மனிதன் பிறரை உயர்த்த வேண்டும் என்ற நோக்கத்தோடு, எண்ணத் –தாலும், சொல்லாலும், செயலாலும், முனைப்பொழிந்து செயல்படுதல் வேண்டும். இந்த மூன்றும் நிகழ்வதற்கு சக்தியைக் கொடுத்திருக்கிறான். இந்தச் சக்தியை நாம் சேவைக்காகப் பயன்படுத்த வேண்டும். **தேவைக்காகக் கொஞ்சம் பயன்படுத்தினாலும், சேவைக்காகப் பெரிதும் பயன்படுத்தவேண்டும்.** அதனால்தான் சிவனுக்கு சேவுக்கொடி (எருதுக் கொடி) எப்படி எருதானது. எதைக் கொடுத்தாலும் சாப்பிட்டுவிட்டுக், கடமையைச் சலியாத வகையில் செய்து கொண்டிருக்கின்றதோ, அப்படி நாமும் பயன் கருதாமல் பணி செய்து கொண்டிருக்கவேண்டும். அப்படி நாமும் பற்றற்ற வகையில் பணியாற்றினால் சிவ புண்ணியமாக விளையும். அது உங்களை உயர்த்தும்.

மல மாயைகளினால் நிறைந்தது இவ்வுலகம். இதை இரட்டுற மொழிதல் என்ற கருத்தோடு சொல்லுகிறார். இந்த உலகம் மாயையால் ஆனதுதான். ஆனால் நேயத்திற்கு உரியது. இங்குதான் நேயத்தைக் காட்ட முடியும். வேறு எங்கும் நேயத்தை காட்ட முடியாது. நேயத்தை

நெய்யும் பாலுமாக இறைவனுக்கு ஆக்கலாம். "நேயமே நெய்யும் பாலும்". ஆன்ம நேயம் இல்லாமல் நெய்யும் பாலும் கொண்டு சென்று இறைவனுக்கு ஆட்டினால் அது உயர்வாகுமா?

"பொக்கம் மிக்கவர் பூவும் நீரும்"

கொண்டு சென்றால் "நக்கு நிற்கும் அவர் தம்மை நாணியே" செய்துவிடுவான். ஆகையால் நேயத்தைக் காட்ட இதைவிடச் சிறந்த இடம் கிடையாது. இறைவன் நம்மிடமிருந்து எதிர்ப்பார்ப்பதும் நேயத்தைத்தான் என்பதை உணர்ந்து கொள்ளவேண்டும். இதைச் சொல்லுகின்ற போது சிவஞான போத சூத்திரம்

"மாயா தனு விளக்காம்"

என்று சொல்லும். இதை இரட்டுற மொழிதல் என்ற முறையில் சொல்லி இருக்கிறார். மாயா தனு, விளக்காம். மாயையால் ஆன தனு, இது விளக்கு போன்றது. இதை வைத்துக் கொண்டுதான் வாழ்க்கையில் விளக்கம் பெறவேண்டும். எது ஊனமாக இருந்ததோ அதுவே ஒளியாக இருக்கின்றது.

வளைபயில் கீழ்க்கடல் என்பதினாலே இங்கெல்லாம் விட்டு வெளியேறும் தகுதியுடைய மக்கட் பிறவி நிறைந்த உலகம் இது. அதனால் மாயையோடும், மலங்களோடும் பின்னிப் பிணைந்து வாழும் உலகம். இந்த மக்கள் நெருங்கி வாழ்கின்ற உலகம். எத்தனையோ வகையில் துன்பத்தைக் கொடுத்துவிட்டார்கள். இருந்தாலும் ஒரு திருமணம் என்றால் அவர்களையும் போய்க் கூப்பிட்டு வைக்கிறோம்.

இந்த மாயா உலகத்தில் உள்ள மனிதன் விடுபடுவதற்கு உரியவன் என்பதாலே வளைபயில் கீழ்கடல் என்று சுட்டிக் காட்டுகிறார். ஊனம் நீங்கிய பின்

சங்கு கடலை விட்டு வெளியே வந்துவிடும். வந்த பின்பு அது வளையாகப் பயன்படுகிறது. அதைச் சுட்டாலும் கரியாகாது. உயர்ந்த பொருளாகக் கருது கின்றனர் அதை. அதனால்தான் சங்கினால் நீரெடுத்து இறைவனை நீராட்டுகின்றார்கள். உயர்ந்த நட்பிற்கு அடையாளமாகச் சங்கைத்தான் சொல்வார்.

**"கெட்டாலும் மேன்மக்கள் மேன்மக்களே சங்கு**
**சுட்டாலும் வெண்மை தரும்" (மூதுரை–4)**

என்ற பாடலால் அறியலாம். மேன்மக்களாவதற்குள் உரியவர்கள் நீங்கள். ஆதலால் நீங்கள் கீழ்மக்களாகவே இருந்துவிடாதீர்கள், என்று இந்த வரியினால் உணர்த்தினார்.

நுகத்தடி – இதைத் திருமண காலங்களில் கணக்குப் பிள்ளை மரபைச் சார்ந்தவர்கள்தான் பயன்படுத்து கிறார்கள். வேறு யாரும் பயன்படுத்துவதாக எனக்குத் தெரியவில்லை. இதன் காரண காரியத்தைப் பற்றிக் கேட்டால், இதை நாங்கள் மரபாக நடத்திக் கொண்டு வருகிறோம், அவ்வளவுதான் என்று சொல்லுவார்கள். ஒரு ஆணும் பெண்ணும் திடீரென்று ஒன்று சேர்ந்துவிட முடியாது. நாமாக ஏற்படுத்திக் கொள்ளவும் முடியாது. இறைவன், நாம் செய்த புண்ணியத்தின் பயனாக, தெய்வீக நலம் பொருந்திய பெண்ணாக வாய்க்கின்றான். வினையின் திரட்டாக இருந்தால் வேறு வகையாக வந்து வாய்க்கின்றது.

வான் முகம் என்றால், அருள் வெளியிலே இருக்கின்ற முகம். அங்கே இருக்கின்றது உங்களுக்கு வழி. இந்த வழியை உணர்ந்தவர் "வான் கலந்த மாணிக்க வாசகர்". **ஊனைவிட்டால், தூய்மையாகி வானாகலாம் என்பதை இதன் மூலம் உணர்த்துகின்றார்.** வான்வெளி என்பதை வான் முகம் என்று போட்டிருக்கிறார். அது ஒரு

பரிபாஷை. மேல்கடல் என்பது அருள்வெளி. தூய்மையாகிவிட்டால் நீங்கள் அருள்வெளியில் கலந்து கொள்ளலாம். யார் உதவியும் தேவையில்லை. தூய்மை -யில்லாதபோதுதான் யாராவது வந்து நமக்கு உதவி செய்யவேண்டும்.

கயிலையில் சித்தர்கள், முத்தர்கள், பக்தர்கள், திருமால், பிரம்மா, உருத்திரன், தேவாதி தேவர்கள், அடியார்கள் ஆகியோர் செழுங்கிளையாகத் தங்கியிருக் -கின்றார்கள். பெருங்கிளைகள் இவர்கள். நமக்கும் கிளைகள் இருக்கின்றார்கள். அவனுக்குக் கிளைகளாக கைலையில் சனகாதி முனிவர்கள், தொண்டர்கள், நந்தி முதலான பூத கணங்கள் இவர்கள் எல்லாம் இருக்கிறார்கள். இவர்களுக்கும் மேலாகச் சிறந்தடியார் கூட்டங்கள் இருக்கின்றன. இவர்கள் மத்தியில் கலந்து உறவாடிக் கொண்டிருக்கின்ற இறைவனைப் பிரிக்க முடியாது. அப்படிப் பிரித்துக் கொண்டு வருவது என்றால் சாதாரண காரியமல்ல. அப்படி அவன் பிரிந்து என்னிடம் வந்ததால் நான் செய்த புண்ணியத்தை எண்ணி மகிழ்கின்றேன். இப்படி நீங்கி வந்தவன் என் அறியாமையை நீக்கினான். அதற்குக் காரணம் என் உழைப்பு. ஆக இந்த உழைப்பே தெய்வம் என்று உணர்ந்தேன்.

இதில் இன்னொரு குறிப்பு என்னவென்றால், மலமாயை அற்ற இடம் வான். மலமும், மாயையும் உள்ள இடம் கீழ்க்கடல். அற்ற இடத்திலிருந்து அறாத இடத்திற்கு இறைவன் இறங்கி வருவதென்பது இயலாத காரியம். அப்படி இறங்கி வர இயலுமானால்அதற்கு ஏதோ காரணம் இருக்கவேண்டும்.

சிவபுண்ணியம் என்றால் இப்படி செய்யவேண்டும். 'பன்னாள் அழைத்தால் இவன் அழைப்பொழியான் என்று தன்னால் வருமே" அப்படிப் பலகாலும் அழைக்க

வேண்டும். இரண்டு நாளைக்குச் சிவ சிவ என்று சொல்லிக் கொண்டிருந்து விட்டு, மூன்றாம் நாள் அதை விட்டுவிடுவதல்ல. ஒரு நாள், இரண்டு நாள் அல்ல, பன்னாள் அழைக்க வேண்டும்.

"உண்ணினும், பசிப்பினும், உறங்கினும்," நினைக்க வேண்டும். இதனைத் திருஞானசம்பந்தப் பெருமான் "இடரினும் தளரினும்..." என்ற பாடலில் மிக அருமையாக விளக்குவார். எந்த நிலையிலும் அவனைத் தொழுதல் வேண்டும்.

**சிவமானது நாம் எப்போது அழைப்போம் என்று எதிர்பார்த்துக் கொண்டிருக்கின்றது. எப்போது தன்னலத்தை நீக்கிப் பணி செய்கிறான் என்று பார்த்துக் கொண்டேயிருக்கின்றது.** அப்படிச் செய்தால் கருணை -யால் ஏற்றுக் கொண்டுவிடும். அது சாதி, இனம், மொழி, நிறம் என்று வேற்றுமை பார்ப்பதில்லை. தன்னலமற்ற சேவையே இறைவனை நம்மிடம் கொண்டு சேர்க்கும் மந்திரம். பற்றற்ற சேவை செய்யுமாறு என்னைத் தகுதியாக்கி, அந்தத் தகுதியில் தன்னைக் கொடுத்தது. இதனை, "தந்தது உன் தன்னை, கொண்டது என் தன்னை, சங்கரா, யார்கொலோ சதுரர்" என்று நயமாகச் சொல்லுவார்.

மணிவாசகப் பெருமான், கேட்பது ஆணவத்தோடு கேட்பது போல் தோன்றும். நுணுகிப் பார்த்தால், இந்த இரண்டையும் செய்த சதுரன் நீதான், நானில்லை என்ற பொருள் விளங்கும். கொண்டதும் நீயே, கொடுத்ததும் நீயே, ஏன்? என்னால் உன்னைக் கொள்ளவும் முடியாது, என்னைக் கொடுக்கவும் முடியாது, என்ற இயலாமையைச் சுட்டிக் காட்டி, சதுரப்பாடு உடையவன் நீதான் என்பதை நயம்பட உரைக்கின்றார். இந்த இரண்டையும் நீ செய்ய வேண்டுமானால் என்னிடத்தில் என்ன தகுதி

விளைந்திருக்கிறது என்று பார்த்தால், அந்தத் தகுதியையும் தந்தவன் நீயே.

சிவ புண்ணியமாகிய தன்னலமற்ற சேவையைச் செய்தோம். பிறகு அவனையே நினைத்து, அவன் நினைவாகவே செயல்களைச் செய்தோம். அவனையே பலகாலும் நினைந்து அழைத்தோம். இப்படி அவனையே நினைத்துக் கொண்டிருக்கும்போது பிற தெய்வங்களை எண்ணுகின்ற ஒரு நிலை வரும். 'உள்ளேன் பிற தெய்வம் உன்னை அல்லால் எங்கள் உத்தமனே' என்று உறுதி சொல்வார்கள். பிற தெய்வம் என்பது, சிறு தெய்வங்களைச் சின்னச் சின்ன நலங்களுக்காக வணங்குவது. நவக் கிரகங்களை வணங்குவர். இந்த ஒன்பது கிரகங்களும் அவனிடம் கையேந்திக் கொண்டு நிற்கின்றன. இவர்கள்போய் அவர்களிடம் கையேந்திக் கொண்டு நிற்கிறார்கள். அவன் கொடுத்தால்தான் இந்தச் சிறு தெய்வங்களால் கொடுக்க முடியும். இவர்களுக்குச் சுய அதிகாரம கிடையாது. முழு அதிகாரமும் இறைவன் கையில்தான். சிறு தெய்வங்கள், அவன் ஆணை வழி நின்று, நமக்கு நலங்களை வழங்கிக் கொண்டு இருக்கின்றன. இறைவனும் அளவாகத்தான் எதையும் கொடுப்பான். உழைப்பில் அளவுக்குத்தான் கொடுப்பான். அதிலும் கஞ்சத்தனமாகக் கொடுப்பவர்கள் சிறு தெய்வங்கள். **இவர்களையெல்லாம் கடந்து அப்படியே, கேட்டது கேட்ட வண்ணம், அளிக்கக் கூடிய வர்கள் அடியார்கள்தாம்.** அளவிறந்து வழங்கக் கூடிய வர்கள் அடியார்கள்தான். அவர்கள் நாயன்மார்களாக இருந்தாலும்சரி, ஆழ்வாராதிகளாக இருந்தாலும் சரி. அடியவர்கள் அளவிறந்து வழங்கும் ஆற்றல் உடையவர்கள். ஏதோ இப்படிச் சேவை புரிந்து வந்த சில ஆன்மாக்களுக்கு வீடுபேறு அளிப்பான் இறைவன்.

ஆனால் திருஞானசம்பந்தப் பெருமான் கொள்ளை கொள்ளையாக வீடுபேறு அளித்தவர். இறந்துபட்டால் மீண்டும் பிறவியைத்தான் தருவான் இறைவன். ஆனால் முதலைவாயில் போன குழந்தையை அப்படியே மீட்ட பெருமை சுந்தரருக்குத்தான் உண்டு. ஆண்டவனை விட அடியார்கள் ஆற்றல் படைத்தவர்கள். அவர்களை இறைவனும் ஏன் இப்படிச் செய்தீர்கள் என்று கேட்கமாட்டான்.

அதனால் சிறு தெய்வ வழிபாடு கூடாது. சிறு தெய்வ வழிபாடு என்ன என்று உங்களுக்கு விளக்கினால்தான் தெரியும். சிவன் கோயிலுக்குப் போகின்றீர்கள். அங்கே போய், "சிவபெருமானே, எனக்குப் பதவி உயர்வு கொடு, எனக்குப் பணம் கொடு என்று பயன் கேட்டு சிவனை வணங்கினால் அது சிறு தெய்வ வழிபாடுதான். **பயன் கேட்டு எந்தத் தெய்வத்தை வணங்கினாலும் அது சிறு தெய்வ வழிபாடாகிவிடும். பயன் கேளாமல் ஒரு அம்மன் கோயிலை வணங்கினாலும், ஐய்யனாரப்பனை வணங்கினாலும் அது** முழுமுதல் தெய்வ வழிபாடு என்று ஆகிவிடும். பயன் கருதாமல் வழிபாடு செய்துவருவதுதான் சிவ யோகம். சிவ தர்மம், சிவ ஞானம். அப்படி நீங்கள் ஏதேனும் வேண்ட வேண்டும் என்றால், உலகுக்கு நலம் வேண்டும் என்று எண்ணிக் கேளுங்கள். நாலுபேருக்கு நல்லது நடக்கும்போது நமக்கும் நலம் தானே விளையும்! அப்படி வாழ வேண்டும் என்பதை இந்தப் பாடல் நமக்குச் சுட்டிக் காட்டியது.

என்னுடைய பற்றற்ற உழைப்பு அந்தப் பரம்பொருளை என்னிடம் அழைத்து வந்து என்னுடைய அறியாமையை நீக்கி என்னை வாழ்வித்தது என்று எண்ணி, அந்த உழைப்பை மகிழ்ந்ததுதான் கலந்து

கலத்தல். உழைப்பில் மகிழ்ந்து, உறுதிப் பொருளில் கலந்ததுதான் கலத்தல் என்பது.

இந்த ஆறுநாள் விரிவுரையில் திருக்கோவையாரை ஓரளவுக்கு உணர்ந்து கொள்ளும் வாய்ப்புக் கிடைத்தது. திருக்கோவையார் முழுமையும் உணர்ந்து கொள்ள இந்தக் கால அளவு போதாது.

"பானைச் சோற்றுக்குப் பருக்கை பதம்" என்பது போல, ஆறுநாள் ஆறு பாடலை எடுத்துக்கொண்டு பார்த்தோம். ஆகையால் அன்பர்கள் இந்த விளக்கத்தைக் கொண்டு நூலை ஓதி உணர்ந்து கொள்ளுவார்கள் என்று எண்ணி, மணிவாசகப் பெருமானுடைய திருவடியை வாழ்த்தி வணங்கி, நிறைவு செய்கின்றேன்.

திருச்சிற்றம்பலம்.

